بسم الله الرحمن الرحيم

# வெற்றி பெற்ற பிரிவினர்

# الفرقة الناجية

அரபு மூலம்

**முஹம்மத் இப்னு ஜமீல் ஜைனூ**

தமிழ் மூலம்

**அப்துல் வதூத் ஜிப்ரி**



# வெற்றி பெற்ற பிரிவினர்

அரபு மூலம்

**முஹம்மத் இப்னு ஜமீல் ஜைனூ**

தமிழ் மூலம்

**எம்.எஸ். அப்துல் வதூத் ஜிப்ரி**

வெளியிட்டோர்

**அகில இலங்கை ஜம்இய்யத் அன்ஸார் ஸுன்னத் முஹம்மதிய்யா**

**இலங்கை**

# நூல் விபரம்..


நூல் பெயர் : **வெற்றி பெற்ற பிரிவினர்**

ஆசிரியர் : **முஹம்மத் ஜமீல் இப்னு ஜைனூ**

தமிழ் மூலம் : **எம். எஸ். அப்துல் வதூத் ஜிப்ரி**

பக்கம் : **237**

வெளியீடு : **இஸ்லாமிய நூலகம்**

நன்றி : www.qurankalvi.com, www.islamiyapuram.blog


• • • • • • • • • • • • • • • • • • • • • • • • • • • • • • • • • • • • • • •

புத்தகத்தின் வரிகளுக்கு மத்தியில் ﷺ عليه السلام رضي الله عنه رضي الله عنها رضي الله عنهم رضي الله عنهما رحمه الله رحمهم الله இந்த வடிவில் சில அரபு வாக்கியங்களைப் பார்ப்பீர்கள். இவை பிரார்த்தனைகள்.

ﷺ இது நபிகளாரின் பெயரை அடுத்து வரும். 'ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்' அல்லாஹ்வின் அருளும் சாந்தியும் அவர்கள் மீது உண்டாவதாக எனப் பொருள்.

عليه السلام இது நபிகளாருக்கு முந்தைய தூதர்கள், நல்லோர்களின் பெயரை அடுத்து வரும் 'அலைஹிஸ்ஸலாம்' அவர்களுக்கு சாந்தி உண்டாவதாக.

رضي الله عنه இது நபித் தோழர்களின் பெயர்களை அடுத்து வரும். 'ரழியல்லாஹு அன்ஹு' அவர் மீது அல்லாஹ் திருப்தியடைவானாக.

رضي الله عنها இது நபியின் மனைவியர் மற்றும் நபித்தோழியரின் பெயரை அடுத்து வரும். 'ரழியல்லாஹு அன்ஹா' அவர் மீது அல்லாஹ் திருப்தியடைவானாக.

رحمه الله இது மரணித்துவிட்ட அறிஞர்கள், பெரியவர்களின் பெயர்களுக்குப் பின் வரும். 'ரஹிமஹுல்லாஹ்' அவர் மீது அல்லாஹ் கருணை காட்டுவானாக.

# தலைப்புகள்

# முன்னுரை

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

அல்குர்ஆன், அஸ்ஸுன்னாவின் நிழலில் வெற்றிபெற்ற பிரிவினர்.

புகழனைத்தும் அல்லாஹ் ஒருவனுக்கே! அவனையே புகழ்கின்றோம். அவனிடமே பிழை பொறுக்கத் தேடுகிறோம். எம்மில் தோன்றும் தீமைகளை விட்டும், எமது செயல்களில் ஏற்படும் கெடுதிகளை விட்டும் அல்லாஹ்விடமே பாதுகாவல் தேடுகிறோம். எவனை அல்லாஹ் நேர்வழிப் படுத்துகிறானோ அவனை வழிதவறச் செய்யவும், எவனை அவன் வழிகேட்டில் விட்டு விடுகிறானோ அவனை நேர்வழிப் படுத்தவும் எவராலும் முடியாது. அல்லாஹ்வையன்றி வேறெந்த இரட்சகனுமில்லை என்றும், முஹம்மத் ﷺ அவர்கள் அல்லாஹ்வின் அடியாரென்றும் அவனுடைய தூதரென்றும் நான் சான்று பகர்கிறேன்.

இந்நூல் முக்கியமானதோர் ஆய்வு நூலாகும், பல பிரிவுகள் கொண்டதாகவும் அமைந்துள்ளது. பரிசுத்தமான தௌஹீ (ஏகத்துவத்) தின் அடிப்படைக் கொள்கையின் பக்கமும், உலகில் பல பாகங்களிலும் வாழும் முஸ்லிம்களில் அதிகமானவர்களிடம் பரவியிருக்கும் ஷிர்க்(இணைவைப்பதி) லிருந்து அவர்களைத் தூரப்படுத்துவதாகவும் இந்நூல் அழைப்பு விடுக்கின்றது. இந்த ஷிர்க் தான் கடந்த கால சமுதாயங்களின் அழிவுக்குக் காரணமாயிருந்தது.

தற்கால உலகின் துர்ப்பாக்கியத்துக்குக் காரணமும், குறிப்பாக உலக முஸ்லிம்களின் இழிநிலைக்குக் காரணமும் இதுவாகும். இவர்கள் பல

துன்பங்கள், யுத்தங்கள் சோதனைகளும் போன்றவற்றைச் சந்திப்பதெல்லாம் இதனாலேதான்.

இந்நூலிலுள்ள ஆய்வுகளும், அதனுல் அமைந்துள்ள ஒவ்வொரு தலைப்புகளும் நபி ﷺ அவர்களுடைய ஹதீஸ்களின் அடிப்படையில் செயல்பட்டு, வெற்றி பெற்ற ஒரு கூட்டத்தாரின் அடிப்படைக் கொள்கை யைத் தெளிவு படுத்துவதாக அமைந்துள்ளன. இதில் இடம்பெற்றுள்ள அம்சங்கள் அனைத்தும் முஸ்லிம்களுக்குப் பயனளிப்பதாக அமைய வேண்டுமென வல்ல அல்லாஹ்வைப் பிரார்த்திக்கிறோம்.

**– முஹம்மத் ஜமீல் ஜைனூ**

**விரிவுரையாளர் தாருல் ஹதீஸில் கைரிய்யா**

**மக்கா**

# தமிழாக்கியோன் உரை

புகழனைத்தும் அல்லாஹ்வுக்கே! ஸலவாத்தும், ஸலாமும் அவனது ரஸூல் முஹம்மத் ﷺ அவர்கள் மீதும், அவர்களது குடும்பத்தினர் தோழர்கள் அனைவர் மீதும் உண்டாவதாக!

முஹம்மத் இப்னு ஜமீல் ஜைனூ அவர்களது 'அல்-பிர்கதுந் நாஜியா' (AL-FIRKATHUN NAJIYA) என்ற அரபி நூலை வாசிக்கும் அரிய வாய்ப் பொன்று கிட்டியது. அல்ஹம்துலில்லாஹ்!

அவர் தனது நூலை 54 சிறு தலையங்கங்கள் கொண்டதாக அமைத்திருப்பது, வாசிப்போருக்கு விருவிருப்பையும் உற்சாகத்தையும் ஊட்டுவதாக அமைந்துள்ளது. ஈமானை வலிறுத்துவதாகவும், சமூகத்தில் மலிந்துள்ள ஷிர்க், பித்அத், மூட நம்பிக்கைகள் போன்றவற்றைத் தடை செய்வதாகவும் அவை அமைந்துள்ளன.

அவர் ஒவ்வொரு அம்சத்துக்கும் குர்ஆனையும் ஹதீஸையும் ஆதாரமாகக் காட்டியுள்ளார். ஹதீஸைப் பொறுத்தமட்டில் அதன் ஆதாரக் கிரந்தங்களைக் காட்டும் போது, புகாரி, முஸ்லிமல்லாத ஏனைய கிரந்தங்களின் ஆதாரங்களுக்குப் பின்னால் 'ஸஹீஹ்' (சரியானது) 'ஹஸன்' (நல்லது) என்ற வார்த்தையைக் குறித்துக் காட்டுகின்றார்.

ஏனென்றால் அக்கிரந்தங்களில் ஸஹீஹ் அல்லாதவைகளும் உண்டு. அதனால், அவற்றிலுள்ள ஸஹீஹ்களை மட்டுமே தனது நூலுக்கு ஆதாரமாகத் தேர்ந்தெடுத்துள்ளார். ஆனால் புகாரி, முஸ்லிமைப் பொறுத்த மட்டில் அவற்றில் ஸஹீஹானவைகள் மட்டுமே இருப்பதால் ஸஹீஹ் என்ற வார்த்தையைக் குறிப்பிடாமல் வெறுமனே 'புகாரி, முஸ்லிம்' என்று மட்டும் குறிப்பிட்டுள்ளார். இவ்விதமாகவே ஹதீஸ்களின் ஆதாரங்களைத்

தனது நூலில் குறிப்பிடுவதாக 'ளஈபான' மவுளூஆன ஹதீஸ்கள் என்ற 49 ம் தலையங்கத்தில் ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

மேற்படி நூலை தமிழில் மொழிபெயர்த்துத் தமிழ் பேசும் மக்களுக்கு பயன்பெறச் செய்ய வேண்டுமென்ற ஆவலைப் பூர்த்திச் செய்யும் வகையில் எனது இம்மொழிபெயர்ப்பைப் பிரசுரம் செய்ய 'அகில இலங்கை ஜம்இய்யத் அன்ஸார் ஸுன்னத் முஹம்மதிய்யா' முன்வந்துள்ளது எனக்கு மகிழ்ச்சியைத் தருகின்றது. இவ்வியக்கம் இஸ்லாம் மார்க்கத்துக்காகச் செய்யும் இப்பணியையும், இதல்லாத ஏனைய பணிகளையும் அல்லாஹ் அங்கீகரித்து அருள் புரிவானாக! ஆமீன்!

**- அப்துல் வதூத் முஹம்மத் ஸாலிஹ்**



# வெற்றி பெற்ற பிரிவினர்

وَاعْتَصِمُوْا بِحَبْلِ اللهِ جَمِيْعًا وَّلَا تَفَرَّقُوْا

**1. "(மூமின்களே!) அல்லாஹ்வுடைய கயிற்றை (குர்ஆனை) நீங்கள் பலமாகப் பற்றி பிடியுங்கள். (உங்களுக்குள்) பிரிந்து விடாதீர்கள்" [அல்குர்ஆன்: 3:103] என்று அல்லாஹ் கூறுகின்றான்.**

وَلَا تَكُوْنُوْا مِنَ الْمُشْرِكِيْنَ
مِنَ الَّذِيْنَ فَرَّقُوْا دِيْنَهُمْ وَكَانُوْا شِيَعًا كُلُّ حِزْبٍ بِمَا لَدَيْهِمْ فَرِحُوْنَ

**2. "இணைவைத்து வணங்குவோ(ஷிர்க் வைப்போ)ரில் நீங்களும் ஆகி விடாதீர்கள். அவர்கள் தங்களுடைய மார்க்கத்தில் பிரிவினையை உண்டு பண்ணிப் பல பிரிவினர்களாகப் பிரிந்து விட்டனர். அவர்கள் ஒவ்வொரு வகுப்பாரும் தங்களிடமுள்ள (தவறான)தைக் கொண்டு சந்தோசப்படுகின்றனர்" [அல்குர்ஆன்: 30:31,32] என்று மூமின்களை நோக்கி அல்லாஹ் கூறுகிறான்.**

3. நபி ﷺ அவர்கள் பின்வருமாறு கூறுகின்றார்கள்: 'அல்லாஹ்வை பயந்து கொள்ளுமாறும், உங்களிடமுள்ள தலைவருடைய கட்டளைகளுக்குச் செவிதாழ்த்திக் கீழ்படியுமாறும் நான் உங்களுக்கு கட்டளையிடுகிறேன். அந்தத் தலைவர் அபிசீனியாவைச் சேர்ந்த ஓர் அடிமையாக இருப்பினும் சரியே. எனக்குப் பின் எவர் வாழ்வாரோ அவர் அதிகமான கருத்து முரண்பாடுகளைக் காண்பார். அப்பொழுது நீங்கள் எனது ஸுன்னத்தை (நடைமுறையை) யும், குலபாஉர் ராஷிதீன் (நேர்வழி நடக்கும் கலீபாக்) களுடைய ஸுன்னத்தையும் பின்பற்றுவது உங்கள் மீது கடமையாகும். அதனை கடைவாய்ப் பற்களினால் கௌவிப் பிடியுங்கள். (மார்க்கத்தில்) புதிதாகத் தோன்றுவனற்றில் மிக எச்சரிக்கையாய் இருங்கள். ஏனெனில்

புதிதானவை அனைத்தும் பித்அத்துகளாகும். பித்அத்துகள் அனைத்தும் வழிகேடாகும்.' **[*ஆதாரம்: திர்மிதி*]**

இந்த ஹதீஸ் ஸஹீஹ் என்பதாக திர்மிதி ﵀ அவர்கள் கூறுகிறார்கள்.

ஆதாரமற்றவை அனைத்தும் சந்தேகத்துக்கு உரியனவாகும். கருத்து வேற்றுமை ஏற்படுமிடத்தில், ஆதாரமுள்ளதை எடுத்துக் கொண்டு சந்தேக மானதை விட்டுவிடுமாறு மேற்படி ஹதீஸ் வலியுறுத்துகின்றது. அத்துடன் மார்க்கமென்ற பெயரில் ஏற்படுத்தப்பட்ட புதிதான செயல் முறைகள் அனைத்தும் வழிகேடு என்பதாக மேற்படி ஹதீஸ் கூறுகின்றது. ஆதார மற்ற ஒரு செயல் பயபக்தி ஏற்படுவது போல் உருவமைத்துக் காட்டப் பட்டாலும், இடையில் புகுத்தப்பட்டது என்ற காரணத்தால், அது வழிகேடு என்பதில் எந்தவித சந்தேகத்துக்கும் இடமில்லை. **(மொழிபெயர்ப்பாளர்)**

4. 'அறிந்து கொள்ளுங்கள் உங்களுக்கு முன்னிருந்த யூத, கிறிஸ்தவர்கள் 72 கூட்டங்களாகப் பிரிந்தார்கள். எனது உம்மத்து 73 கூட்டங்களாகப் பிரிவார்கள். 72 கூட்டங்கள் நரகில் (பிரவேசிப்பார்கள்) ஒரு கூட்டத்தினர் மட்டுமே சுவர்க்கத்தில் (பிரவேசிப்பார்கள்). அந்தக் கூட்டம்தான் (ஸுன்னத் வல்) ஜமாஅத்தாகும்' நபி ﷺ அவர்கள் கூறினார்கள். **[*ஆதாரம்: அஹ்மத்*]**

வேறு சிலரின் மற்றொரு ரிவாயத்தில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது.

'(ஒரே) ஒரு கூட்டத்தைத் தவிர அவர்கள் அனைவரும் நரகம் பிரவேசிப்பார்கள். நானும் எனது ஸஹாபாக்களும் எந்த வழியில் இருக்கின்றோமோ, அவ்வழியில் இருப்பவர்கள் தான் அந்த ஒரு கூட்டமாகும்' என நபி ﷺ அவர்கள் கூறினார்கள்'.

**[*ஆதாரம்: திர்மிதி, (ஸஹீஹ்)*]**

சுவர்க்கம் பிரவேசிப்பது ஒரு கூட்டம் மட்டுமே என்றும் ஏனைய 72 கூட்டங்களும் நரகமே பிரவேசிப்பார்கள் என்றும் மேற்காட்டிய ஹதீஸ்

கூறிற்று. இந்த ஹதீஸ் வேறு சில கிரந்தங்களில் சற்று விரிவாகக் காணப் படுகின்றது. சுவர்க்கம் செல்லும் கூட்டத்தின் அடையாளமாவது, நபி ﷺ அவர்களையும், ஸஹாபாக்களையும் மட்டுமே பின்பற்றுவார்கள். எவர்கள் தமது மார்க்க விஷயங்களில் எல்லா நிலைகளிலும் நபியவர்களையும், ஸஹாபாக்களையும் பின்பற்றுகின்றவர்களாக இருக்கின்றனரோ, அவர்கள் தான் சுவர்க்கம் செல்லும் 73வது கூட்டத்தினராவர். **(மொழிபெயர்ப்பாளர்)**

5. 'ஒரு தினம் நபி ﷺ அவர்கள் தனது கையினால் நேரான ஒரு கோடுகீறினார்கள். பின்பு 'இதுதான் நேரான அல்லாஹ்வின் பாதையாகும்' என்று கூறினார்கள். அக்கோட்டிலிருந்து அதன் வலமும் இடமுமாக பல கோடுகளைக் குறுக்காகக் கீறிவிட்டு, இவையனைத்தும் பல வழிகள்; இவை ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு ஷைத்தான் இருந்துகொண்டிருக்கிறான். அவற்றில் அந்த ஷைத்தான்கள் ஒவ்வொன்றும் இருந்துகொண்டு, அதனைத் தன் வழியின் பால் அழைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று கூறிவிட்டுப் பின்வரும் அல்குர்ஆன் வசனத்தை ஓதினார்கள்.

وَاَنَّ هٰذَا صِرَاطِىْ مُسْتَقِيْمًا فَاتَّبِعُوْهُ ۚ وَلَا تَتَّبِعُوْا السُّبُلَ فَتَفَرَّقَ بِكُمْ عَنْ سَبِيْلِهٖ ؕ ذٰ لِكُمْ وَصّٰىكُمْ بِهٖ لَعَلَّكُمْ تَتَّقُوْنَ

**(அல்லாஹ் கூறுகிறான்:) "நிச்சயமாக இதுதான் எனது நேரான வழி. நீங்கள் அனைவரும் இதனையே பின்பற்றுங்கள். (நேரான ஒரு தனி வழிக்குமாறான) பலவழிகளைப் பின்பற்றாதீர்கள். அவை அவனு(அல்லாஹ்வு)டைய பாதையை விட்டும், உங்களைத் திருப்பிப் பல பிரிவுகளாகப் பிரித்து விடும். நீங்கள் அனைவரும் உள்ளச்சம் உடையவர்களாக ஆகுவதற்காக இதனைக்கொண்டே அல்லாஹ் உங்களுக்கு வஸிய்யத் செய்து (நற்புத்தி) கூறுகிறான்".**

[அல்குர்ஆன்: 6:153]

*[அறிவிப்பவர்: இப்னு மஸ்வூத் رضي الله عنه*
*ஆதாரம்: அஹ்மத், நஸாஈ, ஹாகிம்]*

6. நாம் அனைவரும் ஒன்றுபட்டு சங்கையான குர்ஆனைப் பற்றிப் பிடிக்குமாறும், தமது மார்க்கத்தில் பல பிரிவினர்களாகப் பிரிந்த இணைவைப்பவர்களில் நாம் ஆகிவிடாதிருக்குமாறும் மேற்காட்டிய வசனத்தில் அல்லாஹ் கட்டளையிடுகிறான்.

யூதர்களும், கிறிஸ்தவர்களும் பல பிரிவுகளாகப் பிரிந்தனரென்றும், முஸ்லிம்கள் அதனைவிட அதிகமாகப் பிரிவார்களென்றும், இவர்களில் ஒரு கூட்டத்தைத் தவிர ஏனையவர்கள் குர்ஆனை விட்டும், நபியவர்களது ஸுன்னாவை விட்டும் தூரப்படுவதனால் நரகம் பிரவேசிப்பதற்குக் காரணமாக அமைகிறது என்றும் நபி ﷺ அவர்கள் எமக்கு முன்னறிவிப்புச் செய்துள்ளார்கள்.

அப்பிரிவுகளிலிருந்து வெற்றிபெற்றோர் ஒரேயொரு கூட்டத்தினர் மட்டுமே ஆவார்கள். இக்கூட்டம் மட்டுமே சுவர்க்கம் பிரவேசிக்கும். இவர்கள் குர்ஆனையும், ஸுன்னாவையும், நபித்தோழர்களின் நடைமுறையையும் உறுதியாகப் பற்றிப் பிடித்தவர்கள் ஆவார்கள்.

7. வெற்றிபெற்ற கூட்டம் என்றால், அவர்கள் தான் அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தினர் ஆவார்கள். அஹ்லுஸ்ஸுன்னா (ஸுன்னா உடையோர்) என்ற இக்கூட்டத்துக்கு அஹ்லுல் ஹதீஸ் (ஹதீஸ் உடையோர்) என்ற மற்றொரு பெயரைத் தவிர வேறெந்தப் பெயரையும் கூறுவதற்கில்லை என்று முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானிய்யி ؒ அவர்கள் தனது 'அல்குன்யா' என்ற நூலில் கூறியுள்ளார்கள்.



# வெற்றி பெற்ற பிரிவினரின் வழி

1. வெற்றிபெற்ற கூட்டத்தினர், தமது வாழ்க்கையில் நபி ﷺ அவர்களின் வழிமுறையையும், அவர்களுக்குப் பின்னால் அவர்களது தோழர்களது வழிமுறையையும் பின்பற்றக்கூடியவர்களாக இருப்பர். இது அல்லாஹ் தனது ரஸுலின் மீது அருளிய அல்குர்ஆனும், நபி ﷺ அவர்கள் ஸஹீஹான ஹதீஸ்கள் மூலம் தனது தோழர்களுக்குத் தெளிவுப்படுத்திக் காட்டியதுமாகும். இவ்விரண்டையும் உறுதியாகப் பற்றிப்பிடிக்குமாறு நபி ﷺ அவர்கள் முஸ்லிம்களுக்குக் கட்டளை இட்டிருக்கிறார்கள்.

'உங்களிடத்தில் நான் இரணடை விட்டுச் செல்கிறேன். அவற்றைப் பற்றிப்பிடித்துப் பின்பற்றும் காலமெல்லாம் நீங்கள் வழிதவற மாட்டீர்கள். அவையாவன அல்குர்ஆனும் எனது ஸுன்னாவுமாகும். எனக்கு 'ஹவுளுல் கவுதர்' என்னும் தடாகத்தில் அவ்விரண்டும் நீர் புகட்டும் வரை, அவை ஒன்றை விட்டு மற்றொன்று பிரியாது' என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். **[ஆதாரம்: ஹாகிம் (ஸஹீஹ்)]**

2. வெற்றிபெற்ற கூட்டத்தினர் தம்மிடம் பிணக்குகளோ, அபிப்பிராயப் பேதங்களோ ஏற்படும் போது பின்வரும் மறைவசனத்துக்கு அமைவாக அல்லாஹ்வுடைய வேதமான குர்ஆனின் பக்கமும், அவனது ரஸுலுடைய ஸுன்னாவின் பக்கமும் திரும்பி விடுவார்கள்.

فَاِنْ تَنَازَعْتُمْ فِىْ شَىْءٍ فَرُدُّوْهُ اِلَى اللّٰهِ وَالرَّسُوْلِ اِنْ كُنْتُمْ تُؤْمِنُوْنَ بِاللّٰهِ وَالْيَوْمِ الْاٰخِرِ‌ؕ ذٰ لِكَ خَيْرٌ وَّاَحْسَنُ تَاْوِيْلًا

**“நீங்கள் ஏதேனுமொரு விவகாரத்தில் பிணங்கிக் கொண்டால், அதனை அல்லாஹ்வின் பாலும் அவனுடைய ரஸூலின் பாலும் மீட்டி விடுங்கள். நீங்கள்**

**அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்புகின்ற வர்களாக இருந்தால் (அவ்வாறு செய்யத்தவற மாட்டீர்கள்) இதுவே மிகச் சிறந்ததும், மிக்க அழகான முடிவுமாகும்." [அல்குர்ஆன்: 4:59]**

فَلَا وَرَبِّكَ لَا يُؤْمِنُوْنَ حَتّٰى يُحَكِّمُوْكَ فِيْمَا شَجَرَ بَيْنَهُمْ ثُمَّ لَا يَجِدُوْا فِىْٓ اَنْفُسِهِمْ حَرَجًا مِّمَّا قَضَيْتَ وَيُسَلِّمُوْا تَسْلِيْمًا

**"(நபியே!) உமது இறைவனின் மீது சத்தியமாக (மூமின்களாகிய) அவர்கள் தங்களுக்குள் ஏற்பட்ட சச்சரவில் உம்மை நீதிபதியாக அங்கீகரித்து, நீர் செய்யும் தீர்ப்பைத் தங்கள் மனங்களில் எத்தகைய அதிருப்தியுமின்றி அங்கீகரித்து முற்றிலும் வழிபடாத வரையில் அவர்கள் (உண்மை) மூமின்களாக ஆக மாட்டார்கள்" [அல்குர்ஆன்: 4:65]**

3. வெற்றிபெற்ற கூட்டத்தினர், பின்வரும் மறை வசனத்துக்கமைவாக அல்லாஹ்வுடைய சொல்லையும், அவனது ரஸூலுடைய சொல்லையும் விட மேலாக வேறெவருடைய சொல்லுக்கும் முக்கியத்துமளிக்க மாட்டார்கள்.

يٰۤاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا لَا تُقَدِّمُوْا بَيْنَ يَدَىِ اللّٰهِ وَرَسُوْلِهٖ وَ اتَّقُوا اللّٰهَ اِنَّ اللّٰهَ سَمِيْعٌ عَلِيْمٌ

**"மூமின்களே! நீங்கள் அல்லாஹ்வுக்கும், அவனுடைய ரஸூலுக்கும் முன்பாக (பேசுவதில்) முந்திக் கொள்ளாதீர்கள். (இவ்விஷயத்தில்) அல்லாஹ்வு க்குப் பயந்துகொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ் (யாவற் றையும்) செவியுறு வோனும், நன்கறிந்தோனுமாக இருக்கின்றான்" [அல்குர்ஆன்: 49:01]**

இப்னு அப்பாஸ் ﵄ அவர்கள் பின்வருமாறு எச்சரிக்கின்றார்கள்.

'உங்களுக்கு வானத்திலிருந்து கல்மாரி பொழியுமோ என நான் அஞ்சுகிறேன்.' நானோ உங்களிடத்தில் (ஏதேனும் மார்க்க விவகாரம் பற்றி) 'அல்லாஹ்வுடைய ரஸூல் ﷺ அவர்கள் இன்ன விதமாகச் சொன்னார்கள்' என்று கூறுகிறேன். நீங்களோ, (அதுபற்றி) 'அபூபக்கர் ﵁

அவர்கள் சொன்னார்கள். உமர் ﵁ அவர்கள் சொன்னார்கள்' என்று கூறுகிறீர்கள்'.

நபி ﷺ அவர்களுடைய சொல்லுக்கு மாறாக வேறெவருடைய சொல்லுக் கேனும் முக்கியத்துவம் அளிப்பது எவ்வளவு பயங்கரமானது என்பதை மேற்காட்டிய இப்னு அப்பாஸ் ﵁ அவர்களின் எச்சரிக்கையைக் கொண்டு உணரலாம். இங்கு நபியவர்களின் சொல்லுக்குப் பொருந்துகின்ற நிலையில் கருத்து வெளியிடுவதைக் குறிக்காது என்பதை வாசகர்கள் கவனத்தில் கொள்ள வேண்டும். **(மொழிபெயர்ப்பாளர்)**

வெற்றி பெற்ற கூட்டத்தினர், தௌஹீதுக்கு முக்கியத்துவம் அளிப்பார்கள். அது எவ்வாறெனில், இன்பத்திலும் துன்பத்திலும் ஒன்றுபோல் வணக்கம் செலுத்தி அல்லாஹ்வுக்கு வழிபடல், துஆக்கேட்டல், உதவிகோரல், பாதுகாப்புக்கோரல், ஆபத்துக்கு அபயமிட்டழைத்தல், நேர்ச்சை செய்தல், தவக்குல் வைத்தல், (பாரம் சாட்டுதல்) அல்லாஹ் அருளியதைக் கொண்டு தீர்ப்பளித்தல் முதலான வற்றிலும் இவையல்லாத இதுபோன்ற ஏனைய வணக்கங்களிலும் அல்லாஹ்விடம் மட்டுமே கேட்பதன் மூலம் அவனை ஒருமைப் படுத்துதலாகும். இதுதான் சரியான இஸ்லாமிய ஆட்சியொன்றை நிறுவுவதின் அடிப்படையாகும்.

அதிகமான இஸ்லாமிய நாடுகளில் இடம் பெற்றிருக்கின்ற வெளிப்படையான ஷிர்க்குகளிலிருந்து முற்றாக விலகி இருப்பது அவசியமாகும். இதுதான் தௌஹீதின் நிலைபாடுமாகும். தௌஹீதை அலட்சியம் செய்யக்கூடிய எந்த ஒரு கூட்டத்துக்கும் (அல்லாஹ்வின்) உதவி கிட்டாது. அவர்கள் ரஸுல்மார்களையும், குறிப்பாக எங்களுக்காக அனுப்பப்பட்ட ரஸுலுல்லாஹி ﷺ அவர்களையும் முன்மாதிரியாகக் கொண்டு ஷிர்க்கின் வகைகளை எதிர்த்துப் போராட மாட்டார்கள்.

5. வெற்றிபெற்ற கூட்டத்தினர், தமது வணக்கங்களிலும், நடைமுறை களிலும், வாழ்க்கையின் ஏனைய விவகாரங்களிலும் ரஸுலுல்லாஹி ﷺ

அவர்களுடைய ஸுன்னாவை உயிர்ப்பிப்பார்கள். நபி ﷺ அவர்கள் பின்வருமாறு கூறியதற்கமைவாக அவர்கள் மக்களுக்கு மத்தியில் அபூர்வமானவர்களாகவே இருப்பார்கள்.

'இஸ்லாம் அபூர்வமாகவே ஆரம்பித்தது. எவ்வாறு ஆரம்பித்ததோ, அதே நிலைக்கு அது மீளும். அவ்வாறான காலத்திலுள்ள அபூர்வமான அம்மக்க ளுக்கு நல்வாழ்த்துக்கள் உண்டாகட்டும்' **[*ஆதாரம்: முஸ்லிம்*]**

மற்றொரு ஹதீஸில்,

'அபூர்வமான மக்களுக்கு நல்வாழ்த்துக்கள் உண்டாகட்டும். இவர்கள் மக்கள் வழி தவறியிருக்கும் காலத்தில் அவர்களை நெறிப்படுத் துவார்கள். **[*ஆதாரம்: அபூஅம்ருத் தானீ (ஸஹீஹ்)*]**

6. வெற்றிபெற்ற கூட்டத்தினர் அல்லாஹ்வுடைய சொல்லையும், அவனுடைய வஹியின்றி மார்க்கத்தைப் பற்றி சுயமாக எதனையும் பேசாத அவனது ரஸுலின் சொல்லையும் தவிர வேறெவருடைய சொல்லையும் கொண்டு பிடிவாதமாக இருக்க மாட்டார்கள். ரஸுலுல்லாஹி ﷺ அவர்களைத் தவிர வேறெந்த மனிதரும் பிழைவிடும் இயல்புடைய வர்களாகவே இருக்கின்றனர். அவர் மக்களுடைய கணிப்பைப் பொறுத்த மட்டில் அந்தஸ்தில் எவ்வளவு உயர்ந்து விட்ட போதிலும் சரியே! இதுபற்றிய நபி வாக்கு எவ்வாறு அமைந்துள்ளதென்று பாருங்கள்.

'ஆதமுடைய மக்கள் (மனிதர்கள்) அனைவருமே தவறிழைக்கும் சுபாவமுடையவர்கள். தவறிழைப்போரில் மிகச் சிறந்தவர்கள் பாவ மன்னிப்புக் கோரு(தவ்பாச் செய்)பவர்கள்' **[*ஆதாரம்: அஹ்மத் (ஹஸன்)*]**

நபி ﷺ அவர்களுக்குப் பின்னால் எந்த ஒரு மனிதருடைய சொல்லையும் ஏற்கவும் முடியும், மறுக்கவும் முடியும். ஆனால் நபி ﷺ அவர்களுடைய சொல்லைத் தவிர. (அதனை ஏற்றேயாக வேண்டும்) என்று இமாம் மாலிக் ﵀ அவர்கள் கூறினார்கள்.

7. வெற்றிபெற்ற கூட்டத்தினர் எப்பொழுதும் ஹதீஸுக்கு முக்கியத்தும் அளிப்பவர்களாக இருப்பர். அவர்களைப் பற்றி நபி ﷺ அவர்கள் பின்வருமாறு கூறுகிறார்கள்.

'எனது உம்மத்தில் ஒரு கூட்டத்தினர் உண்மையின் மீது இருந்துக் கொண்டே இருப்பார்கள். இவர்களுக்கு எவரேனும் சதி செய்தாலும் அல்லாஹ்வுடைய தீர்ப்பென்னும் மௌத்து வரும்வரையில் அவர்களுக்கு எந்தவிதத் தீங்கும் எவரும் செய்து விட முடியாது' **[*ஆதாரம்: முஸ்லிம்*]**

8. வெற்றிபெற்றோர், முஜ்தஹிதுகளான இமாம்களுக்கு (குறிப்பாக சில இமாம்களுக்கன்றி எல்லா இமாம்களுக்கும்) மதிப்பளிப்பவர்களாக இருப்பார்கள். அவர்களில் எந்த ஒரு தனி மனிதருடைய சொல்லை மட்டும் சரியெனக் கண்டு, அதில் பிடிவாதமாயிருக்க மாட்டார்கள். ஸஹீஹான ஹதீஸ்களின் ஆதாரத்தைக் கொண்டே இவர்கள் மார்க்கச் சட்டங்களை எடுப்பார்கள். இமாம்களின் இஜ்திஹாதுகளில், ஸஹீஹான ஹதீஸ்களுக்குப் பொருத்தமாக அமைகின்ற அனைத்தையும் எடுப்பார்கள்.

தமது இஜ்திஹாதுகளில், ஸஹீஹான ஹதீஸ்களுக்குப் பொருத்த மானவற்றை மட்டுமே எடுக்குமாறும், அதற்கு முரணாக அமைகின்ற வற்றை விட்டு விடுமாறும் தம்மைத் துயர்ந்தோர்களுக்கு மேற்கூறப்பட்ட இமாம்கள் வஸிய்யத்துச் செய்துள்ளனர்.

9. வெற்றிபெற்ற கூட்டம் நன்மையைக் கொண்டு ஏவி, தீமையை விட்டும் தடுக்கும். பித்அத்தான வழிகளையும், (முஸ்லிம்) சமுதாயத்தைக் கூறுபோட்டு, மார்க்கத்திலே புதுமைகளை ஏற்படுத்தி, நபிவழியையும், ஸஹாபாக்களின் வழியையும் விட்டுத் தூரமான நாசக்கார இயக்கங் களையும் அது வெறுக்கும்.

10. வெற்றிபெற்றோர், வெற்றி கிட்டுவதற்காகவும், அல்லாஹ்வின் அருளைக் கொண்டும், நபி ﷺ அவர்களது ஸபாஅத்தைக் கொண்டும், சுவர்க்கம் பிரவேசிக்கவும், நபியவர்களது ஸுன்னாவையும், ஸஹாபாக்

களின் நடைமுறையையும் உறுதியாகப் பற்றிப் பிடிப்பதற்காக முஸ்லிம் களை அழைக்கும்.

11. இஸ்லாமிய சட்டங்களுக்கு முரணாக, மனிதர்களால் உருவாக்கப் பட்டுள்ள சட்டங்கள் அமைந்துள்ளதால், வெற்றிபெற்ற கூட்டம் அவற்றை நிராகரிக்கும். இம்மையிலும், மறுமையிலும் மனிதன் விமோசனம் பெறுவதற்காக அல்லாஹ்வால் அருளப்பட்ட வேதத்தைக் கொண்டு தீர்ப்பு வழங்குமாறு மக்களை அழைக்கும். (அல்லாஹ்வாகிய) அவன் மக்களை நல்வழி படுத்துவதற்கு மிகவும் அறிந்தவன். (அவனால் அருளப்பட்ட) வேதம் நிலையானது. அதிலுள்ள சட்டங்கள், எந்த ஒரு காலத்திலும் மாற்றமடையாதது. காலத்துக்குத் தக்கவாறு அது மாற்றப்பட மாட்டாது.

பொதுவாக உலகின் துர்பாக்கிய நிலைக்கும், குறிப்பாக இஸ்லாமிய உலகின் துர்பாக்கிய நிலைக்கும், அவை அடிக்கடி சந்திக்கும் சோதனைகள், கஷ்டங்கள், இழிவுகள் போன்றவற்றுக்கும் காரணம் யாதெனில், அல்லாஹ் வுடைய வேதத்தைக் கொண்டும், அவனது ரஸூலுடைய ஸுன்னாவைக் கொண்டும் தீர்ப்பு வழங்குவதை விட்டதாகும்.

اِنَّ اللهَ لَا يُغَيِّرُ مَا بِقَوْمٍ حَتّٰى يُغَيِّرُوْا مَا بِاَنْفُسِهِمْ

**“மனிதர்கள் (தங்களது தீய நடத்தையைக் கொண்டு) தங்களை மாற்றிக் கொள்ளாத வரையில், நிச்சயமாக அல்லாஹ்வும் (அவர்களுக்குப் புரிந்த அருளை) மாற்றி விடுவதில்லை” [அல்குர்ஆன்: 13:11]**

என்ற அல்குர்ஆன் வசனத்துக்கமைவான செயல்பாட்டின் பிரகாரம் தனிப்பட்ட முறையிலும், கூட்டாகவும் இஸ்லாம் காட்டுகின்ற வழியின்பால் திரும்புவதைக் கொண்டன்றி முஸ்லிம்களுக்கு கௌரவம் ஏற்பட முடியாது.

12. வெற்றி பெற்ற கூட்டம், முஸ்லிம்கள் அனைவரையும், அல்லாஹ்வுடைய பாதையில் ஜிஹாத் செய்வதற்காக அழைக்கின்றது. இது ஒவ்வொரு முஸ்லிமின் மீதும், அவர்களின் வசதிக்கும், சக்திக்கும் ஏற்றவாறு கடமையாகும். ஜிஹாத் என்பது பின்வருமாறு அமைகின்றது.

### I. நாவையும் பேனாவையும் கொண்டு ஜிஹாத் செய்தல்:-

சரியான இஸ்லாத்தைப் பற்றிப் பிடிப்பது கொண்டும், அதிகமான இஸ்லாமிய நாடுகளில் பரவியிருக்கும் ஷிர்க்கை விட்டு முற்றாக நீங்கி தௌஹீதைப் பற்றிப் பிடிப்பது கொண்டும், முஸ்லிம்களையும், முஸ்லிம் அல்லாதோரையும் நாவினாலும் பேனாவினாலும் அழைப்பு விடுத்தல் ஜிஹாதின் ஒரு வகையாகும். முஸ்லிம்களுக்கு மத்தியில் ஷிர்க் ஊடுருவுவது பற்றி நபி ﷺ அவர்கள் பின்வருமாறு கூறியுள்ளார்கள்.

'எனது உம்மத்திலுள்ள பல கூட்டத்தினர் இணை வைப்பவர் களுடன் சேரும்வரை, (அவர்களுடன் சேர்ந்து) சிலைகளை வணங்கும் வரை மறுமைநாள் ஏற்பட மாட்டாது' **[*ஆதாரம்: அபூதாவூத் (ஸஹீஹ்)*]**

இதே கருத்தில் முஸ்லிமிலும் ஒரு ஹதீஸ் பதிவாகியுள்ளது.

### II. பொருளைக் கொண்டு ஜிஹாத் செய்தல்:-

இஸ்லாத்தைப் பரப்புவதற்காக பணத்தைச் செலவு செய்தலும், சரியான ஆதாரங்களுடன் அப்பணியில் புத்தகங்களை அச்சிட்டு வினியோகித்தலும், இஸ்லாத்தைத் தழுவியவர்களில் வறியவர்களான முஸ்லிம்களை அதில் நிலைப்படுத்துவதற்காக அவர்களுக்குப் பணத்தைப் பங்கிட்டுக் கொடுத்தலும், ஆயுதங்கள் செய்தலும், செய்ய வசதியற்றவர்கள் பணம் கொடுத்து வாங்குவதும், முஜாஹிதீன்களுக்கு யுத்தக் கருவிகளை ஏற்பாடு செய்து கொடுத்தலும், அவர்களுக்குத் தேவையான உணவு, உடை போன்றவற்றைத் தயார் செய்து கொடுப்பதும் பொருளைக் கொண்டு ஜிஹாத் செய்தலாகும்.

### III. உயிரைக் கொண்டு ஜிஹாத் செய்தல்:-

இஸ்லாத்துக்கு உதவுவதற்காகவும், அல்லாஹ்வுடைய கலிமா "லாஇலாஹ இல்லல்லாஹ்" உயர்வடைவதற்காகவும், காஃபிர்(நிராகரிப்

பவர்)களின் (கலிமாவுக்கெதிரான) வாக்கு தாழ்ந்து விடுவதற்காகவும் யுத்தக்களங்களில் போராடுவது உயிரைக் கொண்டு ஜிஹாத் செய்வதாகும். இந்தப் பிரிவுகளைப் பற்றி நபி ﷺ அவர்கள் பின்வருமாறு கூறியுள்ளார்கள்.

'நீங்கள் உங்களுடைய பொருள்களைக் கொண்டும், உயிர்களைக் கொண்டும், நாவுகளைக் கொண்டும் இணை வைப்பவர்களுடன் ஜிஹாத் செய்யுங்கள்.' **[*ஆதாரம்: அபூதாவூத் (ஸஹீஹ்)*]**

அல்லாஹ்வுடைய பாதையில் ஜிஹாதுடைய சட்டத்துக்கு சில பிரிவுகள் உண்டு.

**1. 'பர்ளு ஐன்' (கட்டாயக் கடமை):** கொடுமைக்காரர்களான யூதர்கள் பலஸ்தீனை அபகரித்துக் கொண்டது போல, சில முஸ்லிம் நாடுகளில் பகைவர்களின் எதிர்ப்போராட்டம் இருந்து கொண்டிருக்கின்றது. சக்தி பெற்ற முஸ்லிம்கள் தங்களுடைய பொருள்களைக் கொண்டும் உயிர்களைக் கொண்டும் போராட்டம் செய்து, யூதர்களை அவ்விடத்தி லிருந்து வெளியேற்றி 'மஸ்ஜிதுல் அக்ஸாவைக்' கைப்பற்றும் வரை அவர்கள் பாவிகளாகவே இருக்கின்றனர்.

**2. பர்ளு கிபாயா:** சில முஸ்லிம்களேனும் செய்தால் எஞ்சி யுள்ளவர்கள் மீதுள்ள கடமை நீங்கி விடுகின்றது என்பதே பர்ளு கிபாயா வாகும். இஸ்லாத்தைப் பிரச்சாரம் செய்வதும், எல்லா நாடுகளிலும், இஸ்லாமிய ஆட்சியை நிலைநாட்டுவதற்காக அந்தத் தப்லீகைப் (பிரச்சாரம்) பரவலாக்குவதுமாக அந்தப்பணி இருக்க வேண்டும். அந்த வழியில் உறுதியாக நிற்பவர்கள், அப்பாதையில் இஸ்லாம் நடைமுறைக்கு வரும்வரை, கொலை செய்யப்பட்டுக் கொண்டே இருப்பார்கள்.



# வெற்றி பெற்ற கூட்டத்தின் அடையாளம்

1. வெற்றிபெற்ற கூட்டம் மனிதர்களுக்கு மத்தியில் சிறுபான்மையாக இருக்கும். 'அபூர்வமான மனிதர்களுக்கு நல்வாழ்த்து உண்டாகட்டும் இவர்கள், அதிகமான தீய மனிதர்களுக்கு மத்தியில் இருக்கும் ஸாலிஹான(நல்ல) மனிதர்கள். இவர்களுக்கு வழிபடுபவர்களை விட மாறுசெய்பவர்களே அதிகமாக இருப்பார்கள்' என நபி ﷺ அவர்கள் கூறினார்கள். **[*ஆதாரம்: அஹ்மத் (ஸஹீஹ்)*]**

அல்குர்ஆன் இவர்களைப் பற்றிப் புகழ்ந்து பின்வருமாறு கூறுகின்றது.

وَقَلِيْلٌ مِّنْ عِبَادِىَ الشَّكُوْرُ

**"எனது அடியார்களில் சொற்பமானவர்களே (எனக்கு) நன்றி செலுத்து பவர்களாக இருக்கின்றனர்" [அல்குர்ஆன்: 34:13]**

2. வெற்றிபெற்ற கூட்டத்தை அதிகமான மக்கள் எதிர்ப்பார்கள். அவர்களைப் பற்றி அவர்தூறான பலவற்றைச் சொல்வார்கள். பட்டப் பெயர்களைச் சொல்லி அழைப்பார்கள். நபிமார்களின் நடைமுறையைக் கொண்டு இவர்களுக்குப் படிப்பினை உண்டு என்பதைப் பின்வருமாறு அல்லாஹ் கூறுகின்றான்.

وَكَذٰلِكَ جَعَلْنَا لِكُلِّ نَبِىٍّ عَدُوًّا شَيٰطِيْنَ الْاِنْسِ وَالْجِنِّ يُوْحِىْ بَعْضُهُمْ اِلٰى بَعْضٍ زُخْرُفَ
الْقَوْلِ غُرُوْرًا‌ؕ وَلَوْ شَآءَ رَبُّكَ مَا فَعَلُوْهُ فَذَرْهُمْ وَمَا يَفْتَرُوْنَ

**"இவ்வாறே ஒவ்வொரு நபிக்கும், மனிதரிலும், ஜின்னிலும் உள்ள ஷைத்தான்களை நாம் விரோதிகளாக ஆக்கியிருந்தோம். அவர்களில் சிலர் சிலரை ஏமாற்றும் பொருட்டு, அலங்காரமான (பொய்க்) கூற்றுக்களை இரகசியமாகக் கூறிக்**

**(கலைத்துக்) கொண்டிருந்தார்கள். உம்முடைய இறைவன் நாடியிருந்தால், இவ்வாறு அவர்கள் செய்திருக்க மாட்டார்கள். ஆகவே, (நபியே!) நீர் அவர்களையும், அவர்களுடைய பொய்க் கூற்றுக்களையும் விட்டொழியும்” [அல்குர்ஆன்: 6:112]**

நபி ﷺ அவர்கள், மக்களைத் தௌஹீதின் பக்கம் அழைக்கும் போது, அவர்களைப் 'பொய்யன்' என்றும் 'சூனியக்காரன்' என்றும் கூறினார்கள். அதே மக்கள் நபியவர்களது இஸ்லாமியப் பிரச்சாரத்துக்கு முன்னால் அவர்களை நம்பிக்கையாளர் என்றும், உண்மை பேசுபவர் என்றும் கூறி அழைப்பவர்களாக இருந்தனர்.

3. அஷ்ஷெய்கு அப்துல் அஜீஸ் அப்துல்லாஹ் இப்னு பாஸ் ﷀ அவர்களிடத்தில் 'வெற்றிபெற்ற கூட்டம் எது'? என்று கேட்கப் பட்டபோது, 'ஸலபிய்யூன்கள்' என்னும் முன்னோர்களான நபி ﷺ அவர்களினதும், ஸஹாபாக்களினதும் வழியில் எவர்களெல்லாம் இருக் கின்றனரோ, அவர்கள்தான் வெற்றிபெற்றவர்கள் என்று பதிலளித்தார்கள்.

மேற்காட்டியவை, வெற்றிபெற்ற கூட்டத்தின் சில வழிமுறைகளும், அடையாளங்களுமாகும். அல்லாஹ்வின் உதவிபெற்ற கூட்டமான வெற்றி பெற்றவர்களின் அடிப்படைக் கொள்கையில் நாமும் இருப்பதற்காக இன்ஷா அல்லாஹ் இந்நூலில் சில பிரிவுகளைச் சொல்கிறேன்.



# உதவிபெற்ற கூட்டம் எது?

1. நபி ﷺ அவர்கள் பின்வருமாறு கூறியுள்ளார்கள்: 'என்னுடைய உம்மத்தில் ஒரு கூட்டம் உண்மைக்காகப் போராடிக் கொண்டே இருப்பார்கள். அல்லாஹ்வுடைய கட்டளை எனும் மௌத்து அவர்களுக்கு வரும்வரை, அவர்களை எதிர்ப்பவர்களால் எந்தவிதத் தீங்கையும் அவர்களுக்குச் செய்து விட முடியாது.' **[ஆதாரம்: *முஸ்லிம்*]**

2. 'ஸிரியா வாசிகள் (பண்புகளால்) கெட்டு விடுவதால் உங்களுக்கு எந்தவித நன்மையுமில்லை. அல்லாஹ்வின் உதவிபெற்ற ஒரு கூட்டம் எனது உம்மத்தில் இருந்து கொண்டே இருப்பார்கள். மறுமை ஏற்படும் வரை, அவர்களை எதிர்ப்பவர்களால் அவர்களுக்கு எந்தவித தீங்கும் ஏற்படமாட்டாது' **[ஆதாரம்: *அஹ்மத் (ஸஹீஹ்)*]**

3. உதவி பெற்ற அக்கூட்டம் 'அஸ்ஹாபுல் ஹதீஸ்' (ஹதீஸையுடைய வர்கள்) என்பதாக இப்னுல் முபாரக் ؒ அவர்கள் கூறுகிறார்கள். அவ்விதமே அலிய்யுப்னுல் மதீனி ؒ அவர்கள் சொன்னதாக இமாம் புகாரி ؒ அவர்கள் கூறுகிறார்கள்.

4. உதவிபெற்ற அந்தக் கூட்டம் அஸ்ஹாபுல் ஹதீஸாக இல்லையென்றால், அவர்களை யாரென நானறியேன் என இமாம் அஹ்மத் இப்னு ஹன்பல் ؒ அவர்கள் கூறியுள்ளார்கள்.

5. நிச்சயமாக அஹ்லுல் ஹதீஸ் என்போர் ஸுன்னாவின் அடிப்படையிலுள்ள சட்டங்களைப் பின்பற்றுகின்றவர்கள். மனிதர்களிலேயே மிகவும் அறிவாளிகளாக இருப்பவர்கள். நபியவர்களின் நடைமுறை

களையும், அவர்களுடைய நற்குணங்களையும், அவற்றுடன் தொடர்புடைய ஏனைய அம்சங்களையும் அதிகம் அறிந்தவர்களாக இருப்பார்கள்.

6. இமாம் ஷாபிஈ ﵀ அவர்கள், இமாம் இஹ்மத் இப்னு ஹன்பல் ﵀ அவர்களை நோக்கிப் பின்வருமாறு கூறுகின்றார்கள்:

'நீங்கள் என்னைவிட அதிகமாக ஹதீஸ்களை அறிந்தவர்களாக இருகின்றீர்கள். உங்களுக்கு ஒருவர் ஸஹீஹான ஹதீஸை அறிவித்தால், அவர் ஹிஜாஸ் வாசியாக இருந்தாலும், கூபாவாசியாக இருந்தாலும், அல்லது பஸராவாசியாக இருந்தாலும் அந்த அறிவிப்பாளரை எனக்கு அறியத் தாருங்கள். நான் அவரிடம் சென்று அந்த ஹதீஸ் பற்றி வினவுவேன்' என்று இமாமவர்கள் கூறினார்கள்.

அல்லாஹ் எம்மையும் அஹ்லுல் ஹதீஸ்களுடன் மறுமையில் எழுப்புவானாக! அவர்கள், முஹம்மத் ﷺ அவர்களைத் தவிர வேறெந்த ஒரு மனிதனுடைய சொல்லிலும் (அது மட்டும் தான் சரி என்று) பிடிவாதமாக இருக்க மாட்டார்கள். அந்த மனிதன் மக்களுடைய கண்ணோட்டத்தில், அந்தஸ்தில் எவ்வளவு உயர்ந்திருப்பினும் சரி.

அஹ்லுல் ஹதீஸ் நபி ﷺ அவர்களுடைய சொல்லில் பிடிவாதமாக இருப்பது போலவே இவர்களுக்கு எதிரானவர்(மத்ஹப்வாதி)கள் தத்தமது இமாம்களுடைய சொல்லில் பிடிவாதமாக இருக்கின்றார்கள். அஹ்லுல் ஹதீஸ் தான் வெறிபெற்ற கூட்டமாகவும், உதவிபெற்ற கூட்டமாகவும் இருப்பதில் ஆச்சர்யப்படுவதற்கு ஒன்றுமில்லை.

7. அல்கதீபுல் பஃதாதிய்யி ﵀ அவர்கள் தனது 'ஷரபு அஹ்லில் ஹதீஸ்' (அஹ்லுல் ஹதீஸின் சிறப்பு) என்ற நூலில் பின்வருமாறு கூறுகின்றார்கள்.

சொந்தக் கருத்தைக் கொண்டு செயல்படுபவனுக்கு அவனுடைய அறிவில் பயனுண்டு என்றிருந்தால், இதல்லாத நபி ﷺ அவர்களின்

நடைமுறை அவனுக்குத் தேவைப்பட மாட்டாது. ஏனென்றால் ஹதீஸ் என்பதோ, எல்லா அம்சங்களையும் உள்ளடக்குகின்றது.

தௌஹீதின் அடிப்படை அறிவுகளையும், மறுமை பற்றியும், தண்டனைகள் சம்பந்தமான எச்சரிக்கைகள் பற்றியும், அல்லாஹ்வுடைய ஸிபத்து (இறைமையின் சிறப்பியல்பு) கள் பற்றியும், சுவர்க்கம் நரகம் பற்றிய செய்திகள் அங்கு நல்லவர்களுக்கும் தீயவர்களுக்கும் செய்யப் பட்டுள்ள ஏற்பாடுகள், வானங்களிலும், பூமியிலும் அல்லாஹ் படைத் திருப்பவை ஆகியவை பற்றித் தகவல்களை ஹதீஸ் தருகின்றது.

மேலும் ஹதீஸிலே நபிமார்களின் சரித்திரங்கள், நல்லடியார்கள் ஸாலிஹீன்களுடைய செய்திகள், நபி ﷺ அவர்களுடைய உபதேசங்கள், அற்புத நிகழ்ச்சிகள் போன்றவை அடங்குகின்றன. குர்ஆனுக்கு வியாக் கியானம், அதிலுள்ள ஞானம், நல்லுபதேசம், ஸஹாபாக்களால் பாதுகாக் கப்பட்ட சட்டங்கள் போன்றவையும் அதில் அடங்குகின்றன.

அல்லாஹ், அஹ்லுல் ஹதீஸை ஷரீஅத்தின் தூண்களாக அமைத் துள்ளான். அவர்கள் மூலம் பித்அத்துகளைத் தகர்த்தெறிகிறான். அவர்கள் அல்லாஹ்வுடைய படைப்புகளில் நம்பிக்கையானவர்கள். (மார்க்க போத னையின் மூலம்) நபியவர்களுக்கும் உம்மத்துக்குமிடையில் தொடர்பை ஏற்படுத்துகின்றவர்கள். ஹதீஸின் மூலத்தை (சிதைவு ஏற்படாமல்) பாதுகாக்கின்றவர்கள். அவர்களுடைய ஒளி பிரகாசித்துக்கொண்டிருக்கிறது. அவர்களுடைய சிறப்பு இருந்து கொண்டே இருக்கின்றது.

அஸ்ஹாபுல் ஹதீஸைத் தவிர, ஏனைய ஒவ்வொரு கூட்டமும் தமது மனோ இச்சையில் நிலையாக இருந்துக் கொண்டு அதனை ஒரு நல்ல செயலாகவும் எடுத்துக்கொள்கின்றது. அஸ்ஹாபுல் ஹதீஸுக்கு அல்குர்ஆன் தான் சேமிப்பு; அஸ்ஸுன்னா அத்தாட்சி; நபி ﷺ அவர்களும், ஸஹாபாக் களுமே அவர்களது கூட்டம்; அவர்கள் பக்கமே இவர்களது தொடர் புண்டு. இவர்கள் எப்பொழுதும் தமது சொந்த அபிப்பிராயத்தின் பக்கம்

திரும்பவே மாட்டார்கள். இவர்களுக்கு எவன் தொல்லை ஏற்படுத்து கின்றானோ, அவனை அல்லாஹ் தண்டித்து விடுவான். இவர்களுடன் எவன் பகைத்துக் கொள்கின்றானோ, அவனை அல்லாஹ் இழிவு படுத்துவான். இதுவரை கூறப்பட்டவை அனைத்தும் அஸ்ஹாபுல் ஹதீஸ் பற்றி அல்கதீபுல் பஃதாதிய்யி ﵀ அவர்கள் கூறிய கருத்துக்களாகும்.

அல்லாஹ் நம்மனைவரையும் அஹ்லுல் ஹதீஸ்களுடன் சேர்த்தருள் வானாக! அதன்படி செயல்படக் கூடியவர்களாகவும் அவர்களுடன் நட்புக் கொள்ளக் கூடியவர்களாகவும், அவர்களுடன் இணைந்து ஒத்துழைப்பு வழங்குகின்றவர்களாகவும் நம்மனைவரையும் ஆக்குவானாக!



# தௌஹீதும் அதன் பிரிவுகளும்

அல்லாஹ் தனக்கு அடிபணிவதற்கென்றே படைத்தவை அனைத்தும் (வேறெவருக்கும் வழிபடாமல்) அவனுக்கு மட்டுமே வழிபடுவதில் ஒருமைப் படுத்துவதற்கே தௌஹீத் எனப்படும். இது பற்றி அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான்:

وَمَا خَلَقْتُ الْجِنَّ وَالْاِنْسَ اِلَّا لِيَعْبُدُوْنِ

**“என்னை வணங்குவதற்கன்றி ஜின்களையும் மனிதர்களையும் நான் படைக்கவில்லை” [அல்குர்ஆன்: 51:56]**

அதாவது ‘வணக்கத்தில் என்னைத் தனிமைப்படுத்துவதற்கும், பிரார்த்தனையில் என்னை ஒருமைப்படுத்துவதற்குமே நான் படைத்தேன்’ என்பதாக அல்லாஹ் கூறுகிறான். ‘முஹம்மத் ﷺ அவர்களுக்காகத்தான் உலகம் படைக்கப்பட்டது’ என்று சொல்லப்படும் கூற்றை மேற்காட்டிய வசனம் பொய்யாக்குவதைக் காணலாம்.

பின்வருமாறு தௌஹீது வகைப்படுத்தப்படும். அவை குர்ஆனி லிருந்தே எடுக்கப்பட்டுள்ளன. “தௌஹீதுர் ரப்பி” (படைப்பதில் ஒருமைப் படுத்தல்) படைப்பவனும் போசிக்கின்றவனும் அல்லாஹ்தான் என்று அறிவதையே “தௌஹீதுர் ரப்பி” குறிக்கும். நிராகரிப்பவர்களில் பலர் இந்த வகையை அறிந்துள்ளனர். இந்த அறிவு அவர்களை இஸ்லாத்தில் பிரவேசிக்கச் செய்யவில்லை. இதுபற்றி அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான்:

وَلَىِٕنْ سَاَلْـتَهُمْ مَّنْ خَلَقَهُمْ لَيَقُوْلُنَّ اللّٰهُ فَاَنّٰى يُؤْفَكُوْنَۙ

**“அவர்களைப் படைத்தவன் யார்? என்று நீர் அவர்களிடம் கேட்பீராயின் அல்லாஹ் தான் என்று நிச்சயமாக கூறுவார்கள்” [அல்குர்ஆன்: 43:87]**

பொது உடமைவாதிகளான நாத்திகர்கள் இறைவன் இருக்கின்றான் என்பதையே மறுக்கின்றனர். இவர்கள் ஜாஹிலிய்யாக் காலத்திலிருந்த காஃபிர்களை விட மோசமானவர்கள்.

"தௌஹீதுல் இலாஹ்" (இரட்சிப்பில் ஒருமைப் படுத்தல்) இது மார்க்கமாக ஆக்கப்பட்ட வணக்க வகைகளில் அல்லாஹ்வை ஒருமைப் படுத்துவதாகும். இந்த வகை, துஆக்கேட்டல், உதவிக்கு அழைத்தல், கஃபாவைத் தவாப் செய்தல், அறுத்துப் பலியிடல், நேர்ச்சை செய்தல் போன்ற வணக்கங்களாகும். இந்த வகையைத்தான் காஃபிர்கள் நிராகரிக் கிறார்கள்.

நபி நூஹ் ﵇ அவர்களின் காலம் முதல் முஹம்மத் ﷺ அவர்களது காலம் வரை வாழ்ந்த எல்லா நபிமார்களுக்கும் அவர்களுடைய உம்மத்துக்கும் இடையில் இந்த பிணக்கு இருந்து கொண்டே இருந்தது.

அல்குர்ஆன் பல இடங்களில் இந்த அம்சத்தைத் தூண்டிக்கொண்டே இருக்கின்றது. "உன்னையே வணங்குகின்றோம்; உன்னிடமே உதவி தேடுகின்றோம்" என்று ஸூரத்துல் பாத்திஹாவில் பிரார்த்தனை புரிவதைக் கொண்டு அல்லாஹ்விடம் மட்டுமே துஆ இறைஞ்சுகின்றோம். 'வணக்கத்தில் உன்னை மட்டுமே சொந்த மாக்குகின்றோம். உன்னிடம் மட்டுமே பிரார்த்தனை புரிந்து அழைக்கிறோம். உன்னையல்லாத வேறெவரிடமும் உதவி தேட மாட்டோம்' என்பதே மேற்படி வசனத்தின் அர்த்தமாகும்.

'தௌஹீதுல் இலாஹ்' என்பது துஆவிலே அல்லாஹ்வைத் தனிமைப் படுத்துதல், அவனுடைய வேதத்தைக் கொண்டே தீர்ப்பு வழங்குதல், அவனால் ஏற்படுத்தப்பட்ட ஷரீஅத்தையே சட்டமாக அங்கீகரித்தல் ஆகியவற்றை உள்ளடக்குவதாகும். பின்வரும் அல்குர்ஆன் வசனத்தில் அவையனைத்தும் அடங்கியுள்ளன.

اِنَّنِیۡۤ اَنَا اللّٰهُ لَاۤ اِلٰهَ اِلَّاۤ اَنَا فَاعۡبُدۡنِیۡ ۙ وَاَقِمِ الصَّلٰوةَ لِذِكۡرِیۡ

**“நிச்சயமாக நான் தான் அல்லாஹ்; என்னைத் தவிர வேறு நாயன் இல்லை; என்னையே நீர் வணங்குவீராக” [அல்குர்ஆன்: 20:14]**

“தௌஹீதுல் அஸ்மாஇ வஸ்ஸிபாத்” (அல்லாஹ்வுடைய பெயர் களிலும், வர்ணனைகளிலும் ஒருமைப் படுத்தல்) அல்லாஹ்வைப் பற்றி அவனும், அவனுடைய ரஸூலும் எவ்வாறு சொன்னார்களோ, அவ்விதமே ஏற்றுக்கொள்ள வேண்டும். இதற்கு அமைப்புக்கள், அர்த்தங்கள் கற்பிக்காமல் உள்ளதை உள்ளபடியே ஏற்றுக் கொள்ள வேண்டும்.

அல்லாஹ்வுடைய ஸிபத்துகளில் ‘இஸ்திவாஉ’ (அமைந்து விடல்) ‘நுஸூல்’ (இறங்குதல்) ‘அல்-யது’ (கை) ‘அல் மஜீஉ’ (வருகை) போன்றவைகளும் அடங்குகின்றன.

உதாரணமாக ‘இஸ்திவாஉ’ என்ற சொல்லுக்கு ‘அல் உலுவ்வு’ (உயர்வு) ‘அல் இர்திபாஉ’ (உயர்தல்) என்பன அல்லாஹ்வுக்குப் பொருந்தக் கூடியனவாக இருப்பதாக தாபிஈன்கள் விளக்கமளித்து உள்ளார்கள் என்று ஸஹீஹுல் புகாரியில் பதிவாகி இருக்கின்றது. பின்வருமாறு அல்லாஹ் கூறுகிறான்.

لَيْسَ كَمِثْلِهٖ شَىْءٌ‌ ۚ وَهُوَ السَّمِيْعُ الْبَصِيْرُ

**“அவனுக்கு ஒப்பானது ஒன்றுமில்லை. அவன் செவியுறுவோனாகவும் உற்று நோக்கியவனாகவும் இருக்கின்றான்” [அல்குர்ஆன்: 42:11]**

**1. அத்தஃவீல்:** (அர்த்தம் கொடுத்தல்) ‘தஃவீல்’ என்றால், சில குர்ஆன் வசனங்களுக்கும், ஹதீஸ்களுக்குமுள்ள வெளிப்படையான அர்த்தங்களைத் திரித்து பிழையான வேறு அர்த்தம் கற்பிப்பதாகும். உதாரணமாக ‘இஸ்தவா’ (சமமானான்) என்ற சொல்லுக்கு, ‘இஸ்தவுலா’ (ஆட்சி செலுத்தினான்) என்று வேறு அர்த்தம் கற்பிப்பதாகும்.

**2. அத்தஃதீல்:** (உள்ளதை இல்லையென்று கூறல்) அல்லாஹ்வுடைய ஸிபத்துக்களை மறுத்து அவற்றை இல்லையென்று கூறுவதற்கே அத்தஃதீல்

என்று சொல்லப்படும். உதாரணமாக வானத்துக்கு மேல் அல்லாஹ்வின் உயர்வு என்பது போன்றாகும். வழிதவறிய கூட்டத்தினர் அல்லாஹ் எங்கும், எல்லா இடங்களிலும் இருக்கின்றான் என்று கூறுகின்றனர்.

فِىْ سِتَّةِ اَيَّامٍ ثُمَّ اسْتَوٰى عَلَى الْعَرْشِ‌ؕ

**“ஆறு நாட்களில் வானம் பூமியைப் படைத்து விட்டுப் பின்னர் அர்ஷின் மீது அமைந்து விட்டான்” [அல்குர்ஆன்: 32:4]** என்ற குர்ஆனின் கூற்றுக்கு, ‘எல்லா இடங்களிலும் அல்லாஹ் இருக்கிறான்’ என்ற பிழையான கூற்று முரண் படுகின்றது.

**3. அத்தக்யீப்:** (அமைப்பு ஏற்படுத்தல்) அல்லாஹ்வுடைய அமைப்பு இப்படித்தான் என்று கூறி, அவனுடைய ஸிபத்துக்களுக்கு மாதிரி கற்பித்து ஒப்பிடுதலுக்கு ‘அத்தக்யீப்’ என்று சொல்லப்படும். அல்லாஹ் அர்ஷில் அமைந்திருப்பதை அவனுடைய படைப்புக்களுடன் ஒப்பிட முடியாது. அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் அவனுடைய அமைப்பை அறிய முடியாது.

**4. அத்தம்தீல்:** (உதாரணம் கற்பித்தல்) அல்லாஹ்வுடைய ஸிபத்துக் களை அவனுடைய படைப்புக்களுடைய ஸிபத்துக் (அமைப்புக்) களுடன் உதாரணம் கற்பித்து ஒப்பாக்கிக் கூறுவதற்கு ‘அத்தம்தீல்’ எனப்படும். ஸஹீஹ் முஸ்லிமில் ‘அல்லாஹ் முதலாவது வானத்துக்கு இறங்குகிறான்’ என்று கூறப்பட்டுள்ளது. இறங்குகிறான் என்பதை, “நாங்கள் இறங்குவது போன்று இறங்குகிறான்’ என்று உதாரணம் கற்பிக்கக் கூடாது. இறங்கு கிறான் என்ற விஷயத்தை மட்டும் சொல்லப் பட்டவாறு உண்மையென அங்கீகரிக்க வேண்டும். இறங்குவதற்கு வேறு அர்த்தமுண்டு என்று சொல்லுதல் வழிகேடாகும்.

‘நாங்கள் இறங்குவது போலவே அல்லாஹ் இறங்குகிறான்’ என்று ஷைகுல் இஸ்லாம் இப்னு தைமிய்யா ﷺ அவர்கள் ஒப்பீடு செய்து காட்டியதாக பொய்யான கதையொன்று கற்பனை செய்யப்பட்டுள்ளது.

அவருடைய நூல்கள் எதிலும் இப்படியான ஒன்றை நாங்கள் கண்டதில்லை. ஆனால் அதற்கு மாறாக, 'தம்தீல்' (உதாரணம் கற்பித்தல்) 'தஷ்பீஹ்' (ஒப்பாக்குதல்) போன்றவற்றை அல்லாஹ்வுக்கு ஏற்படுத்தக் கூடாது என்று அவர் தனது நூல்களில் கூறியுள்ளதைக் கண்டு கொள்ளலாம்.

**5. அத்தப்வீழ்:** (பரம்சாட்டுதல்) அல்லாஹ்வுடைய ஸிபத்துக்களைப் பொறுத்தமட்டில் அவை எப்படி என்பதை எவராலும் விபரிக்க முடியாது. இப்படியான இடத்தில் இதன் அமைப்பு முறையை எவரும் அறிய முயற்சிக்கக் கூடாது. அல்லாஹ் தன்னைப் பற்றிக் கூறியிருப்பதை அவ்வாறே ஏற்றுக் கொண்டு, அதற்கு மேற்பட்ட விளக்கத்தை அவனிடம் சாட்டி விடுதல். இதனையே 'அத்தப்வீழ்' என்று சொல்லப்படும். அமைப்பு முறையிம் மட்டும் தான் இது இடம்பெறும். சொற்களுக்கு அர்த்தம் சொல்வதில் இந்தத் 'தப்வீழ்' இடம்பெறாது. உதாரணத்துக்கு 'அல்இஸ்திவாஉ' என்ற சொல்லுக்கு 'அல்உலுவ்வு' (உயர்தல்) என்று கருதப்படும். ஆனால் இதன் அமைப்பு என்ன? என்பது பற்றி அல்லாஹ் மட்டுமே அறிவான். 'தப்வீழ்' பற்றி இங்கு கூறப்பட்ட விளக்கமனைத்தும் ஸலபுஸ்ஸாலிஹீன்களுடையதாகும்.



# லாஇலாஹ இல்லல்லாஹ்வின் அர்த்தம்

(லாமஃபூத - பிஹக்கின் இல்லல்லாஹ் - அல்லாஹ்வைத் தவிர வணக்கத்துக்குரியவன் வேறெவருமில்லை என்பதாகும்) இதிலே அல்லாஹ்வைத் தவிர வேறெரு இறைவன் இல்லையென்று கூறுவதும், இறைமைத்துவம் அனைத்தும் அல்லாஹ்வுக்கு மட்டுமே என்று கூறி உறுதிப்படுத்துவதும் அமைந்துள்ளது.

فَاعْلَمْ اَنَّهٗ لَآ اِلٰهَ اِلَّا اللّٰهُ

**1. "அல்லாஹ்வைத் தவிர வேறொரு இறைவன் இல்லையென்பதை நீர் அறிந்து கொள்ளும்" [அல்குர்ஆன்: 47:19] என்று அல்லாஹ் கூறுகிறான்.**

இதன் அர்த்தத்தை அறிந்து கொள்வது வாஜிபாகும். இஸ்லாத்தின் ஏனைய கடமைகளை அறிவதற்கு முன்னால் இதனை அறிந்தாக வேண்டும்.

2. "எவனொருவன் மனத் தூய்மையுடன் லாஇலாஹ இல்லல் லாஹ்வை மொழிகிறானோ அவன் சுவர்க்கம் பிரவேசிப்பான்" என நபி ﷺ அவர்கள் கூறியுள்ளார்கள். **[ஆதாரம்: *அஹ்மத் (ஸஹீஹ்)*]**

மனத்தூய்மை என்றால், அதனை விளங்குவதும், அதன்படி செயல்படுவதும், அதன்பக்கம் (மக்களை) அழைப்பு விடுப்பதுமாகும். ஏனென்றால், இதிலேதான் தௌஹீத் இருக்கின்றது. இதற்காகத்தான் உலகிலுள்ளோர் அனைவரையும் அல்லாஹ் படைத்தான்.

3. நபி ﷺ அவர்களது சிறிய தந்தை அபூதாலிப் மரணப்படுக்கையில் இருக்கும்போது, 'எனது சிறிய தந்தையே! நீங்கள் 'லாஇலாஹ இல்லல்லாஹ்' என்று கூறுங்கள். அதனைக் கொண்டு அல்லாஹ்விடத்தில்

உங்களுக்காக மன்றாடுவேன்' என்று கூறினார்கள். அவர்கள் 'லாஇலாஹ இல்லல்லாஹ்' என்று கூற மறுத்து விட்டார். [*ஆதாரம்: புகாரி, முஸ்லிம்*]

"நபி ﷺ அவர்கள் 'லாஇலாஹ இல்லல்லாஹ்' என்று கூறுங்கள் என்று சொல்லி மக்களை இஸ்லாத்தின்பால் அழைப்பதற்காக மக்காவில் பதின்மூன்று வருடகாலம் இருந்தார்கள். 'ஒரே இறைவனையா நாங்கள் வணங்க வேண்டும்? இவ்வாறு நாங்கள் கேள்விப்பட்டதே இல்லையே' என்று அம்மக்கள் கூறினார்கள். இவ்வாறு அவர்கள் சொல்லக் காரணம் என்னவெனில், அவர்கள் கலிமாவுடைய அர்த்தத்தை விளங்கியிருந்ததனால் தான். எவன் இதனைச் சொல்லுவானோ, அவன் அல்லாஹ் அல்லாத ஏனையவைகளை அழைப்பதை விட்டுவிட்டு, அல்லாஹ்வையே மட்டுமே அழைப்பான். இவர்களைப்பற்றி அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான்.

اِنَّهُمْ كَانُوْٓا اِذَا قِيْلَ لَهُمْ لَآ اِلٰهَ اِلَّا اللّٰهُۙ يَسْتَكْبِرُوْنَۙ وَيَقُوْلُوْنَ اَىِٕنَّا لَتَارِكُوْٓا اٰلِهَتِنَا لِشَاعِرٍ مَّجْنُوْنٍؕ بَلْ جَآءَ بِالْحَقِّ وَصَدَّقَ الْمُرْسَلِيْنَ

**"அல்லாஹ்வைத் தவிர வேறொரு நாயனில்லை. (அவனையே நம்பி அவனுக்கே வணக்கம் செலுத்துங்கள்) என்று அவர்களிடம் கூறப்பட்டால், நிச்சயமாக அவர்கள் கர்வம் கொண்டு, பைத்தியம் கொண்ட ஒரு கவிஞனுக்காக எங்களது தெய்வங்களை மெய்யாகவே நாங்கள் விட்டு விடுவோமா? என்று கூறுகின்றனர். (நபியாகிய அவர் பைத்தியக்காரர்) அல்ல. அவர் உண்மையே கொண்டு வந்தார். தனக்கு முன்னர் வந்த நபிமார்களையும் அவர் உண்மையாக்கி வைத்தார்"**

**[அல்குர்ஆன்: 37:35,36,37]**

'எவனொருவன் லாஇலாஹ இல்லல்லாஹ் என்று கூறி அல்லாஹ் வையன்றி வணங்கப்படக் கூடியவை அனைத்தையும் நிராகரிக்கின்றானோ, அவனுடைய பொருளும், அவனுடைய இரத்தமும் ஹராமாகி விடும். (அதாவது அவனுடைய இரத்தத்தை ஓட்டவோ, அவனுடைய பொருளைச் சூரையாடவோ எந்த ஒரு முஸ்லிமும் முற்படக் கூடாது)' என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். [*ஆதாரம்: முஸ்லிம்*]

இந்த ஹதீஸின் அர்த்தமாவது, மரணித்தவர்களிடமோ, அவர்கள் அல்லாதவர்களிடமோ தேவைகளைக் கேட்பது போன்ற அல்லாஹ் அல்லாதவர்களுக்கு வணக்கம் செலுத்துவதை நிராகரித்து அதனைப் புறக்கணிப்பது, கலிமாவை மொழியக்கூடிய ஒவ்வொருவர் மீதும் கடமை யாகும்.

இதில் அபூர்வம் என்னவென்றால், முஸ்லிம்களில் பலர் இந்தக் கலிமாவை நாவினால் மொழிகின்றனர். ஆனால் தங்களுடைய செயல்கள் மூலமாகவும் அல்லாஹ் அல்லாதவர்களை அழைப்பதன் மூலமாகவும் அதன் அர்த்தத்துக்கு மாறு செய்கின்றனர்.

5. லாஇலாஹ இல்லல்லாஹ் என்பது இஸ்லாத்தினதும் தௌஹீதினதும் அஸ்திவாரமாகும். இது வாழ்க்கையின் பூரண வழி காட்டியாகும். அல்லாஹ்வுக்கு அடிபணிந்து வணக்கம் செலுத்தக்கூடிய எல்லா வகை களையும் இது நெறிப்படுத்துகின்றது. ஒரு முஸ்லிம் அல்லாஹ்வுக்கு அடிபணிந்து அவனை மட்டுமே அழைப்பானென்றால் அவனல்லாத எவருடைய சட்டத்துக்கும் அடிபணியக் கூடாது என்பது அவனுக்குக் கட்டாயப் படுத்தப்படுகிறது.

6. இப்னு ரஜப் ﷺ அவர்கள் 'அல்இலாஹ்' (இறைவன் இரட்சகன்) என்ற பதத்துக்குப் பின்வருமாறு விளக்கம் அளிக்கிறார்கள். இலாஹ் என்பவன் அச்சத்தை ஏற்படுத்தக் கூடியவனாகவும், கண்ணியப்படுத்தப் படக்கூடியவனாகவும், விருப்பத்துடனும், அச்சத்துடனும், ஆதரவுடனும் பொறுப்புச்சாட்டப்படக் கூடியவனாகவும், பிரார்த்தனை செய்யப்படக் கூடியவனாகும், மாறு செய்யப்படக் கூடாதவனாகவும் இருக்க வேண்டும். இவையனைத்தும் வல்லமையுள்ள அல்லாஹ்வுக்கு மட்டுமே பொருந்தும்.

இறைவனுக்கு மட்டுமே சொந்தமான மேற்கூறப்பட்ட பண்புகளில் ஏதேனுமொன்றைக் கொண்டு படைப்புகளில் ஒன்றை அல்லாஹ்வுடன் எவன் இணையாக்குகின்றானோ அவன், தான் மொழிந்த லாஇலாஹ

இல்லல்லாஹ்விலே பிழை விட்டவனாவான். இது படைப்புக்கு வழி பட்டதாக அமைகின்றது.

7. லாஇலாஹ இல்லல்லாஹ் என்ற கலிமாவானது ஷிர்க்கைக் கொண்டு அதனை முறித்து விடாதவனுக்கு மட்டுமே பயன்படுகின்றது. உழுவுடன் இருப்பவனுக்கு உழுவை முறிக்கும் செயலொன்று நடந்து விட்டால், எப்படி உழு முறிந்து விடுமோ, அவ்வாறே கலிமா மொழிந்தவன் ஷிர்க் வைத்து விட்டால் அவனுடைய ஈமான் முறிந்து விடுகின்றது. அப்பொழுது அவனுடைய கலிமா அவனுக்கு பயனற்றதாக ஆகி விடுகின்றது.

'எவனுடைய கடைசி வார்த்தை லாஇலாஹ இல்லல்லாஹ்வாக இருக்கின்றதோ, அவன் சுவர்க்கம் பிரவேசிப்பான்' என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். **[ஆதாரம்: புகாரி, ஹாகிம் (ஹஸன்)]**



# ‘முஹம்மதுர்ரஸூலுல்லாஹ்’ என்பதின் அர்த்தம்

‘முஹம்மத் ﷺ அவர்கள் அல்லாஹ்வினால் ரஸூலாக அனுப்பப் பட்டார்கள்’ என்று நம்பிக்கை கொள்ள வேண்டும். அவர்கள் அறிவித்ததை உண்மைப் படுத்துவோம்; ஏவியதற்கு வழிப்படுவோம்; தடுத்ததை விட்டு விடுவோம்; அவர்கள் மார்க்கமாக்கியுள்ளதைக் கொண்டு அல்லாஹ்வுக்கு வழிபடுவோம்.

1. அபுல்ஹஸன் அலி-அந்நத்வி ﵀ அவர்கள் தனது ‘கிதாபுன் நுபுவ்வா’ என்ற நூலில் பின்வருமாறு கூறியுள்ளார்கள். ‘நபிமார்களின் ஆரம்பகால தஃவாவு (இறை பணி) யும், எல்லாக் காலங்களிலும் எல்லா நிலைகளிலும் அவர்களது மகத்தான குறிக்கோளும் அல்லாஹ்வின் மீதுள்ள நம்பிக்கையைச் சரிசெய்வதும் அடியானுக்கும் இரட்சகனுக்கும் இடையில் தொடர்பை ஏற்படுத்துவதும், அல்லாஹ்வுடைய தூய்மையான மார்க்கத்தின் பக்கம் அழைப்பு விடுப்பதும் இபாதத்தை (வழிபடுவதை) அல்லாஹ்வுக்கு மட்டுமே சொந்தமாக்கி வைப்பதுமாக இருந்தது.

நாங்கள் வழிபடுவதற்கும், பிரார்த்தனை புரிவதற்கும், ஒதுங்கு வதற்கும், அறுத்துப் பலியிட்டு வணக்கம் புரிவதற்கும் தகுதியுடையவன் அவன் மட்டுமேயாவான்.

2. நபி ﷺ அவர்களுக்கு அவர்களது ரப்பான அல்லாஹ் பின் வருமாறு கூறுகிறான்.

قُلْ لَّاۤ اَمْلِكُ لِنَفْسِىْ نَفْعًا وَّلَا ضَرًّا اِلَّا مَا شَآءَ اللّٰهُ‌ؕ وَلَوْ كُنْتُ اَعْلَمُ الْغَيْبَ لَاسْتَكْثَرْتُ مِنَ الْخَيْرِ ۛۚ وَمَا مَسَّنِىَ السُّوْٓءُ‌ ۛۚ اِنْ اَنَا اِلَّا نَذِيْرٌ وَّبَشِيْرٌ لِّقَوْمٍ يُّؤْمِنُوْنَ

**“நீர் கூறும்: அல்லாஹ் நாடினாலன்றி எனக்கு யாதொரு நன்மையோ, தீமையோ செய்து கொள்ள நான் சக்தி பெற மாட்டேன். நான் மறைவானவற்றை அறிய முடியுமாயின் நன்மைகளையே அதிகமாகத் தேடிக் கொண்டிருப்பேன், யாதொரு தீங்கும் என்னை அணுகியிராது. நான் பாவிகளுக்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவனும், மூமின்களுக்கு நன்மாராயங் கூறுபவனுமேயன்றி வேறில்லை” [அல்குர்ஆன்: 7:188]**

‘மர்யமுடைய மகன் ஈஸா ﷺ அவர்களைக் கிறிஸ்தவர்கள் அளவுகடந்து புகழ்ந்தது போன்று நீங்களும் என்னைப் புகழாதீர்கள். நானோ அல்லாஹ்வுடைய ஓர் அடியானாவேன். என்னை அல்லாஹ்வுடைய அடியான் என்றும், அவனுடைய ரஸூல் என்றுமே கூறுங்கள்’ என நபி ﷺ அவர்கள் கூறினார்கள். **[*ஆதாரம்: புகாரி*]**

ஈஸா ﷺ அவர்களுடைய விஷயத்தில் கிறிஸ்தவர்கள் செய்தது போன்று, நாமும் நபி ﷺ அவர்களை உதவிக்கழைத்து வணக்கம் செலுத்து பவர்களாக இருக்கக் கூடாது. அவ்வாறு செய்பவர்கள் ஷிர்க்கிலேயே ஆழ்ந்து விடுவார்கள். நபி ﷺ அவர்கள், தன்னை அல்லாஹ்வுடைய அடிமை என்றும், அவனுடைய ரஸூல் என்றும் அழைக்குமாறு தான் எமக்குக் கற்றுத் தந்துள்ளார்கள்.

3. நிச்சயமாக நபி ﷺ அவர்கள் மீது விருப்பம் கொள்வதென்றால், அல்லாஹ்வை மட்டும் அழைத்துப் பிரார்த்திப்பதில் நபியவர்களுக்கு வழிபடுவதும், அவனல்லாத வேறு எவரிடமேனும் பிரார்த்திப்பதைத் தவிர்ப்பதுமாகும். அழைக்கப்படுகின்றவர், ரஸூலாகவோ அல்லது நெருக்கமாக வலியாகவோ இருப்பினும் சரியே! பிரார்த்தனைப் பற்றிப் பின்வருமாறு நபி ﷺ அவர்கள் வழி காட்டியுள்ளார்கள். ‘நீ கேட்டால் அல்லாஹ்விடமே கேள்! உதவி கோரினால் அல்லாஹ்விடமே உதவி கோரு! **[*ஆதாரம்: திர்மிதி (ஸஹீஹ்)*]**

நபி ﷺ அவர்களுக்கு ஒரு கவலையோ, துன்பமோ வருமென்றால் பின்வருமாறு ஓதிக்கொள்வதை வழமையாக்கிக் கொண்டவர்களாக இருந்தார்கள்.

'யாஹய்யு யாகய்யூம் பிரஹ்மதிக அஸ்தகீஸு' (உயிருள்ளவனே! என்றும் நிலையானவனே! உன்னுடைய அருளைக் கொண்டு உன்னிடம் இரட்சிப்புக் கோருகிறேன்.) **[*ஆதாரம்: திர்மிதி (ஹஸன்)*]**

எமது துன்பங்களைத் துடைக்குமாறு, அல்லாஹ்விடமே கேட்க வேண்டும் என்பதற்கு நபி ﷺ அவர்கள் மேற்கண்டவாறு வழி காட்டியுள்ளார்கள். அவனையன்றி வேறெவரும் எமது துன்பங்களைத் துடைக்க மாட்டார்.



# ‘இய்யாக நஃபுது வஇய்யாக நஸ்தாஈன்’

(வழிபடுவதும் கொண்டும், பிரார்த்தனை புரிவது கொண்டும், உதவி தேடுவது கொண்டும் உன்னை மட்டுமே சொந்தமாக்குகின்றோம்.)

1. முஸ்லிம்கள் இந்த வசனத்தை ஒரு நாளைக்குப் பல விடுத்தங்கள் தொழுகையினுள்ளும் வெளியிலும் ஓதி வருகின்றனர். இதுதான் ஸூரத்துல் பாத்திஹாவின் சாரமாகும். ஸூரா பாத்திஹா குர்ஆனின் சாரமாகும்.

2. இவ்வசனம், தொழுகை, நேர்ச்சை, அறுத்துப் பலியிடல் போன்ற அனைத்து வணக்கங்களையும் உள்ளடக்குகின்றது. குறிப்பாக ‘அத்துஆஉ ஹுவல் இபாதஃ’ (துஆ என்றால் வணக்கமாகும்) என்று கூறும் நபி ﷺ அவர்களுடைய சொல்லையும் இது உள்ளடக்குகின்றது.

தொழுகை என்ற வணக்கத்தை ஒரு ரஸூலுக்காகவோ, அல்லது ஒரு வலிக்காகவோ செய்வதற்கு எவ்வாறு அனுமதி இல்லையோ, அவ்வாறே ‘துஆ’ என்ற வணக்கத்தையும் எவருக்காகவும் செய்ய முடியாது. இது அல்லாஹ் ஒருவனுக்காக மட்டுமே செய்யப்பட வேண்டிய வணக்கமாகும். இந்த வணக்கம் பற்றிப் பின்வருமாறு அல்லாஹ் கூறுகிறான்.

قُلْ اِنَّمَآ اَدْعُوْا رَبِّىْ وَلَآ اُشْرِكُ بِهٖۤ اَحَدًا

**“(அல்லாஹ் அல்லாதவர்களை அழைக்கக்கூடிய அவர்களுக்கு நபியே!) நீர் கூறும்! நான் பிரார்த்தனை செய்து அழைப்பதெல்லாம் என் இறைவனையே! அவனுக்கு ஒருவரையும் நான் இணையாக்க மாட்டேன்” [அல்குர்ஆன்: 72:20]**

اَنْ لَّآ اِلٰهَ اِلَّآ اَنْتَ سُبْحٰنَكَ ۖ اِنِّىْ كُنْتُ مِنَ الظّٰلِمِيْنَ ۚ

**3. “லாஇலாஹ இல்லா அன்த ஸுப்ஹானக்க இன்னீ குன்து மினள்ளாலிமீன்” (அல்லாஹ்வே! உன்னைத்தவிர வேறெந்த நாயனுமில்லை; நீ மிக்கப் பரிசுத்தமானவன்; நானோ அக்கிரமக்காரர்களில் ஒருவனாகி விட்டேன்)**

**[அல்குர்ஆன்: 21:87]**

என்று யூனுஸ் நபி ﵇ அவர்கள் அல்லாஹ்விடம் கேட்டுள்ளார்கள். ‘இந்த துஆவைக் கொண்டு எந்த ஒரு முஸ்லிம் பிரார்த்தனைப் புரிகிறாரோ, அது நிறைவேற்றப்பட்டே தீரும் என்று நபி ﷺ அவர்கள் கூறியுள்ளார்கள். **[*ஆதாரம்: ஹாகிம் (ஸஹீஹ்)*]**



# 'இஸ்தஇன் பில்லாஹி வஹ்தஹு'

*(அல்லாஹ்விடம் மட்டுமே உதவி கோருவீராக)*

1. 'நீ கேட்டால் அல்லாஹ்விடம் மட்டுமே கேள்! உதவி கோரினால் அல்லாஹ்விடம் மட்டுமே உதவி கோரு!' என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். **[ஆதாரம்: திர்மிதி (ஸஹீஹ்)]**

இமாம் நவவி ﷺ அவர்களும், இப்னு ஹஜர் ஹைதமி ﷺ அவர்களும் இந்த ஹதீஸுக்கு விளக்கமளிக்கையில் பின்வருமாறு கூறுகிறார்கள். 'இவ்வுலக தேவையாயினும் மறு உலக தேவையாயினும் உனக்குத் தேவையேற்படும் போது, அல்லாஹ்விடம் மட்டுமே கேள்! குறிப்பாக அல்லாஹ் அல்லாத எவராலும் நிறைவேற்ற முடியாதவற்றை அவனிடம் மட்டுமே கேள். உதாரணத்திற்கு நோயைக் குணப்படுத்தல், உணவு தேடல், நேர்வழிப் படுத்துமாறு வேண்டுதல் போன்றவை அல்லாஹ்வுக்கு மட்டுமே சொந்தமானவை ஆகும்' இதுபற்றி அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான்.

وَاِنْ يَّمْسَسْكَ اللّٰهُ بِضُرٍّ فَلَا كَاشِفَ لَهٗۤ اِلَّا هُوَ‌ؕ وَاِنْ يَّمْسَسْكَ بِخَيْرٍ فَهُوَ عَلٰى كُلِّ شَىْءٍ قَدِيْرٌ

**"அல்லாஹ் உமக்கு யாதொரு தீங்கிழைத்தால் அதனை நீக்குவோர் அவனையன்றி வேறெவருமில்லை. (அவ்வாறே) உமக்கு யாதொரு நன்மை நேரிடினும் (அதைத் தடுத்து விடக் கூடியவன் எவனுமில்லை) அவன் யாவற்றின் மீதும் மிக்க ஆற்றலுடையவன்" [அல்குர்ஆன்: 6:17]**

2. எவன் அத்தாட்சியை விரும்புகிறானோ, அவனுக்கு அல்குர்ஆன் அத்தாட்சிக்குப் போதுமானதாகும். எவன் தன்னை இரட்சிக்கும் ஒருவனைப்

பெற விரும்புகிறானோ, அவனுக்கு அல்லாஹ் போதுமானவன். எவன் தனக்கு நல்லுபதேசம் புரிகின்ற ஒருவனைப் பெற விரும்புகிறானோ, அவனுக்கு மௌத்து போதுமானதாகும். இவற்றிலிருந்து எதுவும் அவனுக்குப் போதுமென்ற நிலை ஏற்படவில்லையோ அவனுக்கு நரகமே போதுமானதாகும். இதுபற்றி அல்லாஹ் பின்வருமாறு கூறுவதைக் காணலாம்.

اَلَيْسَ اللّٰهُ بِكَافٍ عَبْدَهٗ

**“தன் அடியாருக்கு (வேண்டிய உதவி செய்ய) அல்லாஹ் (ஒருவனே) போதுமானவனல்லவா?” [அல்குர்ஆன்: 39:36]**

3. ‘அல்லாஹ்விடம் மட்டுமே தம் தேவைகளைக் கேட்டுப் பெற வேண்டும்’ என்பது பற்றி அப்துல் காதிருல் ஜீலானிய்யி ﷺ அவர்கள் தமது பத்ஹுர்ரப்பானியில் பின்வருமாறு கூறுகிறார்கள்.

‘நீங்கள் அல்லாஹ்விடமே கேளுங்கள்; அவனல்லாதவனிடம் கேளாதீர்கள்; அல்லாஹ்விடம் மட்டுமே உதவி கோருங்கள்; அவனல்லாத எவரிடமும் உதவி கோராதீர்கள். உனக்கென்ன கேடு பிடித்து விட்டது? (அவனல்லாதவரிடம் கேட்டு விட்டு) நாளை எந்த முகத்துடன் அவனைச் சந்திக்கப் போகிறாய்? இம்மையில் நீ அவனு(அல்லாஹ்வு)டன் போட்டி போடுகிறாய். அவனைப் புறக்கணித்து விட்டு அவனுடைய படைப்புகளிடம் முன்னோக்குகிறாய்; அவனுக்கு இணை கற்பிக்கிறாய். உனது தேவைகளைப் படைப்புகளிடம் முன்வைத்து உனது பொறுப்புகளை அவர்களிடம் காட்டுகிறாய்.

உங்களுக்கும் அல்லாஹ்வுக்கும் இடையில் தரகர்களை அகற்றுங்கள். உங்களிடத்தில் அந்தத் தரகர்களை வைத்திருப்பது ஒரு பைத்தியகாரத் தனமாகும். ஆட்சியோ, அரசுரிமையோ, செல்வமோ, கண்ணியமோ அல்லாஹ்வுக்கன்றி வேறெவருக்குமில்லை. படைப்புகளைக் கைவிட்டு விட்டு அல்லாஹ்வுடன் இருந்து கொள்ளுங்கள். அதாவது படைப்புகளின்

(உண்மைக்கு முரண்பட்ட) வார்த்தைக்கு முக்கியத்துவம் அளிக்காது அல்லாஹ்வுடனேயே இருந்து கொள்ளுங்கள்.

4. மார்க்கம் அனுமதிக்கின்ற உதவிகோரல்: உனது கஷ்டங்களை, தேவைகளை நிவர்த்தி செய்வதற்காக அல்லாஹ்விடம் உதவிகோரல் என்பதற்கு மார்க்கம் அனுமதிக்கின்ற உதவிகோரல் எனப்படும். அல்லாஹ் அல்லாத நபிமார்கள், மரணித்த நல்லடியார்கள், (சத்தத்தைக் கேட்க முடியாத தூரத்தில்) மறைவிலுள்ள உயிருள்ளவர்கள் போன்றவர்களிடம் உதவிகோரல் என்பது இணை கற்பிக்கக்கூடிய உதவிகோரலாகும்.

அல்லாஹ் அல்லாத இவர்கள் நன்மையோ, தீமையோ செய்வதற்குச் சக்திபெற மாட்டார்கள். துஆவையும் செவிதாழ்த்த மாட்டார்கள். அவர்கள் செவிதாழ்த்தினால் கூட எமக்குப் பதிலளிக்க மாட்டார்கள்.

பள்ளிவாசலொன்றைக் கட்டுவது, அல்லது பொருளினால் ஒரு உதவியைச் செய்வது போன்ற உயிருள்ளவர்கள் செய்யச் சக்தியுள்ளவற்றை அவர்களிடம் கேட்பது அனுமதிக்கப்பட்டதாகும். மரணித்தவர்களிடம் கேட்பது இதுவும் சமமாக மாட்டாது. உயிருள்ளவர்கள் தங்களுக்குள் உதவி உபகாரங்கள் செய்து கொள்வது பற்றி அல்லாஹ்வும் அவனுடைய ரஸூலும் பின்வருமாறு கூறுகின்றனர்.

وَتَعَاوَنُوْا عَلَى الْبِرِّ وَالتَّقْوٰى

**“நன்மை செய்வதிலும் (அல்லாஹ்வுக்குப்) பயப்படுவதிலும் நீங்கள் ஒருவருக்கொருவர் உதவியாயிருங்கள்” [அல்குர்ஆன்: 5:2]**

‘ஓர் அடியான் தனது சகோதர அடியானுக்கு உதவும் காலமெல்லாம், அவனுக்கு அல்லாஹ் உதவுகின்றவனாகவே இருக்கின்றான்’

[ஆதாரம்: *முஸ்லிம்*]

உயிருள்ளவர்களிடம் உதவி பெற்றுக்கொள்ள அனுமதியுள்ள வழிகளின் உதாரணங்களிற் சிலவற்றைக் குர்ஆன் பின்வருமாறு கூறுகிறது.

وَدَخَلَ الْمَدِيْنَةَ عَلٰى حِيْنِ غَفْلَةٍ مِّنْ اَهْلِهَا فَوَجَدَ فِيْهَا رَجُلَيْنِ يَقْتَتِلٰنِ هٰذَا مِنْ شِيْعَتِهٖ وَهٰذَا مِنْ عَدُوِّهٖ ۚ فَاسْتَغَاثَهُ الَّذِىْ مِنْ شِيْعَتِهٖ عَلَى الَّذِىْ مِنْ عَدُوِّهٖ ۙ

“(மூஸா (அலை) அவர்கள் ஒரு நாளன்று,) ஜனங்கள் அயர்ந்து இருக்கும் சமயத்தில் அவ்வூரில் சென்றபொழுது இரு வாலிபர்கள் சண்டையிட்டுக் கொண்டிருப்பதை அங்கு அவர் கண்டார். ஒருவன் அவரது இனத்தைச் சேர்ந்தவன்; மற்றொருவன் அவருடைய விரோதிகளைச் சார்ந்தவன். விரோதிக்கு எதிராக உதவி செய்யுமாறு அவருடைய இனத்தைச் சேர்ந்தவன் அவரிடத்தில் வேண்டிக் கொண்டான்” [அல்குர்ஆன்: 28:15]

فَاَعِيْنُوْنِىْ بِقُوَّةٍ اَجْعَلْ بَيْنَكُمْ وَبَيْنَهُمْ رَدْمًا ۙ

“(உங்கள்) உழைப்பைக் கொண்டு எனக்கு உதவி செய்யுங்கள். உங்களுக்கும் (யஃஜூஜ் மஃஜூஜ் என்னும்) அவர்களுக்கு இடையில் உறுதியான ஒரு (மதிற் சுவரைத்) தடுப்பாக எழுப்பி விடுகிறேன். (என்று துல்கர்னைன்(அலை) அவர்கள் தனது ஜனங்களை நோக்கிக் கூறினார்கள்.) [அல்குர்ஆன்: 18:95]



# “அர்–ரஹ்மானு அலல் அர்ஷிஸ்தவா”

*(ரஹ்மான் அர்ஷில் அமைந்து விட்டான்)*

இஸ்தவா என்ற சொல்லுக்கு ‘அல்உலுவ்வு’ என்னும் அல்லாஹ்வுக் குரிய உயர்வை உறுதிப்படுத்தக் கூடியதாக குர்ஆன் வசனங்கள், ஹதீஸ்கள் ஸலபு(முன்னோர்)களின் கூற்றுகள் ஆதாரமாய் அமைந்துள்ளன. பின்வரும் அல்குர்ஆன் வசனங்கள் அல்லாஹ் உயர்வான இடத்தில் அமைந்துள்ளான் என்பதைத் தெளிவுபடுத்துகின்றன.

اِلَيْهِ يَصْعَدُ الْكَلِمُ الطَّيِّبُ وَالْعَمَلُ الصَّالِحُ يَرْفَعُهٗ

**“கலிமாதையிப், ஸலவாத்து போன்ற தூய வாக்கியங்கள் அவனளவில் உயர்கின்றன. நல்ல செயல்களை அவனே உயர்த்துகின்றான்” [அல்குர்ஆன்: 35:10]**

تَعْرُجُ الْمَلٰٓٮِٕكَةُ وَ الرُّوْحُ اِلَيْهِ فِىْ يَوْمٍ كَانَ مِقْدَارُهٗ خَمْسِيْنَ اَلْفَ سَنَةٍ‌ۚ

**“ஐம்பதினாயிரம் வருடங்களுக்குச் சமமான அந்நாளில் மலக்குகளும் (ஜிப்ரீல் ஆகிய பரிசுத்த) ஆவியும் அவனிடத்தில் ஏறிச் செல்வார்கள்” [அல்குர்ஆன்: 70:4]**

سَبِّحِ اسْمَ رَبِّكَ الْاَعْلَىۙ

**“மிக்க மேலான உமது இறைவனின் திருநாமத்தை நீ புகழ்ந்து துதி செய்வீராக!” [அல்குர்ஆன்: 87:1]**

اَلرَّحْمٰنُ عَلَى الْعَرْشِ اسْتَوٰى

**“அர்ரஹ்மான் அர்ஷில் அமைந்துள்ளான்” [அல்குர்ஆன்: 20:5]** உயர்ந்தான், அமைந்தான் என்று அர்த்தங்கொள்ளப்படும் ‘இஸ்தவா’ என்ற சொல்லைத் தாங்கியதாக, மேற்கண்டவாறு குர்ஆனில் ஏழு இடங்களில் வருவதைக் காணலாம். அனைத்து இடங்களிலும் ஒரே அர்த்தத்துடனேயே இது

அமைந்துள்ளது. அந்த வசனங்களாவனः அல்குர்ஆன்ः 7ः 54, 10ः 3, 13ः 2, 25ः 59, 32ः 4, 57ः 4.

இமாம் புகாரி ﵀ அவர்கள், புகாரியில் தௌஹீத் என்ற பாடத்தில் மேற்காட்டிய வசனங்களிலுள்ள 'இஸ்தவா' என்ற சொல்லுக்கு அபுல் ஆலியா ﵀ முஜாஹித் ﵀ ஆகியோர் மூலம் வந்த கருத்தென்பதாகக் கூறி 'அலா' (உயர்ந்தான்) என்றும் 'இர்தபஅ' (உயர்ந்தான்) என்றும் அர்த்தம் கொடுத்துள்ளார்கள். தப்ஸீர் தபரியில் 'அலா' என்றும் 'இர்தபஅ' என்றும் புகாரியில் வருவது போலவே அர்த்தம் கொடுக்கப்பட்டுள்ளது.

நபி ﷺ அவர்கள் தனது பிரியாவிடை ஹஜ்ஜின் போது அரபா நாளன்று பின்வருமாறு கூறினார்கள். 'நான் உங்களுக்கு எத்தி வைக்க வேண்டியவற்றை எத்தி வைத்து விட்டேனா? என்று (ஸஹாபாக்களை நோக்கிக்) கேட்டார்கள். அப்பொழுது அவர்கள் ஆம்! எனப் பதிலளித்தார்கள்.

அந்நேரத்தில் நபி ﷺ அவர்கள் தனது விரலை வானத்தின் பக்கம் நீட்டி, அதனை மனிதர்கள் பக்கம் சுட்டிக்காட்டி 'அல்லாஹ்வே! (நான் எத்தி வைத்ததற்கு) நீ சாட்சியாயிருப்பாயாக!' என்று கூறினார்கள்.

**[ஆதாரம்: *முஸ்லிம்*]**

'அல்லாஹ் ஒரு பதிவேட்டில் பதிந்து வைத்துள்ளான். அது அவனிடத்தில் அர்ஷில் இருக்கின்றது' என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். **[ஆதாரம்: *புகாரி, முஸ்லிம்*]**

'நீங்கள் என்மீது நம்பிக்கை கொள்ள மாட்டீர்களா? நானோ வானத்தில் உள்ளவனுடைய நம்பிக்கைக்கு உரியவன். காலையிலும் மாலையிலும் வானத்திலிருந்து எனக்குச் செய்திகள் வந்து கொண்டிருக் கின்றன' என்று நபி ﷺ அவர்கள் (தனது தோழர்களை நோக்கிக்) கூறினார்கள். **[ஆதாரம்: *புகாரி, முஸ்லிம்*]**

'நிச்சயமாக அல்லாஹ் தனது அர்ஷில் அமைந்துள்ளான் என்ற கருத்திலும், அவனுடைய ஸிபத்துகளைப் பற்றி ஸுன்னாவில் வந்துள்ளதை (வேறு அர்த்தம் கொடுக்காமல் வந்துள்ளவாறே) நம்புவதில் நாமும், தாபியீன்கள் அனைவரும் ஒத்த கருத்துள்ளவர்களாக இருக்கின்றோம்' என்று இமாம் அப்துர்ரஹ்மான் அல்அவுஸாயீ ﷺ அவர்கள் கூறினார்கள்.

[*ஆதாரம்: பைஹகீ (ஸஹீஹ்), பத்ஹுல் பாரி*]

'நிச்சயமாக அல்லாஹ் தனது வானத்தில் அர்ஷின் மீது அமைந்துள்ளான். தனது படைப்புகளில் தான் விரும்பியவர்களிடம் நெருங்குகிறான்' என்று இமாம் ஷாபிஈ ﷺ அவர்கள் கூறியுள்ளார்கள்.

இமாம் அபூஹனீபா ﷺ அவர்கள் பின்வருமாறு கூறுகிறார்கள். 'அல்லாஹ் வானத்தில் இருக்கிறான் என்றோ, பூமியில் இருக்கிறான் என்றோ எனக்குத் தெரியாது என்று எவனாவது சொன்னால், அவன் காபிராவான். ஏனென்றால் 'அர்-ரஹ்மானு அலல் அர்ஷிஸ்தவா' (அர்-ரஹ்மான் அர்ஷில் அமைந்துள்ளான்) என்று அல்லாஹ் கூறியுள்ளான். அவனுடைய அர்ஷு ஏழு வானங்களுக்கு மேல் அமைந்துள்ளது'.

மேலும், அவன் 'அல்லாஹ் அர்ஷின் மீது அமந்துள்ளான் என்ற கருத்தைப் பற்றி, 'அந்த அர்ஷு வானத்தில் இருக்கின்றதா? அல்லது பூமியில் இருக்கின்றதா? என்பதை நானறியேன்' என்று சொன்னாலும் காபிராவான். ஏனென்றால் இதன் மூலம் அல்லாஹ்வுடைய அர்ஷு உயர்ந்த இடத்தில் இருக்கின்றது, அல்லாஹ் உயர்ந்த இடத்தில் இருக்கின்றான் என்ற உண்மையை நிராகரிக்கின்றான்'.

'அல்லாஹ் உயர்வான இடத்தில் இருப்பதை எவன் நிராகரிக் கின்றானோ, அவனும் காபிராவான். அல்லாஹ் மிகமிக உயர்வான இடத்திலேயே இருக்கின்றான். அவன் உயர்ந்த இடத்தில் இருக்கின்ற நிலையிலேயே அழைக்கப்படுகிறான். தாழ்ந்த இடத்தில் இருக்கும் நிலையில் அவன் அழைக்கப்படமாட்டான்'.

[*ஆதாரம்: ஷரஹுல் அகீததித் தஹாவியா பக்கம்: 322*]

'அல்லாஹ் அர்ஷில் அமைந்துள்ளான்' என்பது பற்றி இமாம் மாலிக் ﵀ அவர்களிடம் விளக்கம் கேட்கப்பட்டது. இதனைக் கேட்டவர்களை நோக்கி 'அர்ஷில் அமைந்து விட்டான் என்பது அறியக்கூடிய ஒன்றாகும்; அது எப்படி? என்பது தான் அறியமுடியாத ஒன்றாகும்; அர்ஷில் அமைந்து விட்டான் என்பதை நம்புவது வாஜிபாகும்; அது எப்படி? என்று (குர்ஆனிலும் ஸுன்னாவிலும் சொல்லப்பட்டதை விட அதிகமாகக்) கேள்வி கேட்பது பித்அத்தாகும்; இவ்வாறான கேள்வி கேட்பவனை உங்களுடைய இடத்திலிருந்து வெளியேற்றி விடுங்கள்' என்று இமாமவர்கள் பதிலளித்தார்கள்.

'இஸ்தவா' என்ற சொல்லுக்கு 'இஸ்தவுலா' (அதிகாரம் செலுத்தினான், ஆட்சி செய்தான்) என்று விளக்கமளிப்பது தவறாகும். ஏனென்றால், ஸலபு(முன்னோர்)களின் வழிமுறையில் அவ்வாறான விளக்கம் எதுவும் எமக்குக் கிடைக்கவில்லை. அவர்கள் வாழ்ந்த வழி ஈடேற்றமுடையதும், சரியானதும், மிக்க ஞானம் நிரம்பியதுமாகும்.

இமாம் இப்னுல் கையிம் அல்ஜவுஸிய்யி ﵀ அவர்கள் பின் வருமாறு கூறுகிறார்கள். 'அல்லாஹ் யூதர்களை நோக்கி, 'ஹித்ததுன்' (மன்னிப்பளிப்பாயாக!) என்று கூறி அவனிடம் பிரார்த்திக்குமாறு கட்டளையிட்டான். அவர்கள் அதனைத் தமது விருப்பப்படி மாற்றி 'ஹின்ததுன்' (கோதுமை) என்று கூறினார்கள்.

அல்லாஹ் எமக்கு 'இஸ்தவா அலல் அர்ஷி' என்பதில் 'இஸ்தவா' என்று கற்றுத் தந்துள்ள சொல்லைத் தமது விருப்பப்படி கருத்துச் சொல்லுகின்றவர்கள், 'இஸ்தவுலா' என்று மாற்றிக் கூறியுள்ளார்கள். யூதர்கள் தமக்குக் கற்பிக்கப்பட்ட ஒரு சொல்லில் ஒரு 'நூன்' ஐ அதிகப் படுத்தியுள்ளது போலவே குர்ஆனுக்குச் சொந்தக் கருத்துக் கூறுகின்றவர்கள் ஒரு 'லாம்' ஐ அதிகப் படுத்தியுள்ளனர். மார்க்கத்தில் மாற்றம்

கொண்டு வருவதில் இவர்கள் இரு சாராருக்கும் இடையில் எந்தளவு பொருத்தம் இருக்கின்றது? இப்னுல் கையிமுல் ஜவுஸிய்யி ﷀ அவர்களுடைய இக்கூற்றை முஹம்மத் அமீன் சன்கீதீ அவர்கள் திரட்டித் தந்துள்ளார்கள்.



# தௌஹீதின் முக்கியத்துவம்

அல்லாஹ் உலகோர்களைத் தனக்கு வழிபடுவதற்காவே படைத்துள்ளான். அல்குர்ஆன் தனது அதிகமான அத்தியாயங்களில் ஏகத்துவக் கொள்கையையே வலியுறுத்திக் கொண்டிருக்கின்றது. தனிமனிதனுக்கும், சமூகத்துக்கும் ஷிர்க்குடைய தீய விளைவுகளைப் பற்றி வலியுறுத்திக் கூறிக் கொண்டிருக்கின்றது. இது, இம்மையில் அழிவுக்கும், மறுமையில் நிரந்தர நரக வாழ்க்கைக்கும் காரணமாய் அமைகின்றது.

ரஸுல்மார்கள் அனைவரும் தமக்கு அல்லாஹ் கட்டளையிட்டபடி, தௌஹீதைக் கொண்டே பிரசாரத்தை ஆரம்பித்துள்ளார்கள். இதுபற்றி அல்லாஹ் பின்வருமாறு கூறியுள்ளான்.

وَمَآ اَرْسَلْنَا مِنْ قَبْلِكَ مِنْ رَّسُوْلٍ اِلَّا نُوْحِىْٓ اِلَيْهِ اَنَّهٗ لَآ اِلٰهَ اِلَّآ اَنَا فَاعْبُدُوْنِ

**“(நபியே!) உமக்கு முன்னர் நாம் அனுப்பிய தூதர்களுக்கெல்லாம், நிச்சயமாக என்னைத் தவிர வேறு நாயனில்லை; எனவே என்னையே நீங்கள் வணங்குங்கள் என்று நாம் வஹீ அறிவிக்காமலில்லை” [அல்குர்ஆன்: 21:25]**

எங்கள் பால் அனுப்பப்பட்ட ரஸுலுல்லாஹி ﷺ அவர்கள் மக்காவில் வாழ்ந்த 13 வருடகாலங்களில் 12 வருடங்களாகத் தௌஹீதையே போதித்துக்கொண்டிருந்தார்கள். அக்காலங்களில் அல்லாஹ் அருளியவற்றில் பின்வரும் வசனமும் இடம் பெற்றுள்ளது.

قُلْ اِنَّمَآ اَدْعُوْا رَبِّىْ وَلَآ اُشْرِكُ بِهٖٓ اَحَدًا

**“(நபியே! ஜனங்களுக்கு) நீர் கூறும்: நான் பிரார்த்தனை செய்து அழைப்பதெல்லாம் எனது இறைவனையே! அவனுக்கு ஒருவரையும் நான் இணையாக்க மாட்டேன்” [அல்குர்ஆன்: 72:20]**

நபி ﷺ அவர்கள் தன்னைப் பின்பற்றியோரைச் சிறுபிராயம் முதலே தௌஹீதுடைய வழியில் பயிற்றுவிப்பவர்களாக இருந்தனர். தனது சாச்சாவின் மகன் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ؓ அவர்களுக்குப் பின்வருமாறு அறிவுரை கூறினார்கள்.

'நீ கேட்டால் அல்லாஹ்விடமே கேள்! உதவி கோரினாலும் அல்லாஹ்விடமே உதவி கோருவாயாக! **[ஆதாரம்: திர்மிதி (ஸஹீஹ்)]**

தௌஹீத் என்பது இஸ்லாம் அதன்மீது கட்டி எழுப்பப்பட்ட அடிப்படை அஸ்திவாரம் என்றும், இதல்லாத வேறெந்த வணக்கமாயினும் இது இல்லாமல் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது என்றும் கூறுமளவு இது முக்கியத்துவம் பெற்றுள்ளது.

நபி ﷺ அவர்கள், தௌஹீதைக் கொண்டே இஸ்லாமியப் பிரசாரத்தை ஆரம்பிக்குமாறு தனது தோழர்களுக்குக் கற்றுக் கொடுத் துள்ளார்கள். முஆத் ؓ அவர்களை நபியவர்கள் யமனுக்கு அனுப்பிய போது,

'முஆதே! நீ மக்களை இஸ்லாத்தின்பால் அழைக்கும் போது முதலாவதாக 'லாஇலாஹ இல்லல்லாஹ்' வைக் கொண்டே அழைப்பீராக!' என்று கூறி அனுப்பினார்கள். **[ஆதாரம்: புகாரி, முஸ்லிம்]**

'லாஇலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் ரஸூலுல்லாஹ்' என்று கூறுவதிலேயே தௌஹீத் உருவம் பெறுகின்றது. அதன் அர்த்தம் 'அல்லாஹ்வையன்றி வணக்கத்துகுரியவன் வேறெவனுமில்லை என்பதும், வணக்கம் என்பது அவனுடைய ரஸூல் ﷺ அவர்கள் கொண்டு வந்ததாகும்' என்பதுமாகும்.

இந்த கலிமாதான் காஃபிர்களை இஸ்லாத்தினுள் பிரவேசிக்கச் செய்கின்றது. ஏனென்றால் இது சுவர்க்கத்தின் திறவுகோலாகும். இதனை மொழிந்தவன் இதற்கு மாறான செயல்களைக் கொண்டு இதனை முறித்து விடாதிருந்தால், இது அவனை சுவர்க்கத்தில் பிரவேசிக்கச் செய்கின்றது.

குறைஷிக் காஃபிர்கள் நபி ﷺ அவர்களுக்கு அரசாட்சி, பணம், அழகியபெண் போன்றவற்றைத் தருவதாகவும், அவர்களது தௌஹீதுப் பிரசாரத்தைக் கைவிட்டுவிட்டு, சிலை வணக்கத்தை எதிர்ப்பதை விடுமாறும் கூறினார்கள். அவை எதனையும் அவர்களிடமிருந்து நபியவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை.

13 வருடங்களுக்குப் பின்னால் தௌஹீதுக்கு வெற்றி கிடைக்கும் வரை தானும், தனது தோழர்களும், பிரசாரத்தில் நிலையாகவும் உறுதி யாகவும் இருந்தார்கள். இதன் பின்னால் தான் மக்கா வெற்றிக் கொள்ளப் பட்டு, சிலைகள் உடைத்துத் தகர்க்கப்பட்டன. அவ்வேளையில் அல்லாஹ் வுடைய ரஸூல் ﷺ அவர்கள்,

وَقُلْ جَآءَ الْحَـقُّ وَزَهَقَ الْبَاطِلُ ۚ اِنَّ الْبَاطِلَ كَانَ زَهُوْقًا

**“சத்தியம் வந்தது; அசத்தியம் அழிந்தது; நிச்சயமாக அசத்தியம் அழிந்தே தீரும்” [அல்குர்ஆன்: 17:81]** என்ற அல்குர்ஆன் வசனத்தை ஓதினார்கள்.

‘தௌஹீத்’ என்பது ஒரு முஸ்லிமுடைய வாழ்க்கையின் தொழிற்பாடாகும். அவன் வாழ்க்கையைத் தௌஹீதைக் கொண்டே ஆரம்பிக்கிறான். அதனை முடிப்பதும் தௌஹீதை (ஸகராத்தின் போது கலிமாவை)க் கொண்டுதான். சமூக வாழ்க்கையில் அவனது தொழில் தௌஹீதை நிலைநாட்டுவதும், அதன்பால் அழைப்பு விடுப்பதுமாகும். ஏனென்றால் தௌஹீத் என்பது மூமின்களை ஐக்கியப்படுத்தி கலிமதுத் தௌஹீதில் ஒன்று படுத்துகின்றது. இவ்வுலக வாழ்வில், கலிமதுத்தௌஹீத் எமது கடைசிப் பேச்சாக அமைவதற்கு அல்லாஹ்விடம் கெஞ்சிக் கேட்போமாக!



# தௌஹீதுடைய சிறப்புகளில் சில..

اَلَّذِيْنَ اٰمَنُوْا وَلَمْ يَلْبِسُوْٓا اِيْمَانَهُمْ بِظُلْمٍ اُولٰٓئِكَ لَهُمُ الْاَمْنُ وَهُمْ مُّهْتَدُوْنَ

**“எவர்கள் விசுவாசம் கொண்டு, தங்கள் விசுவாசத்துடன் யாதொரு அக்கிரமத்தை (ஷிர்க்கை)யும் கலந்து விடவில்லையோ அவர்களுக்கு நிச்சயமாக அபயமுண்டு; அவர்கள் தான் நேரான வழியிலும் இருக்கின்றனர்”**

**[அல்குர்ஆன்: 6:82]**

மேற்கண்ட வசனம் அருளப்பட்ட போது ஸஹாபாக்களின் நிலைபற்றி இப்னு மஸ்ஊத் ﷺ அவர்கள் பின்வருமாறு கூறுகின்றார்கள்.

‘ஸஹாபாக்கள் நபியவர்களை நோக்கி, அல்லாஹ்வின் ரஸூலே! எங்களில் எவர்தான் அநியாயம் செய்யாதவர்கள் இருப்பார்கள் என்று வினவினார்கள். அப்பொழுது நபியவர்கள் இதன் அர்த்தம் நீங்கள் கருதுவதன்று. இணைவைத்தலையே இது குறிக்கின்றது என்று கூறிவிட்டு,

وَاِذْ قَالَ لُقْمٰنُ لِا بْنِهٖ وَهُوَ يَعِظُهٗ يٰبُنَىَّ لَا تُشْرِكْ بِاللّٰهِ‌ؕ اِنَّ الشِّرْكَ لَـظُلْمٌ عَظِيْمٌ

**“லுக்மான் (அலை) அவர்கள் தனது மகனை நோக்கி, எனதருமை மகனே! நீ அல்லாஹ்வுக்கு ஷிர்க் வைக்காதே! நிச்சயமாக ஷிர்க் மாபெரும் அக்கிரமமாகும்”**

**[அல்குர்ஆன்: 31:13]**

என்று செய்த உபதேசத்தை (குர்ஆனில்) நீங்கள் செவிதாழ்த்த வில்லையா? என்று கேட்டார்கள். [*ஆதாரம்: புகாரி, முஸ்லிம்*]

மேற்கண்ட வசனம் ஷிர்க்கில் தமது ஈமானைக் கலந்து கொள்ளாமல் அதனைவிட்டுத் தூர விலகக்கூடிய மூமின்களுக்கு நன்மாராயம் கூறுகின்றது. மறுமையில் அல்லாஹ்வுடைய தண்டனையிலிருந்து இவர்களு க்குப் பூரண

பாதுகாப்புண்டு; இவர்கள் தான் இவ்வுலகில் நேரான வழியில் இருப்போராவர்.

'ஈமான் அறுபதுக்கும், எழுபதுக்கும் இடைப்பட்ட கிளைகள் கொண்டதாகும்; அவற்றில் மிகவரிசை மிக்கது, லாஇலாஹ இல்லல்லாஹ் என்று மொழிவதாகும்; மிகத் தாழ்ந்தது, பாதையில் (பிறருக்குத்) தீங்கு ஏற்படுத்தக்கூடியதை நீக்குவதாகும்' என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.

**[ஆதாரம்: முஸ்லிம்]**

அஷ்ஷெய்க் அப்துல்லாஹ் ஹையாத் அவர்கள் 'தலீலுல் முஸ்லிம் பில்-இஃதிகாத் வத்-தத்ஹீர்' என்ற நூலில் பின்வருமாறு கூறுகிறார்கள். 'தௌஹீத் என்பது நற்பாக்கியத்தை ஏற்படுத்தி, பாவங்களை அகற்றக் காரணமாய் அமைகின்றது. மனித சட்டத்தைக் கொண்டு தீர்ப்பு வழங்குவதாலும் கவனயீனத்தினாலும் மனிதன் சில வேளைகளில் கால் சறுகி, அல்லாஹ்வுக்கு மாறு செய்பவனாக மாறி விடுகின்றான். அவன் ஷிர்க்கென்னும் அழுக்கிலிருந்து நீங்கி, பரிசுத்தமான தௌஹீதுடைய வர்களில் இருப்பானென்றால், அவனுடைய தௌஹீத் அல்லாஹ்வுக்காகவே இருக்கும்.

லாஇலாஹ இல்லல்லாஹ்வை அவன் தூய உள்ளத்துடன் மொழிவதானது, நற்பாக்கியத்தியதிலே அவனை ஓர் உயர்ந்த நிலைக்கு அது ஏற்படுத்தி, அவனுடைய பாவங்களுக்குப் பரிகாரமாக அமைந்து, தீமைகள் அழிக்கப்பட இடமுண்டாகிறது. பின்வரும் ஹதீஸ் இதற்குப் பொருத்தமாக அமைவதைக் காணலாம்.

'எவனொருவன், அல்லாஹ்வைத்தவிர வேறெந்த நாயனுமில்லை; அவன் தனித்தவன்; அவனுக்கு யாதொரு இணையுமில்லை என்றும், முஹம்மத் ﷺ அவர்கள் அவனுடைய அடியாரும், அவனுடைய ரஸூலு மாவார்கள் என்றும், ஈஸா عليه السلام அவர்கள், அல்லாஹ்வுடைய அடியாரும், அவனுடைய ரஸூலும், மர்யம் عليها السلام அவர்கள் பால் 'ஆகு' என்று

சொன்ன சொல்லும், அவனிடமிருந்துள்ள ரூஹூ(ஆவியு)மாவார்கள் என்றும் சான்று கூறி உரைக்கிறானோ அவனை அவன் செய்திருந்த செயலுக்குத் தக்கவாறு அல்லாஹ் சுவர்க்கத்தில் பிரவேசிக்கச் செய்வான்'.

**[ஆதாரம்: *புகாரி, முஸ்லிம்*]**

மேற்காட்டிய ஹதீஸில் அமைந்துள்ள ஷஹாதாக்கள் அனைத்தைக் கொண்டும், 'ஷஹாதா' உரைக்கக்கூடிய முஸ்லிமுக்கு, 'தாருன்நஈம்' (அருட்பாக்கியம் நிறைந்த வீடு) என்னும் சுவர்க்கம் வாஜிபாகின்றது. பின்வரும் ஹதீஸுல் குதுஸியில் அல்லாஹ் சொல்லுகின்றவாறு அவனுடைய வணக்க வழிபாடுகளில் சில குறைகள் பிழைகள் இருப்பினும் கூட அவன்மீது அது குற்றமாகக் காணப்பட மாட்டாது.

'மனிதனே! நீ எனக்கு எதனையும் இணையாக்காத நிலையில் பூமியின் நிறையளவு பாவத்துடன் (மறுமையில்) என்னைச் சந்தித்தாலும், நான் அதே அளவு மன்னிப்புடன் உன்னிடம் வருவேன்'

**[ஆதாரம்: *திர்மிதி (ஹஸன்)*]**

மேற்காட்டிய ஹதீஸின் அர்த்தம் யாதெனில், பூமி நிறைந்து விடுமளவு பாவங்கள் செய்த நிலையில் நீ என்னிடம் வந்தாலும் தௌஹீதுடைய நிலையில் நீ மௌத்தாகியிருந்தால், உனது பாவங்கள் அனைத்தையும் நான் மன்னிப்பேன் என்பதாகும்.

'அல்லாஹ்வுக்கு எதனையும் இணையாக்காமல் (மறுமையில்) அவனைச் சந்திக்கின்றவன் சுவர்க்கம் பிரவேசிப்பான்; அவனுக்கு எதனையும் இணையாக்கினவனாக அவனைச் சந்திக்கின்றவன் நரகம் பிரவேசிப்பான்' என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். **[ஆதாரம்: *முஸ்லிம்*]**

இந்த ஹதீஸ்கள் அனைத்தும் தௌஹீதுடைய சிறப்புக்களைத் தெளிவுபடுத்திக்கொண்டிருக்கின்றன. ஒரு மனிதனுடைய நற்பாக்கியத்துக்கு, இது மிக மேலானதோர் அமலாக (செயலாக)வும், அவனுடைய பாவங்க

ளுக்குப் பரிகாரம் தேடுவதற்கும் குற்றங்கள் மன்னிக்கப்படுவதற்கும் மாபெரியதொரு வஸீலாவாக (வழியாக)வும் இருக்கின்றது.



# தௌஹீதுடைய பயன்களிற் சில..

ஒரு தனி மனிதனிடத்திலோ, அல்லது ஒரு ஜமாஅத்திடத்திலோ 'தௌஹீத்' உறுதிப் படுத்தப்பட்டு விட்டால், அப்பொழுது மிகச் சிறந்த சில கனிவர்க்கங்கள் அவர்களுக்குக் கிடைப்பது நிச்சயமாகி விடும். அவற்றில் சில...

1. மனிதன், அல்லாஹ் அல்லாதவர்களுக்கும், தாமே படைக்கப் பட்டிருக்கையில் எதனையும் படைக்கச் சக்தியற்ற படைப்புகளுக்கும் வணக்கம் செலுத்துவதிலிருந்தும், அவர்களுக்கு பணிந்து நடப்பதிலிருந்தும் அவனை விடுவிப்பதாகும். இது மேற்கூறப்பட்டவற்றில் முதலாவதாகும்.

அல்லாஹ் அல்லாத, வணங்கப்படுகின்றவர்கள் தமக்குத்தாமே நன்மையோ, தீமையோ செய்துகொள்ளச் சக்தியற்றவர்கள். மரணத்தை ஏற்படுத்தவோ, வாழ்க்கையை கொடுக்கவோ, அல்லது மரணித்தவனை எழுப்பவோ அவர்கள் சக்தியற்றவர்கள்.

தௌஹீத் என்றால், அல்லாஹ்வைத் தவிர வேறெந்த வஸ்துவுக்கும் அடிபணிவதிலிருந்து மனிதனைக் காப்பதும், அவனை, அனாச்சாரங்கள், சந்தேகங்கள், மனோ இச்சைக்கு வழிபடுதல், அலட்சியமான போக்கில் வாழ்க்கையை அமைத்துக்கொள்ளல், ஜோதிடர்களையும், எஜமானர் களையும் இரட்சகர்களாக ஆக்கிக்கொள்ளல், அல்லாஹ்வுக்கு வழிபடுவதை விட அதிகமாக இவர்களுக்கு வழிபடுதல் போன்றவற்றிலிருந்தும், இவை போன்ற இன்னும் பல நடை முறைகளிலிருந்தும் பாதுகாப்பதாகும்.

இதற்காகத்தான் ஷிர்க்கை நிலைநாட்டிக்கொண்டிருந்த தலைவர்களும், அறியாமைக்கால வம்பர்களும் பொதுவாக நபிமார்களுடைய பிரசாரத்தை,

குறிப்பாக நபி ﷺ அவர்களுடைய பிரசாரத்தை எதிர்த்தனர். ஏனென்றால் அவர்கள் லாஇலாஹ இல்லல்லாஹ்வுடைய அர்த்தத்தை அறிந்தவர்களாகவே இருந்தனர்.

இந்தக்கலிமா மனிதனுக்குச் சுதந்திரத்தை ஏற்படுத்திக் கொடுப்பதுடன் கொடுங்கோலாட்சியையும், பொய்யான தலைவர்களையும் வீழ்த்தி, 'அல்லாஹ்வுக்கன்றி வேறெவருக்கும் தலை வணங்க மாட்டோம்' என்பதில் உறுதியான மூமின்களுக்கு உயர்வைத் தேடிக்கொடுக்கக் கூடியது என்பதையும் இஸ்லாத்தின் அவ்வெதிரிகள் அறிந்திருந்தனர்.

2. மனிதனை நீதமாக அமைத்துவிடல்: தௌஹீத், மனிதனை நீதியான முறையில் நடப்பதற்கு உதவுகின்றது. 'இரகசியத்திலும் வெளிப் படையாகவும் அவனுக்கு ஒரே ஒரு இறைவன் தான் உண்டு' என்று அது தனது நோக்கத்தில் ஒரு நிலையான தன்மையைக் காட்டுகின்றது.

வணக்கத்துக்கு உரியவைகளும், பல கடவுள்களும் ஒரு முஷ்ரிக் குடைய உள்ளத்தைப் பல பிரிவுகளாகக் கூறுபோட்டுக் கொண்டதற்கு மாறாக, இந்தத் தௌஹீத் இரகசியத்திலும், பகிரங்கத்திலும் ஒரே இறைவனின் பக்கம் மனிதனை அழைக்கின்றது. அந்த முஷ்ரிக் ஒரு விடுத்தம் உயிருள்ளவர்களிடம் கேட்கிறான்; இன்னொரு விடுத்தம் இறந்தவர்களிடம் கேட்கிறான். யூஸுப் عليه السلام அவர்கள் கூறியதை இங்கு கூறுவது பொருத்தமாகும். யூஸுப் عليه السلام அவர்கள் சிறைக் கூடத்திலிருந்த போது, அங்கு தன்னுடனிருந்த இருவரை நோக்கி:-

يٰصَاحِبَىِ السِّجْنِ ءَاَرْبَابٌ مُّتَفَرِّقُوْنَ خَيْرٌ اَمِ اللّٰهُ الْوَاحِدُ الْقَهَّارُ

**"சிறைக் கூடத்திலிருக்கும் என்னிரு தோழர்களே! (யாதொரு சக்தியுமற்ற) வெவ்வேறுபட்ட தெய்வங்கள் மேலா? அல்லது (யாவரையும்) அடக்கி ஆளுகின்ற (ஒரே இறைவனான) அல்லாஹ் ஒருவனே மேலா?" [அல்குர்ஆன்: 12:39]**

ஒரு மூமின் ஒரேயொரு இறைவனை மட்டுமே வணங்குகிறான். 'அவனை திருப்திப் படுத்துவது எது? கோபப் படுத்துவது எது?' என்பதையும் அவன் அறிகிறான். அவனைத் திருப்திப் படுத்துவதுடன் இந்த மூமின் நின்று கொள்கிறான். இதன் மூலம் இவனுடைய உள்ளம் அமைதி பெறுகின்றது.

முஷ்ரிக் என்பவனோ, அதிகமான கடவுள்களை வணங்குகிறான். வலது பக்கமாக ஒரு தெய்வத்தை எடுத்துக் கொள்கிறான்; இடது பக்கமாக மற்றொரு தெய்வத்தை எடுத்துக் கொள்கிறான். இவ்வாறாக பல தெய்வங்களுக்கிடையில் பங்குபோட்டுப் பல கூறாகப் பிரிக்கப்படுகிறான். இவனுக்கொரு நிலையான தன்மையில்லை.

3. தௌஹீத், மனிதர்களின் பாதுகாப்புக்கு முதற்படியாகும்: ஏனென்றால் அதனை ஏற்றுக் கொண்டவனுடைய உள்ளத்தை, அது நம்பிக்கையாலும், அமைதியாலும் நிரப்புகின்றது. அப்பொழுது அவன் அல்லாஹ் அல்லாத எவருக்கும் அஞ்சமாட்டான். உயிர், பொருள், உணவு, குடும்பம் போன்றவை இதனை ஏற்றுக் கொள்வதால் அழிந்து விடுமா? என்ற அச்சத்தையும் அது நீக்கி விடும். மனிதன், ஜின் மரணம் ஆகியவற்றினால் ஏற்படும் அச்சத்தையும் அது அகற்றிவிடும்.

தௌஹீதுடைய அடிப்படையிலுள்ள ஒரு மூமின் அல்லாஹ்வை யன்றி வேறெவருக்கும் அஞ்சமாட்டான். இதனால்தான் மனிதர்கள் பயப்படும் வேளைகளில் கூட அவனை அச்சமற்றவனாகவே நீ கண்டு கொள்கிறாய்; மனிதர்கள் கலக்கமுறும் வேளைகளில் அவனை அமைதியாக கண்டு கொள்கிறாய். இவ்வர்த்தத்தின் அடிப்படையில் அல்குர்ஆன் பின்வருமாறு கூறுகின்றது.

اَلَّذِيْنَ اٰمَنُوْا وَلَمْ يَلْبِسُوْٓا اِيْمَانَهُمْ بِظُلْمٍ اُولٰٓئِكَ لَهُمُ الْاَمْنُ وَهُمْ مُّهْتَدُوْنَ

**“எவர்கள் மெய்யாகவே ஈமான் கொண்டு, தங்கள் ஈமானுடன், யாதோர் அக்கிரமத்தையும் கலந்து விடவில்லையோ, அவர்களுக்கு நிச்சயமாகப் பாதுகாப்புண்டு; அவர்கள் தான் நேரான வழியிலும் இருக்கின்றனர்”**

**[அல்குர்ஆன்: 6:82]**

அச்சமற்ற இந்த நிலை உள்ளத்தின் அடித்தளத்திலிருந்து உதயமாகின்றது. இது மக்களைப் பாதுகாக்கும் அரசாங்கத்தின் பாதுகாவலர்களால் ஏற்படுத்தப்படும் பாதுகாப்பின் மூலம் ஏற்படும் நம்பிக்கையன்று. அரசுகளின் பாதுகாப்பின் மூலம் ஏற்படுத்தப்படும் இந்நம்பிக்கை இம்மையில் மட்டுமுள்ளதாகும். ஆனால் மறுமையிலுள்ள அச்சமற்ற நிலையோ மிக மகத்தானதும், நிலையானதுமாகும். ஏனென்றால் மூமின்களாகிய அவர்கள் பரிசுத்த எண்ணத்துடன் அல்லாஹ்வுக்காகவே செயல்படுகின்றவர்கள் ஆவர். அவர்கள் தங்களது தௌஹீதுடன் ஷிர்க்கைக் கலந்து விடாதவர்கள். ஷிர்க்கு என்னும் தீமையோ, மாபெரும் அக்கிரமமாகும்.

4. தௌஹீத் உள்ளத்தின் சக்திக்குரிய அடித்தளமாகும்: ஏனென்றால், அல்லாஹ்வின் மீது பூரண நம்பிக்கை வைப்பதற்காகவும், அவனிடம் பொறுப்புகளைப் பாரம் சாட்டுவதற்காகவும், அவனுடைய தீர்ப்புகளைத் திருப்தியாக ஏற்றுக் கொள்வதற்காகவும், அவனுடைய சோதனைகளைப் பொறுமையாகச் சகித்துக்கொள்வதற்காகவும், அவனுடைய படைப்புகளிடம் தேவையற்றிருப்பதற்காகவும் தௌஹீதை ஏற்றுக்கொண்டவனுக்குப் பெறுமதி வாய்ந்த சக்திமிக்க வெகுமதிகளை அது அளிக்கின்றது.

அவன் மலையைப் போன்று உறுதியாக நிற்பவனாவான். அவனுக்கு யாதொரு துன்பம் வந்து விட்டாலோ, அதனை நீக்குமாறு அவனுடைய ரப்பாகிய அல்லாஹ்விடம் மட்டுமே கேட்பான். மரணித்தவர்களிடம் எதனையும் கேட்க மாட்டான். நபி ﷺ அவர்களுடைய பின்வரும் சொல் இதற்கு ஆதாரமாய் அமைகின்றது.

'நீ கேட்டால் அல்லாஹ்விடமே கேள்! உதவிகோரினால் அல்லாஹ் விடமே உதவி கோரு!' **[ஆதாரம்: திர்மிதி (ஸஹீஹ்)]**

துயரத்தைத் துடைத்து இரட்சிப்பவன் அல்லாஹ்வையன்றி வேறெவருமில்லை என்பதைப் பின்வரும் அல்குர்ஆன் வசனம் கூறுவதைக் காணலாம்.

وَاِنْ يَّمْسَسْكَ اللّٰهُ بِضُرٍّ فَلَا كَاشِفَ لَهٗۤ اِلَّا هُوَ‌ؕ وَاِنْ يَّمْسَسْكَ بِخَيْرٍ فَهُوَ عَلٰى كُلِّ شَىْءٍ قَدِيْرٌ

**"அல்லாஹ் உமக்கு யாதொரு தீங்கிழைத்தால், அதனை நீக்குவோர் அவனையன்றி வேறெவருமில்லை. (அவ்வாறே) உமக்கு யாதொரு நன்மை நேரிடினும் (அதைத் தடுத்து விடக் கூடியவன் எவனுமில்லை) அவன் யாவற்றின் மீதும் மிக்க ஆற்றலுடையோன்" [அல்குர்ஆன்: 6:17]**

5. தௌஹீத் சமத்துவம், சகோதரத்துவம் ஆகியவற்றின் அஸ்திவாரமாகும். ஏனென்றால் அல்லாஹ் அல்லாதவர்களில் சிலரைத் தங்கள் இரட்சகர்களாக ஆக்கிக் கொள்கின்றவர்களைப் பின்பற்றுவதற்குத் தன்னை சார்ந்தோரை அது அனுமதிக்காது.

இரட்சிக்கும் தன்மையும், மனிதர்கள் செய்யக்கூடிய வணக்கங்களும் அல்லாஹ் ஒருவனுக்கு மட்டுமே உரியதாகும். அவர்களுக்குத் தலைமை தாங்கத் தகுதியானவர், அல்லாஹ்வுடைய ரஸூல் முஹம்மத் ﷺ அவர்கள் மட்டுமேயாவார்கள்.



# தௌஹீதின் எதிரிகள்

وَكَذٰلِكَ جَعَلْنَا لِكُلِّ نَبِيٍّ عَدُوًّا شَيٰطِيْنَ الْاِنْسِ وَالْجِنِّ يُوْحِىْ بَعْضُهُمْ اِلٰى بَعْضٍ زُخْرُفَ الْقَوْلِ غُرُوْرًا‌ ؕ

**“இவ்வாறே ஒவ்வொரு நபிக்கும், மனிதரிலும் ஜின்னிலுமுள்ள ஷைத்தான் களை நாம் விரோதிகளாக ஆக்கியிருந்தோம். அவர்களில் சிலர் சிலரை ஏமாற்றும் பொருட்டு, அலங்காரமான (பொய்ச்) செய்திகளை,(க்காதில்) இரகசியமாகக் கூறிக் (கலைத்துக்) கொண்டிருந்தார்கள்.” [அல்குர்ஆன்: 6:112]**

ஜின்னிலுள்ள ஷைத்தான்கள், மனிதர்களிலுள்ள ஷைத்தான்களை வழிகேடு, தீமை, பொய்யான செய்திகள் போன்றவற்றைக் கொண்டு, அவர்களுடைய உள்ளங்களில் சந்தேகங்களை ஏற்படுத்தி, அவர்களை வழிகெடச் செய்கிறார்கள் என்பதையே மேலேயுள்ள வசனம் தெளிவு படுத்திக் கொண்டிருக்கின்றது.

**“மறுமையை நம்பாதோரின் இருதயங்கள் அதற்கு (அந்த வீணான செய்திகளுக்கு)ச் செவிசாய்த்து, அதனை அவர்கள் பொருந்திக் கொள்வதற்காகவும், அவர்கள் செய்யும் (தீய) கருமங்களை இவர்களும் செய்வதற்காகவுமே (இவ்வாறு இவர்களை அவர்கள் மயக்கி வந்தனர்)” [அல்குர்ஆன்: 6:113]**

நபிமார்கள் தமது சமூகங்களுக்கு அழைப்பு விடுத்த கலிமதுத் தௌஹீதை விட்டு, அம்மக்களை, மேற்காட்டிய வசனங்களில் கூறப்பட்ட வழிகேடர்கள் வழிகெடுத்துக் கொண்டிருந்தார்கள். நபிமார்களுக்கும், தௌஹீதைப் போதிப்பவர்களுக்கும் இவ்வாறான எதிரிகளை ஏற்படுத்துவது அல்லாஹ்வின் ஹிக்மாவிலு (ஞானத்திலு)ள்ளதாகும்.

ஏனென்றால் இஸ்லாமியப் பிரசாரம் தௌஹீதின் மீதுதான் கட்டி எழுப்பப்பட்டுள்ளது. ஆச்சரியம் என்னவெனில் தௌஹீதின்பால் மக்களை அழைப்பதை, மக்களுக்கு மத்தியில் பிளவுகளை ஏற்படுத்துவதாக சில 'தாஇகள்' (இஸ்லாமிய அழைப்பாளர்கள்) கருதுகின்றனர். தௌஹீதுதான் பிரிந்த நிலையிலிருக்கும் மக்களை ஒன்று படுத்துவதாய் இருக்கின்றது. 'தௌஹீத்' என்று கூறப்படும் அந்தப்பதமே அதற்குச் சான்றாய் அமைந்துள்ளது.

முஷ்ரிக்குகளோ, 'படைத்தவன் அல்லாஹ் ஒருவன் தான் என்பதை நம்புதல்' என்ற கருத்துடனுள்ள 'தௌஹீதுர் ருபூபிய்யா'வை அறிந்திருந்தனர். அல்லாஹ்தான் அவர்களைப் படைத்தான் என்பதை ஏற்றிருந்தனர். அவர்கள் நிராகரித்ததெல்லாம் 'அல்லாஹ் ஒருவனை மட்டுமே அழைக்கக் கூடிய இரட்சித்தல் என்பது அல்லாஹ்வுக்கு மட்டுமேயாகும்' என்று கருத்துப்படும் தௌஹீதுல் உலூஹிய்யாவைத்தான்.

தமக்குப் பாதுகாப்பளிப்பவர்கள் என்று தவறாக நம்பிக்கைக் கொண்டிருந்த தமது அவ்லியாக் (பாதுகாவலர்)களைப் பிரார்த்தனை செய்து அழைப்பதை அவர்கள் கைவிடவில்லை. வணங்குவதிலும் வழிபடுவதிலும் அல்லாஹ்வை ஒருமைப்படுத்தக் கூடியதாக அல்லாஹ்வை மட்டுமே அழைக்குமாறு நபி ﷺ அவர்கள் அம்மக்களை அழைத்தபோது அவர்கள் என்ன பதில் சொன்னார்கள் என்பது பற்றி பின்வருமாறு அல்லாஹ் கூறுகிறான்.

اَجَعَلَ الْاٰلِهَةَ اِلٰهًا وَّاحِدًا ۖ اِنَّ هٰذَا لَشَىْءٌ عُجَابٌ

**"என்ன! இவர் (முஹம்மத் (ஸல்) அவர்கள் நாங்கள் வணங்கும்) தெய்வங்கள் யாவற்றையும் (நிராகரித்து விட்டு, வணக்கத்துக்குரியவன்) ஒரே இறைவன்தான் என்று ஆக்கி விட்டாரா? உண்மையாகவே, இது ஓர் ஆச்சர்யமான விஷயம்தான்"**

**[அல்குர்ஆன்: 38:05]**

நபி ﷺ அவர்களுடைய காலத்து நிலையை மேற்கண்டவாறு அல்லாஹ் கூறிவிட்டு, அவர்களுக்கு முன்னாலிருந்த சமுதாயங்களைப் பற்றி இன்வருமாறு கூறுகின்றான்.

كَذٰلِكَ مَاۤ اَتَى الَّذِيْنَ مِنْ قَبْلِهِمْ مِّنْ رَّسُوْلٍ اِلَّا قَالُوْا سَاحِرٌ اَوْ مَجْنُوْنٌ‌ۚ

**“இவ்வாறே அவர்களுக்கு முன்னிருந்தவர்களும், (அவர்களிடம்) எந்தத்தூதர் வந்த போதிலும் (அவரைச்) ‘சூனியக்காரர்’ அல்லது ‘பைத்தியக்காரர்’ என்று அவர்கள் கூறாமல் இருக்கவில்லை” [அல்குர்ஆன்: 51:52]**

‘அல்லாஹ் ஒருவனை மட்டும் அழைத்துப் பிரார்த்திக்க வேண்டும்’ என்று கூறுவதை முஷ்ரிக்குகள் செவிதாழ்த்தினால் அவர்களுடைய உள்ளங்கள் சுருங்கி விடும்; விரண்டோடுவார்கள்; நிராகரித்துப் புறக்கணிப் பார்கள்; இவை இணை வைப்பவர்களின் பண்புகளாகும். அல்லாஹ் அல்குர்ஆனில் அவர்களுடைய பண்புகளைப் பற்றிப் பின்வருமாறு கூறுகிறான்.

وَاِذَا ذُكِرَ اللّٰهُ وَحْدَهُ اشْمَاَزَّتْ قُلُوْبُ الَّذِيْنَ لَا يُؤْمِنُوْنَ بِالْاٰخِرَةِ‌ ۚ وَاِذَا ذُكِرَ الَّذِيْنَ مِنْ دُوْنِهٖۤ اِذَا هُمْ يَسْتَبْشِرُوْنَ

**“தனித்தோனாகிய அல்லாஹ்(வின் பெயரை) மட்டும் கூறப்பட்டால், மறுமையை நம்பாதவர்களின் இருதயங்கள் (கோபத்தால்) சுருங்கி விடுகின்றன. (எனினும்,) அவனல்லாதவை(களின் பெயர்)கள் கூறப் பட்டாலோ, சந்தோசப்பட்டு (அவர்களுடைய இருதயங்கள் விரிந்து மலர்ந்து) விடுகின்றன.” [அல்குர்ஆன்: 39:45]**

தௌஹீதைப் புறக்கணிக்கக்கூடிய, இணைவைப்பவர்களைப் பற்றி, அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான்.

ذٰ لِكُمْ بِاَنَّهٗۤ اِذَا دُعِىَ اللّٰهُ وَحْدَهٗ كَفَرْتُمْ‌ ۚ وَاِنْ يُّشْرَكْ بِهٖ تُؤْمِنُوْا‌ ؕ فَالْحُكْمُ لِلّٰهِ الْعَلِىِّ الْكَبِيْرِ

**“(ஷிர்க் வைத்த குற்றத்துக்காக மறுமையில் தண்டனை பெறுபவர்களை நோக்கி அல்லாஹ்,) இ(த் தண்டனை கிடைத்த)தன் காரணமாவது: ‘அல்லாஹ்**

**ஒருவன் தான் என்று கூறப்பட்டபோது, அதனை நீங்கள் நிராகரித்தீர்கள். அவனுக்கு (எவரையும்) இணையாக்கப்பட்ட போது (அதனை) நம்பினீர்கள். ஆதலால், (இன்று உங்களுக்குக் கிடைத்திருக்கும்) இத்தீர்ப்பு மிகப் பெரியவனும் மேலானவனுமான அல்லாஹ்வுக்கே உரியது' என்று கூறுவான்" [அல்குர்ஆன்: 40:12]**

மேற்காட்டிய வசனங்கள் காஃபிர்களுடைய விஷயத்தில் அமைந்தன வாயிருந்தாலும் தாம் இஸ்லாத்தில் இருப்பதாகச் சொல்லிக் கொண்டு, மேற்சொன்ன காஃபிர்களுடைய பண்புகளுடன் இருப்போருக்கும் அவை பொருத்தம் உடையதாக இருக்கும். இவர்கள் தௌஹீத் பிரசாரகர்களுடன் போர் தொடுத்து அவர்கள் மீது பல அவதூறுகளைச் சொல்லிக் கொண்டு, வெறுக்கத்தக்க பல மோசமான பெயர்களைச் சூட்டிக் கொண்டு இருக்கிறார்கள். இவ்வெதிரிகள் தௌஹீதைப் பிரசாரம் செய்வதற்கென்றே அனுப்பப்பட்ட ரஸூல்மார்களுடைய போதனைகளை மக்களுக்கு வெறுப் பூட்டி, அதனை விட்டு அவர்களைத் தடுக்கின்றனர்.

அல்லாஹ்விடம் மட்டுமே வேண்டப்படுகின்ற துஆவை இவர்கள் செவி தாழ்த்தினால் இவர்களிடம் உள்ளச்சம் இருக்காது. ரஸூலுல்லாஹ் விடமோ, அல்லது அவ்லியாக்களிடமோ உதவி வேண்டிப் பிரார்த்திக்கப் பட்டால் அதனை உள்ளச்சத்துடன் உயர்வாக கருதுவார்கள். இவர்களது செயல் எந்தளவு கெட்டதாகவுள்ளது?



# தௌஹீதில் உலமாக்களின் நிலைபாடு

உலமாக்கள் (கற்றபடி செயல்படும் அறிஞர்கள்) நபிமார்களின் வாரிசு (அனந்திரக்காரர்)கள். நபிமார்கள் மக்களை முதலாவது அழைத்தது தௌஹீதின் பக்கமாகும். இதுபற்றி அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான்.

وَلَقَدْ بَعَثْنَا فِىْ كُلِّ اُمَّةٍ رَّسُوْلًا اَنِ اعْبُدُوا اللّٰهَ وَاجْتَنِبُوا الطَّاغُوْتَ‌ۚ فَمِنْهُمْ مَّنْ هَدَى اللّٰهُ وَمِنْهُمْ مَّنْ حَقَّتْ عَلَيْهِ الضَّلٰلَةُ‌ ؕ فَسِيْرُوْا فِى الْاَرْضِ فَانْظُرُوْا كَيْفَ كَانَ عَاقِبَةُ الْمُكَذِّبِيْنَ

**“(உலகின் பல பாகங்களில் வசித்திருந்த) ஒவ்வொரு வகுப்பாருக்கும், நிச்சயமாக நாம் தூதரை (ரஸூலை) அனுப்பி இருக்கிறோம். (அத்தூதர்கள் அவர்களை நோக்கி) அல்லாஹ் ஒருவனையே வணங்குங்கள். வழி கெடுக்கும் ஷைத்தான்களிலிருந்து விலகிக் கொள்ளுங்கள். (என்று கூறினார்கள்) அல்லாஹ் நேரான வழியில் செலுத்தியோரும் அவர்களில் உண்டு; வழிகேடே விதிக்கப் பெற்றோரும் அவர்களில் உண்டு. ஆகவே நீங்கள் பூமியில் சுற்றித் திரிந்து (நபிமார்களைப்) பொய்யாக்கியவர்களின் முடிவு எவ்வாறாயிற்று? என்பதைக் கவனித்துப் பாருங்கள்” [அல்குர்ஆன்: 16:36]**

இவ்வசனத்தில் ஷைத்தான்களுக்குப் பயன்படுத்தப்பட்டுள்ள ‘தாகூத்’ என்ற சொல்லின் அர்த்தமாவதுஃ பொருத்தத்தை நாடி வணங்கப்படக்கூடிய அல்லாஹ் அல்லாத ஒவ்வொன்றுமாகும்.

இதனாலே தான் அல்லாஹ்வுடைய ரஸூல்மார்கள் தமது இஸ்லாமிய அழைப்புப் பணியை எதிலிருந்து ஆரம்பித்தனரோ, அதிலிருந்தே ஆரம்பிப்பது உலமாக்கள் ஒவ்வொருவர் மீதும் கடமையாகும். எனவே, இந்த உலமாக்கள் தமது அழைப்புப் பணியை, எல்லா வணக்கங்களிலும்

குறிப்பாக துஆக் கேட்பதில் அல்லாஹ்விடம் மட்டுமே கேட்பதின் பால் மக்களை அழைப்பது அவர்கள் மீது கடமையாகும்.

'துஆ என்பது வணக்கமாகும்' என்று நபி ﷺ அவர்கள் கூறியுள்ளார்கள். **[*ஆதாரம்: திர்மிதி (ஸஹீஹ்)*]**

இன்று அதிகமான முஸ்லிம்கள் அல்லாஹ் அல்லாதவர்களை அழைத்து, ஷிர்க்கில் மூழ்கியுள்ளனர். இவர்களுடைய துர்பாக்கியத்துக்கு இதுவே காரணமாகும். இவர்களுக்கு முன்னிருந்த சமுதாயங்களின் துர்பாக்கிய நிலைக்கும் இதுவே காரணமாய் அமைந்தது. அவர்கள் தமது தேவைகளை அல்லாஹ் அல்லாத தமது அவ்லியாக்களிடம் வேண்டிப் பிரார்த்தனை செய்த காரணத்தினாலேயே அல்லாஹ் அவர்களை அழித்தான்.

தௌஹீதுடைய நிலைபாட்டிலும், ஷிர்க்குக்கெதிரான போராட்டத்திலும் உலமாக்கள் பல பிரிவுகளாகப் பிரிகின்றனர்.

**முதலாவது பிரிவு:** அவர்கள் தௌஹீதையும் அதன் அவசிய தன்மையையும் அதன் பிரிவுகளையும் விளங்கிக் கொண்டனர்; ஷிர்க்கையும் அதன் பிரிவுகளையும் விளங்கிக் கொண்டனர்; அவர்கள் தமது கடமையை செய்தனர்; தௌஹீதையும் ஷிர்க்கையும் மக்களுக்கு தெளிவாக விளங்க வைத்தனர்.

இவர்களுடைய அத்தாட்சிகள் அல்குர்ஆனும் ஸஹீஹான ஸுன்னா வுமாகும். நபிமார்களி குறுக்கிட நேர்ந்தது போலவே இந்த உலமாக் களுக்கும் மக்களால் சுமத்தப்படுகின்ற பொய்யான குற்றச் சாட்டுகளைக் குறுக்கிட நேர்ந்தது. அவர்கள் பொறுமையாக இருந்தனர். ஆனால் சடைந்து பின்வாங்கவில்லை. பின்வரும் அல்லாஹ்வுடைய சொல் அவர்களை அடையாளம் காட்டுகின்றது.

وَاصْبِرْ عَلٰى مَا يَقُوْلُوْنَ وَاهْجُرْهُمْ هَجْرًا جَمِيْلًا

**“(நபியே!) அவர்கள் (உம்மைப்பற்றி குற்றம் குறைகள்) கூறுவதைச் சகித்துக் கொண்டு, கண்ணியமான முறையில் அவர்களை விட்டு விலகி விடும்”.**

**[அல்குர்ஆன்: 73:10]**

மிக நீண்ட காலத்துக்கு முன்னரே லுக்மான் ﷺ அவர்கள் தமது மைந்தனுக்குச் சொன்னதென்னவென்று குர்ஆன் பின்வருமாறு கூறுகின்றது.

يٰبُنَيَّ اَقِمِ الصَّلٰوةَ وَاْمُرْ بِالْمَعْرُوْفِ وَانْهَ عَنِ الْمُنْكَرِ وَاصْبِرْ عَلٰى مَاۤ اَصَابَكَ‌ؕ اِنَّ ذٰلِكَ مِنْ عَزْمِ الْاُمُوْرِ‌ۚ

**“என்னருமை மகனே! நீ தொழுகையைக் கடைபிடித்தொழுகு. நன்மையான காரியங்களை கொண்டு ஏவி, பாபமான காரியங்களிலிருந்து (மனிதர்களை) விலக்கிவை. உனகேற்படும் கஷ்டங்களை நீ பொருமை யுடன் சகித்துக்கொள். செயல்களில் இது மிக்க வீரமுள்ளதாகும்” [அல்குர்ஆன்: 31:17]**

**இரண்டாவது பிரிவு:** இஸ்லாத்தின் அஸ்திவாரமான தௌஹீதின்பால் மக்களை அழைப்பதில் சில உலமாக்கள் அலட்சியமாக நடந்து கொண்டனர். இவர்கள் முஸ்லிம்களுக்கு அகிதாவை (அடிப்படைக் கொள்கையை) சரியான முறையில் சொல்லிக் கொடுப்பதற்கு பதிலாக அவர்களை தொழுகையின்பால் அழைக்கவும், சட்டங்களையும், ஜிஹாதையும் பற்றிச் சொல்லிக் கொடுக்கவும் ஈடுபட்டனர். இவர்கள் பின்வரும் அல்குர்ஆன் வசனத்தை செவி தாழ்த்தவில்லை போலும்.

ذٰ لِكَ هُدَى اللّٰهِ يَهْدِىْ بِهٖ مَنْ يَّشَآءُ مِنْ عِبَادِهٖ‌ؕ وَلَوْ اَشْرَكُوْا لَحَبِطَ عَنْهُمْ مَّا كَانُوْا يَعْمَلُوْنَ

**“(முன்சொன்ன நபிமார்கள் யாவரும் சென்ற) இதுவே அல்லாஹ்வுடைய நேரான வழியாகும். தன் அடியார்களில் விரும்பியவர்களை அதில் செலுத்துகின்றான். அவர்கள் (இதனை தவிர்த்து, அல்லாஹ்வுக்கு) இணை வைத்தாலோ, அவர்கள் செய்து கொண்டிருந்த (நன்மையான) காரியங்கள் யாவும் அவர்களை விட்டு அழிந்து விடும்” [அல்குர்ஆன்: 6:88]**

இரண்டாவதாகக் கூறப்பட்ட மேற்சொன்ன உலமாக்கள், முந்தைய இறைதூதர்கள் செய்தது போலவே தமது பிரசாரத்தில் தௌஹீதை அதல்லாதவைகளை விட முற்படுத்தி இருப்பார்களென்றால் அவர்களுடைய பிரசாரம் வெற்றி பெற்றிருக்கும். அல்லாஹ் தனது நபிமார்கள், ரஸூல்மார்களுக்கு உதவி செய்தது போலவே இவர்களுக்கு உதவி செய்திருப்பான். அல்லாஹ் இதுபற்றி பின்வருமாறு கூறுகின்றான்.

وَعَدَ اللهُ الَّذِيْنَ اٰمَنُوْا مِنْكُمْ وَ عَمِلُوا الصّٰلِحٰتِ لَيَسْتَخْلِفَنَّهُمْ فِى الْاَرْضِ كَمَا اسْتَخْلَفَ الَّذِيْنَ مِنْ قَبْلِهِمْ وَلَيُمَكِّنَنَّ لَهُمْ دِيْنَهُمُ الَّذِى ارْتَضٰى لَهُمْ وَلَيُبَدِّلَنَّهُمْ مِّنْۢ بَعْدِ خَوْفِهِمْ اَمْنًا‌ ؕ يَعْبُدُوْنَنِىْ لَا يُشْرِكُوْنَ بِىْ شَيْـًٔـا‌ ؕ وَمَنْ كَفَرَ بَعْدَ ذٰ لِكَ فَاُولٰٓٮِٕكَ هُمُ الْفٰسِقُوْنَ

**“(மனிதர்களே!) உங்களில் எவரேனும் மெய்யாகவே விசுவாசம் கொண்டு நற்கருமங்களைச் செய்தால், அவர்களுக்கு முன்னர் சென்றவர்களை (ப் பூமிக்கு) அதிபதிகளாக்கிய பிரகாரமே இவர்களையும் நிச்சயமாகப் பூமிக்கு அதிபதிகளாக்கி வைப்பதாகவும், அவன் திருப்தியடைந்த அவர்களுடைய மார்க்கத்தில் அவர்களை ஸ்திரப்படுத்தி வைப்பதாகவும், இவர்களுடைய பயத்தை அமைதியும் பாதுகாப்புமாக மாற்றி விடுவதாகவும் நிச்சயமாக அல்லாஹ் வாக்களித்திருக்கின்றான். (இவ்வாறு செய்த பின்னர்) அவர்கள் எனக்கு யாதொன்றையும் இணையாக்காது என்னையே வணங்கவும். இதன் பின்னர் உங்களில் எவரேனும் நிராகரிப்பவர்களாகிவிட்டால் நிச்சயமாக அவர்கள் பெரும் பாபிகள்தாம்” [அல்குர்ஆன்: 24:55]**

‘அல்லாஹ்வின் உதவி கிடைப்பதற்குரிய அடிப்படை நிபந்தனை தௌஹீதாகவே இருக்க வேண்டும்’ என்பதை மேலேயுள்ள ஆதாரங்கள் உணர்த்தக் கூடியதாக இருக்கின்றன.

**மூன்றாவது பிரிவு:** இன்னும் சில உலமாக்கள் மக்களுடைய எதிர்ப்புக்குப் பயந்தவர்களாகவும் தமது தொழில் அல்லது அந்தஸ்து பறிக்கப்படும் என்று பயந்தவர்களாகவும் தௌஹீதுப் பிரசாரத்தையும் ஷிர்க்குக்கெதிரான போராட்டத்தையும் கைவிட்டு விட்டார்கள். மக்களுக்கு எத்திவைக்குமாறு அல்லாஹ் சொன்னவற்றை இவர்கள் மறைத்து

விட்டார்கள். இவர்களைப் பற்றி அல்லாஹ் கூறுவது பின்வருமாறு அமைந்துள்ளது.

اِنَّ الَّذِيْنَ يَكْتُمُوْنَ مَآ اَنْزَلْنَا مِنَ الْبَيِّنٰتِ وَالْهُدٰى مِنْۢ بَعْدِ مَا بَيَّنّٰهُ لِلنَّاسِ فِى الْكِتٰبِۙ اُولٰٓٮِٕكَ يَلْعَنُهُمُ اللّٰهُ وَ يَلْعَنُهُمُ اللّٰعِنُوْنَۙ

**“நேர்வழியையும் தெளிவான அத்தாட்சியையும் நாம் அருளி, அவற்றை மனிதர்களுக்காக வேதத்தில் தெளிவுபடுத்தி(க் கூறிய) பின்னும், எவர்கள் அவற்றை மறைக்கின்றார்களோ அவர்களை நிச்சயமாக அல்லாஹ்வும் சபிக்கிறான்; (மற்றும்) சபிப்போரும் அவர்களைச் சபிக்கின்றனர்” [அல்குர்ஆன்: 2:159]**

உண்மையான இஸ்லாமியப் பிரசாரகர் (தாஈ)களைப் பற்றி பின்வருமாறு அல்லாஹ் கூறுகின்றான்.

اَلَّذِيْنَ يُبَلِّغُوْنَ رِسٰلٰتِ اللّٰهِ وَيَخْشَوْنَهٗ وَلَا يَخْشَوْنَ اَحَدًا اِلَّا اللّٰهَ‌ؕ وَكَفٰى بِاللّٰهِ حَسِيْبًا

**“(முன்னைய நபிமார்களாகிய) அவர்கள் அல்லாஹ்வுடைய கட்டளைகளை எடுத்துரைத்தே தீருவார்கள்; அவ(ன் ஒரு)வனுக்கே பயப்படுவார்கள்; அல்லாஹ்வைத் தவிர மற்றெவருக்கும் பயப்பட மாட்டார்கள். (ஆகவே நபியே! நீரும் மற்றெவருக்கும் பயப்பட வேண்டாம். இதைப்பற்றி அவர்களிடம் கேள்வி) கணக்குக் கேட்பதற்கு அல்லாஹ் (ஒருவனே) போதுமானவன்” [அல்குர்ஆன்: 33:39]**

அறிவை மறைப்பவர்களின் நிலை மறுமையில் எவ்வாறிருக்கும் என்பது பற்றி அல்லாஹ்வுடைய ரஸூல் ﷺ அவர்கள் பின்வருமாறு கூறுகின்றார்கள்.

‘எவன் (தன்னிடமுள்ள) ஓர் அறிவை மறைக்கின்றானோ, அவனுக்கு அல்லாஹ் (மறுமையில்) நெருப்பினாலான கடிவாளத்தைப் பூட்டுவான்’

[ஆதாரம்: *அஹ்மத் (ஸஹீஹ்)*]

**நான்காவது பிரிவு:** இன்னும் சில உலமாக்களும், ஷைகு(தலைவர்)களும் இருக்கின்றனர். அவர்கள் தௌஹீதுப் பிரசாரத்தையும்,

அல்லாஹ்விடம் மட்டுமே தேவைகளைப் பெற்றுக்கொள்ள பிரார்த்திக்க வேண்டுமென்று சொல்கின்றவர்களையும் எதிர்க்கின்றனர். அல்லாஹ் அல்லாத நபிமார்கள் அவ்லியாக்கள் ஆகியோரிடம் கேட்பதை ஆமோதிக்கின்றனர்.

அல்லாஹ் அல்லாதவர்களை உதவிக்கு அழைப்பது பற்றி எச்சரிக்கையாக வந்துள்ள குர்ஆன் வசனங்கள் (கலிமாச் சொல்லாத) முஷ்ரிக்குகளுக்கு உரியது என்று கூறுகின்றனர். முஸ்லிம்கள் எவரும் முஷ்ரிக்குகளாக இருக்க முடியாது என்றும் கூறுகின்றனர். இவர்கள் பின்வரும் அல்குர்ஆன் வசனத்தைச் செவிதாழ்த்தவில்லை போலும்.

اَلَّذِيْنَ اٰمَنُوْا وَلَمْ يَلْبِسُوْٓا اِيْمَانَهُمْ بِظُلْمٍ اُولٰٓـئِكَ لَهُمُ الْاَمْنُ وَهُمْ مُّهْتَدُوْنَ

**“எவர்கள் மெய்யாகவே ஈமான் கொண்டு, தங்கள் ஈமானுடன் யாதொரு ‘ளுல்ம்’ஐயும் கலந்து விடவில்லையோ அவர்களுக்கு நிச்சயமாக அபயமுண்டு; அவர்கள் தான் நேரான வழியிலும் இருக்கின்றனர்” [அல்குர்ஆன்: 6:82]**

மேற்காட்டிய மறைவசனத்திலுள்ள ‘ளுல்மு’ என்ற அரபிச் சொல்லுக்கு ‘ஷிர்க்கு’ என்றே பொருள் உண்டு. பின்வரும் இறைவசனம் அதற்கு ஆதாரமாய் அமைகின்றது.

اِنَّ الشِّرْكَ لَـظُلْمٌ عَظِيْمٌ

**“நிச்சயமாக இணை வைப்பது மகத்தான ஒரு ‘ளுல்மு’ (அக்கிரமமாகும்)” [அல்குர்ஆன்: 31:13]**

மேற்காட்டிய வசனத்துக்கு அமைய இக்காலத்தில் அதிகமான இஸ்லாமிய நாடுகளில் உள்ள முஸ்லிம்கள் ஷிர்க்கில் வீழ்ந்து விடுகின்றனர். இவற்றை ஆகுமாகின்றவர்கள், அல்லாஹ் அல்லாதவர்களை உதவிக்கு அழைப்பதையும் (பெரிய மனிதர்கள் என்று மக்கள் கருதுகின்றவர்களை) பள்ளிவாசலினுள் அடக்கஞ் செய்வதையும் கப்றுகளைச் சூழ வலம் வருவதையும் அவ்லியாக்களுக்காக நேர்ச்சை

செய்வதையும் இதல்லாத இன்னும் பல பித்அத்துகள், தடுக்கப்பட்ட கருமங்கள் போன்றவற்றையும் ஆகுமாக்குகின்றனர். இத்தகையோரைப் பற்றி நபி ﷺ அவர்களின் எச்சரிக்கை பின்வருமாறு அமைந்துள்ளது.

'என்னுடைய உம்மத்தின் மீது நான் பயப்படுவதெல்லாம் (மக்களை) வழி கெடுக்கக்கூடிய தலைவர்களைத்தான்' **[*ஆதாரம்: திர்மிதி (ஸஹீஹ்)*]**

சில காலத்துக்கு முன்னிருந்த எகிப்து அல்அஸ்ஹர் பல்கலைக் கழகத்தின் பேராசிரியர் ஒருவரிடம் 'கப்றை நோக்கித் தொழுவது ஆகுமா?' என்று கேள்வி கேட்டபோது, ஏன் கூடாது? மதினாவில் மஸ்ஜிதுந் நபவியில் தொழுகின்ற, மக்கள் நபி ﷺ அவர்களுடைய கப்றை நோக்கித் தொழுவதில்லையா? என்று பதிலுக்காகக் கேளியொன்றைக் கேட்டுப் பதிலளித்தார்.

நபி ﷺ அவர்கள் கப்றை நோக்கித் தொழுவதைத் தடை செய்துள்ளார்கள். அவர்கள் அடக்கஞ் செய்யப்பட்டது பள்ளிவாசலில் அல்ல. ஆயிஷா ؓ அவர்களின் வீட்டின் ஒரு பகுதியில் என்பதை அவ்வறிஞர் மறந்து விட்டார் போலும். நபியவர்களுடைய துஆக்களில் ஒரு துஆ பின்வருமாறு அமைந்துள்ளது. (கண்மூடித்தனமாக இஸ்லாமிய விளக்கமளிக்கும் அறிஞர்களுக்கு இந்த துஆ ஒரு எச்சரிக்கையாகவும் நல்லுபதேசமாகவும் அமையட்டும்).

**'அல்லாஹும்ம இன்னீ அஊதுபிக மின்-இல்மில்லா யன்பஉ'** (அல்லாஹ்வே! பயனற்ற கல்வியிலிருந்து உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன்). **[*ஆதாரம்: முஸ்லிம்*]**

(அதாவது அவ்வாறான கல்வியை நான் கற்கவும் மாட்டேன்; பிறருக்குக் கற்பிக்கவும் மாட்டேன்; அதனைக் கொண்டு செயல்படவும் மாட்டேன்; எனது பண்பாடுகளில் அது வெளிவராதிருக்க வேண்டும் என்றே மேற்கண்ட துஆ பொருள்படும்.)

மனிதர்கள் ஷைகுகளின் சொல்லை நம்பி, அவர்களுக்கு வழிபடு கிறார்கள். இவர்கள் பின்வரும் நபி ﷺ அவர்களின் சொல்லுக்கு மாறு செய்கின்றவர்களாகவே இருக்கின்றனர்.

'படைத்தவனுக்கு மாறு செய்வதிலே படைக்கப்பட்டவனுக்கு வழிபடுவதென்பது கிடையாது' [*ஆதாரம்: அஹ்மத் (ஸஹீஹ்)*]

இம்மக்கள் தமது பிழையான வழிபாட்டைக் குறித்து மறுமையில் கவலைப்படுவார்கள். ஆனால், அந்தக் கவலையால் எவ்விதப்பயனு மில்லை. காஃபிர்களையும் அவர்களுடைய வழியில் நடப்பவர் களையும் பற்றிப் பின்வருமாறு அல்லாஹ் கூறுகின்றான்.

يَوْمَ تُقَلَّبُ وُجُوْهُهُمْ فِى النَّارِ يَقُوْلُوْنَ يٰلَيْتَنَآ اَطَعْنَا اللهَ وَاَطَعْنَا الرَّسُوْلَا
وَقَالُوْا رَبَّنَآ اِنَّآ اَطَعْنَا سَادَتَنَا وَكُبَرَآءَنَا فَاَضَلُّوْنَا السَّبِيْلَا
رَبَّنَآ اٰتِهِمْ ضِعْفَيْنِ مِنَ الْعَذَابِ وَالْعَنْهُمْ لَعْنًا كَبِيْرًا

**“அவர்களுடைய முகங்களைப் புரட்டிப் புரட்டி நெருப்பில் பொசுக்கும் நாளில் எங்களுடைய கேடே! நாங்கள் அல்லாஹ்வுக்கு வழிபட்டிருக்க வேண்டாமா? (அவனுடைய) தூதருக்கும் வழிபட்டிருக்க வேண்டாமா? என்று கதறுவார்கள். என்றி எங்கள் இறைவனே! நிச்சயமாக நாங்கள் எங்கள் தலைவர்களுக்கும், எங்கள் பெரியோர்களுக்குமே வழிபட்டோம். அவர்கள் எங்களைத் தப்பான வழியில் செலுத்தி விட்டார்கள். (ஆகவே) ‘எங்கள் இறைவனே! நீ அவர்களுக்கு இருமடங்கு வேதனையைக் கொடுத்து, அவர்கள் மீது மகத்தான சாபத்தை இடு’ என்று கூறுவார்கள்” [அல்குர்ஆன்: 33: 66,67,68]**

இப்னு கதீர் ﵀ அவர்கள் தனது தபிஸீரில் மேற்காட்டிய வசனங்களு க்குப் பின்வருமாறு விளக்கமளித்து உள்ளார்கள்.

அதாவது, அல்லாஹ்வே! தலைவர்களுக்கும், பெரியார்களுக்கும், மஷாயிகுகளுக்கும் வழிபட்டு உனது ரஸூலுக்கு மாறு செய்து விட்டோம்;

நாங்கள் நம்பியவர்களிடம் ஏதாவது சக்திகள் இருக்குமென உறுதியாக நம்பினோம்; (ஏமாற்றமடைந்தோம்;) அவர்களிடமோ எதுவுமே இல்லை என்பது இப்பொழுது தெளிவாகி விட்டது.



# ‘வஹ்ஹாபி’ என்பதன் அர்த்தமென்ன?

மனிதர்கள் தங்களுடைய பழக்கவழக்கங்களுக்கும், வீணான நம்பிக்கைகளுக்கும், பித்அத்தான நடைமுறைகளுக்கும் மாறாக நடக்கின்ற வர்களை ‘வஹ்ஹாபிகள் என்று சொல்ல ஆரம்பித்து விட்டனர். இவர்களுடைய நம்பிக்கைகள் குர்ஆனுக்கும் ஸுன்னாவுக்கும் முரண்படக் கூடிய பிழையானவையாக இருப்பினும் சரிதான். குறிப்பாக தௌஹீதின் பக்கம் மக்களை அழைப்பதையும், அவனிடம் மட்டுமே தேவைகளைக் கேட்க வேண்டும் என்று கூறுவதையும், அவனல்லாத எவரிடமும் கேட்கக் கூடாது என்று கூறுவதையும் தான் பிழை என்பதாக மக்கள் கருதி வஹ்ஹாபிப் பட்டம் சூட்டுகின்றனர்.

நான் ஓர் ஆசிரியரிடத்தில் இமாம் நவவி ﷺ அவர்களுக்குரிய ‘அல்-அர்பஊன் லின்-நவவி’ என்ற நூலில் இப்னு அப்பாஸ் ﷺ அவர்கள் அறிவிக்கக்கூடிய ‘நீ கேட்டால் அல்லாஹ்விடமே கேள்! உதவி தேடினால் அல்லாஹ்விடம் மட்டுமே உதவிதேடு’ என்ற நபியவர் களுடைய ஹதீஸைப் படித்துக் கொண்டிருந்தேன். இந்த ஹதீஸுக்கு இமாம் நவவி அவர்கள் அளிக்கும் விரிவுரை அவ்வேளை என்னை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. அவ்விளக்கம் பின்வருமாறு.

‘நேர்வழி படுத்தல், நோயைக் குணப்படுத்தல், அறிவைக் கொடுத்தல் போன்ற மனிதனால் மனிதனுக்கு நிறைவேற்றிக் கொடுக்க முடியாதவற்றை அல்லாஹ்விடம் மட்டுமே கேட்க வேண்டும். இப்படியானவற்றை அல்லாஹ் அல்லாதவர்களிடம் கேட்பதும், அவற்றை அவர்கள் நிறை வேற்றித் தருவார்கள் என்று நம்புதலும் நிந்திக்கப்பட்ட இழிந்த செயல்களாகும்.

இமாம் நவவி ﷺ அவர்களுடைய இவ்விளக்கத்தைக் கேட்டதும் 'அல்லாஹ் அல்லாதவர்களிடம் உதவிக் கேட்கக்கூடாது' என்றல்லவா இவ்விளக்கம் அமைந்துள்ளது என்று எனது ஆசிரியரிடம் கேட்டேன். அதற்கவர், 'அவ்வாறு கேட்பது அனுமதிக்கப்பட்டது' என்று கூறினார். நான், அதனைத் தொடர்ந்து 'நீங்கள் சொல்வதற்கு ஆதாரமென்ன?' என்று கேட்டேன்.

அப்பொழுது எனது ஆசிரியர் கோபத்துடன் கத்திக் கொண்டே பின்வருமாறு சொன்னார். 'எனது தந்தையின் உடன்பிறந்த சகோதரி (மாமி) இந்தப் பள்ளிவாசலினுள் அடக்கஞ் செய்யப்பட்டிருப்பவரிடம் 'யாஷைக் ஸஃது!' என்று அழைத்து தனது தேவைகளைக் கேட்கிறாள். நான் அவர்களைப் பார்த்து 'தாயே! பெரியார் ஸஃது உங்களுக்குப் பயனுள்ள ஏதாவதொன்றைச் செய்து தருகிறாரா?' என்று கேட்டேன். அதற்கு அத்தாய் நான் இப்பெரியாரிடம் கேட்கிறேன். அவர்கள் (அல்லாஹ்விடத்தில் தன்னையே அர்ப்பணிக்கின்றவர்கள்) எனக்காக அல்லாஹ்விடத்தில் ஷபாஅத் செய்கிறார்கள்; பரிந்து பேசுகிறார்கள் என்று பதில் கூறினாள். ஆசிரியவர்கள் என்மீது கொண்ட கோபத்துடன் தனது மாமியாரின் விளக்கத்தை மேற்கண்டவாறு கூறினார்.

தொடர்ந்தும் எனது ஆசிரியரை நோக்கி, பெரியார் அவர்களே! 'நீங்களோ ஓர் ஆலிம்; உங்களுடைய வாழ்நாளையே கிதாபுகளை வாசிப்பதிலேயே கழித்துள்ளீர்கள். இவ்வளவு படித்த பின்பும் உங்களது அகீதாவை (அடிப்படைக் கொள்கையை) அறிவீனமாகக் கதைக்கும் உங்களது மாமியிடமிருந்து பெற்றுக் கொண்டுள்ளீர்களே' என்று கூறினேன்.

அப்பொழுது அவர் என்னை நோக்கி, 'உன்னிடம் 'வஹ்ஹாபிய்யத்' சிந்தனைகள் இருக்கின்றன. நீ உம்ராவுக்காக மக்கா சென்று வரும்போது வஹ்ஹாபிய்யக் கருத்துள்ள நூல்களைக் கொண்டு வருகிறாய்' என்று

கூறினார். எனது ஆசிரியரைப் போன்றவர்களிடம் அல்லாது வஹ்ஹாபிய் யத்தைப் பற்றி நான் எதுவும் அறிந்திருக்கவில்லை.

வஹ்ஹாபிகள் முஸ்லிம்களுக்கு மாறுபட்டவர்கள் என்றும், அவ்லியாக்களையும் அவர்களுடைய கராமத்துக் (அற்புதங்)களையும் நம்பாதவர்கள் என்றும், நபி ﷺ அவர்களை விரும்பாதவர்கள் என்றும், இதல்லாத இன்னும் பல பொய்யான குற்றச்சாட்டுகளையும் எனது ஆசிரியர்கள் சொல்லுவார்கள்.

அல்லாஹ்விடம் மட்டுமே உதவி கோருகின்றவர்களாகவும், அவன் மட்டுமே நோயைக் குணப்படுத்துகிறான் என்று நம்புகிறவர்களாகவும் வஹ்ஹாபிகள் இருப்பார்களென்றால் அந்த வஹ்ஹாபிய்யத்தை நானும் அறிய வேண்டுமென விரும்பினேன். அவர்களுடைய கூட்டங்கள் நடைபெறும் இடங்களை விசாரித்துப் பார்த்தேன். அவர்கள் தப்ஸீர், ஹதீஸ், பிக்ஹு போன்றவைகளைக் கற்றுக் கொள்வதற்காக ஒவ்வொரு மாலை பொழுதும் ஒன்று சேர்வதாக மக்கள் கூறினார்கள். நான் எனது பிள்ளைகளுடனும் சில வாலிபர்களுடனும் அவ்விடம் சென்றேன்.

பெரிய விசாலமான அறையொன்றில் பாடம் ஆரம்பிப்பதை எதிர்பார்த்து அமர்ந்திருந்தோம். சற்று நேரத்துக்குப் பின் எம்மிடத்தில் வயது முதிர்ந்த பெரிய மனிதரொருவர் வந்தார். அவர் நம்மனைவர் மீது ஸலாம் சொல்லி, வலதுகையைக் கொண்டு நம்மனைவருடனும் முஸாபஹா (கைலாகு) செய்தார். பின்னர் ஓரிடத்தில் அமர்ந்து கொண்டார்.

அம்மனிதர் எம்மிடத்தில் நுழைந்தபோது அவருக்கு மரியாதை செய்வதற்காக எவரும் எழுந்து நிற்கவில்லை. அம்மகானைப்பற்றி 'இவர் ஒரு ஷைகாக (வயது முதிர்ந்தவராக)வல்லவா இருக்கிறார்; தனக்காக எவரும் எழுந்து மரியாதை செய்ய வேண்டுமென்பதை விரும்பாதவராக இருக்கிறாரே' என்று எனக்குள் நானே சொல்லிக் கொண்டேன்.

நபி ﷺ அவர்கள் தனது குத்பாக்களையும் பாடங்களையும் ஆரம்பித்தவாறே அம்மனிதர் அல்லாஹ்வைப் புகழ்ந்து, நபி ﷺ அவர்கள் மீது ஸலவாத் சொல்லியவராக பாடத்தை ஆரம்பித்தார். பின்னர் அவர் அரபு மொழியில் பேச ஆரம்பித்தார். அவர் ஹதீஸ்களை அறிவிக்கும்போது அவற்றை அறிவித்தவர் ('ராவி') யார்? என்பதையும், அவை ஸஹீஹ் என்பதையும் அறிவிப்பவராயிருந்தார். நபி ﷺ அவர்களுடைய பெயரை உச்சரிக்கும் போதெல்லாம் அவர்கள் மீது ஸலவாத் சொல்லிக் கொண்டே இருந்தார்.

இறுதியாக அவரிடத்தில் காகிதங்களில் எழுதப்பட்ட கேள்விகள் கொடுக்கப்பட்டன. அவற்றுக்குக் குர்ஆன், ஸுன்னாவினது ஆதாரங்களைக் கொண்டு பதிலளிக்க ஆரம்பித்தார். சபையில் சமூகம் அளித்திருந்தவர்களில் சிலர் அவருடன் கலந்துரையாடினர். அவர் எந்த ஒருவரையும் கேள்வி கேட்பதற்கு தடை செய்தது கிடையாது.

அவர் தனது பாடத்தின் இறுதியில் 'நாங்கள் முஸ்லிம்களாகவும் 'ஸலபி'களாகவும் (ஸலபிகள் என்றால் நபி ﷺ அவர்களும் ஸஹாபாக்களும் நடந்த வழியில் இருப்பவர்கள்) இருப்பதற்கு வாய்ப்பளித்த அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும் என்றார்.

மேலும் சில மனிதர்கள் எங்களை வஹ்ஹாபிகள் என்று சொல்லுகிறார்கள். இது பட்டப்பெயர் சூட்டுவதாகும். அல்லாஹ் பின்வரும் தனது வார்த்தையின் மூலம் இதனைத் தடை செய்துள்ளான்.

اَنْفُسَكُمْ وَلَا تَنَابَزُوْا بِالْاَلْقَابِ ؕ

**“உங்களில் ஒருவர் மற்றவருக்கு (த் தீய) பட்டப்பெயர் சூட்ட வேண்டாம்”**

**[அல்குர்ஆன்: 49:11]**

இமாம் ஷாபிஈ ﵀ அவர்களை, ஆரம்பகாலத்திலிருந்த சிலர் 'ராபிழி' (காரிஜிய்யா) வகுப்பைச் சேர்ந்தவர் என்று கருதினர். அதற்குப் பின்வருமாறு கவியொன்றின் மூலமே இமாமவர்கள் பதிலளித்தார்கள்.

'முஹம்மத் ﷺ அவர்களின் குடும்பத்தை நேசிக்கின்ற ஒருவன் ராபிழியாக இருப்பானென்றால், நானும் ஒரு 'ராபிழி' என்பதற்கு மனிதர்களும், ஜின்களும் சாட்சியாக இருக்கட்டும்'.

எங்களை எவரேனும் வஹ்ஹாபிகள் என்று சந்தேகம் கொள் கின்றவர்களாக இருந்தால் அவர்களுக்குப் பின்வருமாறு ஒரு கவிஞர் கூறுவதைக் கொண்டு நாங்கள் பதிலளிப்போம்.

'அஹ்மதை (முஹம்மத் ﷺ அவர்களை)ப் பின்பற்றுகின்றவர் வஹ்ஹாபியாக இருப்பாரென்றால், நானும் என்னை ஒரு வஹ்ஹாபி என்று உறுதியாகக் கூறிக் கொள்கிறேன்'.

பாடம் முடிந்ததும், பாடம் நடத்தியவருடைய அறிவையும் பணிவான நடத்தையையும் கண்டு ஆச்சர்யமடைந்தவர்களாக சில வாலிபர்களுடன் வெளியேறினோம். இவர் தான் ஓர் உண்மையான 'ஷைகு' என்று அவ்வாலிபர்களில் ஒருவர் சொல்லக் கேட்டேன்.



# ‘வஹ்ஹாபி’ என்பதன் அர்த்தம்

தௌஹீதின் எதிரிகள் முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாப் ﵀ அவர்களைச் சம்பந்தப்படுத்தி தௌஹீதுடைய அடிப்படையில் இருப்ப வனுக்கு ‘வஹ்ஹாபி’ என்று சொல்கின்றனர். இவர்கள் உண்மை சொல்லுகின்றவர்களாக இருந்தால் அப்துல் வஹ்ஹாபுடைய மகன் முஹம்மதைச் சம்பந்தப்படுத்தி ‘முஹம்மதி’ (முஹம்மதைச் சேர்ந்தவன்) என்றுதான் சொல்லியிருக்க வேண்டும். (அவ்வாறு சொல்லியிருந்தால் முஹம்மத் ﷺ அவர்களைச் சார்ந்தவன் என்று கருத்துக் கொள்ள இடமேற்பட்டு விடும் என்று எதிரிகள் அஞ்சியிருக்கலாம்.)

‘அல்வஹ்ஹாப்’ என்ற அஸ்மாஉல்ஹுஸ்னாவிலுள்ள அல்லாஹ்வின் பெயரை இவர்கள் சம்பந்தப்படுத்தி ‘வஹ்ஹாபி’ என்று பெயர் சூட்டப்பட வேண்டுமென அல்லாஹ் விரும்பியிருக்கிறான்.

‘அல்வஹ்ஹாப்’ என்பதற்கு அதிகம் கொடை கொடுப்பவன் என்று பொருள்படும். அது அல்லாஹ்வுக்குரிய அழகிய பெயர்களில் ஒன்றாகும். ‘வஹ்ஹாபி’ என்றால் கொடையாளனாகிய அல்லாஹ்வைச் சார்ந்தவன் என்று பொருள்படும். ஷிர்க்கு, பித்அத்துக்கெதிராக புரட்சி செய்தவர் முஹம்மத் என்பவர் தான். இவருடைய தந்தையின் பெயர் அப்துல் வஹ்ஹாப் என்பதாகும். இப்பெயரின் அர்த்தம் அல்வஹ்ஹாப் என்ற அல்லாஹ்வின் அடிமை என்பதாகும்.

கம்பளித்துணிக்கு ‘ஸூப்’ என்று அரபியில் சொல்லப்படும். கம்பளித்துணியை அணிகின்றவனுக்கு ‘ஸூபி’ என்று சொல்லப்படும். ஏழ்மையுடன் இப்படியான துணியுடனிருக்கும் ஒரு கூட்டத்துக்கே ‘ஸூபிகள்’ என்று வழங்கப்படலாயிற்று.

எனவே நிச்சயமாக 'வஹ்ஹாபி' என்ற சொல் அல்வஹ்ஹாப் என்ற அல்லாஹ்வுடைய பெயருடன் தொடர்பு படுகின்றது. அந்த அல்லாஹ் தான் இவனுக்கு தௌஹீதைக் கொடையாக அருளி, அதன்பால் மக்களை அழைக்கக் கூடியதாகவும் வாய்ப்பை ஏற்படுத்தினான்.



# முஹம்மத் பின் அப்துல் வஹ்ஹாப்ﷺ

*(அப்துல் வஹ்ஹாபுடைய மகன் முஹம்மத்)*

இவர் ஹிஜ்ரி 1115ம் ஆன்து நஜ்திலே (இன்றைய புதிய பெயர் ரியாத்) உள்ள 'அல் உயைனா' என்ற ஊரில் பிறந்தார். பத்து வயதை அடையுமுன்னர் குர்ஆன் முழுவதையும் மனனம் செய்தார். அவருடைய தந்தையிடத்தில் ஹன்பலி பிக்ஹை (சட்டக்கலையை)க் கற்றார். பல ஊர்களிலுமுள்ள ஆசியர்களிடம் தப்ஸீரையும் ஹதீஸையும் கற்றார். குறிப்பாக மதீனா முனவ்வராவில் கல்வி பயின்றார்.

குர்ஆன் மற்றும் ஸுன்னா மூலம் தௌஹீதை விளங்கிக் கொண்டார். அவருடைய ஊரிலும், அவர் தரிசித்த வேற்பல ஊர்களிலு மிருந்த ஷிர்க்கு, அனாச்சாரங்கள், பித்அத்துகள் போன்றவைகளும் சரியான இஸ்லாத்துடன் மோதுகின்ற அளவு கப்றுகளைத் தூய்மைப்படுத்தும் நிலையும் அவரை ஆச்சர்யத்துக்கு உள்ளாக்கின.

இமாம் அவர்களுடைய ஊரில் திருமண வயதை அடைந்த பெண்கள் ஆண் ஈத்தம் மரத்தடியில் சென்று 'ஈத்தம் மரமே! அடுத்த ஆண்டு மரங்கள் காய்ப்பதற்கு முன்பாகவே எனக்கொரு கணவன் கிடைக்க வேண்டுமென நான் ஆசை வைக்கிறேன்' என்று கூறிப் பிரார்த்திப்பவர்களாக இருந்தனர்.

அல்லாஹ்வைத் தவிர வேறெவருக்கும் செய்யத் தகுதியற்றவைகளை எல்லாம், நபி ﷺ அவர்கள், அவர்களின் குடும்பத்தினர்கள், ஸஹாபாக்கள் முதலானோரின் கப்றுகளில், சென்று மக்கள் செய்பவர்களாக இருந்தனர்.

அல்குர்ஆனுக்கும், நபியவர்களுடைய போதனைக்கும் முரண்படுகின்ற அளவு ரஸூல்மார்களைக் கொண்டும், அல்லாஹ் அல்லாத வேறு

பலவற்றைக் கொண்டும் மதீனாவாசிகள் பாதுகாப்புத் தேடுகின்றவர்களாக, இரட்சிப்புக் கோருகின்றவர்களாக இருந்த நிலையை இமாமவர்கள் செவி தாழ்த்தினர். அல்குர்ஆன் பின்வருமாறு கூறுகின்றது.

وَلَا تَدْعُ مِنْ دُوْنِ اللهِ مَا لَا يَنْفَعُكَ وَ لَا يَضُرُّكَ ۚ فَاِنْ فَعَلْتَ فَاِنَّكَ اِذًا مِّنَ الظّٰلِمِيْنَ

**“உமக்கு யாதொரு நன்மையும், தீமையும் செய்யச் சக்தியற்ற அல்லாஹ் அல்லாதவற்றை (இரட்சகன் என) நீர் அழைக்காதீர். அவ்வாறு செய்தால், அச்சமயமே அக்கிரமக்காரர்களில் (இணை வைப்பவர்களில்) நீரும் ஒருவராகி விடுவீர்”**

**[அல்குர்ஆன்: 10:106]**

ரஸூலுல்லாஹி ﷺ அவர்கள் தனது சாச்சாவின் மகன் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ﵄ அவர்களுக்குப் பின்வருமாறு கூறுகின்றவர்களாக இருந்தனர்.

‘நீ கேட்டால் அல்லாஹ்விடமே கேள்! உதவி தேடினால் அல்லாஹ் விடமே உதவி தேடு!’ [*ஆதாரம்: திர்மிதி (ஸஹீஹ்)*]

இமாமவர்கள் மக்களைத் தௌஹீதின்பால் அழைக்கின்றவர்களாகவும், அல்லாஹ்விடம் மட்டுமே துஆ இறைஞ்ச வேண்டுமென்று கூறுகின்ற வர்களாக இருந்தனர். ஏனென்றால், அல்லாஹ்தான் எல்லாவற்றின் மீதும் ஆற்றலுடையோன்; படைத்தவனும் அவனேயாவான். அவனல்லாத வர்கள் தமக்கோ அல்லது பிறருக்கோ நேரவிருக்கும் தீங்குகளைத் தடுக்கச் சக்தியற்றவர்கள் ஆவர்.

ஸாலிஹீன்கள் என்னும் நல்லடியார்கள் மீது கொண்டுள்ள அன்பு அவர்களைப் பின்பற்றுவதற்கு மட்டுமே தகுதியாகும். இதுவன்றி அல்லாஹ்விடத்தில் அவர்களைத் தரகர்களாகவோ அல்லாஹ்விடத்தில் கேட்க வேண்டியவற்றை அவர்களிடத்தில் கேட்கக் கூடியதாகவோ மதிப்பதற்கு அவர்கள் தகுதியுடையவர்கள் அல்லர்.

பிழையான வழியிலிருப்போரின் நிலைபாடு இதற்கு மாறுபட்டதாக இருக்கின்றது. இமாமவர்கள் மேற்கொண்ட தௌஹீதுப் பிரசாரத்துக்கு, அனாச்சாரவாதிகள் எதிராகவே இருந்தனர். இது ஆச்சர்யப்படத்தக்க ஒன்றன்று. நபி ﷺ அவர்களுடைய காலத்திலேயே தௌஹீதின் எதிரிகள் இல்லாதிருக்கவில்லை. அக்காலத்தில் இருந்தவர்கள் ஆச்சர்யப்பட்டவர்களாக

اَجَعَلَ الْاٰلِهَةَ اِلٰهًا وَّاحِدًا ۚ

**"என்ன! (முஹம்மதாகிய) இவர் (நாம் வணங்கும்) தெய்வங்கள் யாவற்றையும் (நிராகரித்து விட்டு வணங்கப்படக் கூடியவன்) ஒரே இறைவன் தான் என்று ஆக்கி விட்டாரா? [அல்குர்ஆன்: 38:5]**

என்று கூறியதாக அல்லாஹ் குர்ஆனிலேயே கூறிவிட்டான்.

இமாமவர்களின் எதிரிகள், அவர்களை எதிர்க்கவும், அவர்களைப் பற்றி பொய்யான கற்பனைக் கதைகளைப் பரப்பவும், அவர்களை கொலை செய்யுமாறு கட்டளை பிறப்பிக்கவும், அவர்களுடைய பிரசாரத்திலிருந்து மக்களைப் பாதுகாக்குமாறு கட்டளைகள் பிறப்பிக்கவும் தலைப்பட்டனர். ஹிஜாஸி (சவுதி அரேபியாவி)லும், ஏனைய இஸ்லாமிய நாடுகளிலும் தௌஹீத் பரவி விடுமளவு அவர்களுடைய பிரசாரத்துக்குத் துணையான (பலமான)வர்களை அல்லாஹ் ஏற்படுத்திக் கொடுத்தான்.

அன்றுமுதல் இன்றுவரை மக்கள் அவர்மீது பொய்யானக் கதைகளை பரப்பிக் கொண்டே இருக்கின்றனர். அவர் ஐந்தாவது 'மத்ஹப்' ஒன்றை ஏற்படுத்தியதாகச் சொல்லுகின்றனர். அவருடைய மத்ஹபோ ஹன்பலியாக இருக்கின்றது.

'மேலும் வஹ்ஹாபிகள் நபி ﷺ அவர்களை நேசிக்கின்றார் களில்லை; அவர்கள் மீது ஸலவாத் சொல்ல மாட்டார்கள்' என்றும் கூறுகின்றனர். ஆனால் இமாமவர்களால் எழுதப்பட்ட நூல்களில் 'முக்தஸரு ஸீரதிர் ரஸூல்' (நபி ﷺ அவர்களின் சரித்திர சுருக்கம்) என்பதும் ஒன்றாகும்.

அவர்கள் நபி ﷺ அவர்கள் மீது எந்தளவு அன்புக் கொண்டிருந்தார்கள் என்பதற்கு இந்த நூலே ஓர் அத்தாட்சியாகும்.

இமாமவர்கள் மீது வேண்டுமென்றே துணிந்து சில பொய்களைக் கற்பனை செய்து கூறியுள்ளார்கள். இவை அனைத்தும் மறுமையில் விசாரணைக்கு எடுத்து கொள்ளப்பட்டே தீரும். மக்கள் நடுநிலையான மனதுடன் இமாமவர்களுடைய நூல்களை வாசிப்பார்களென்றால். அவற்றில் குர்ஆனும், ஹதீஸும், ஸஹாபாக்களின் கருத்துக்களும் இருப்பதைக் கண்டுக்கொள்வார்கள்.

உண்மையான நம்பிக்கையுள்ள ஒரு மனிதர் ஓர் ஆலிமைப் பற்றி என்னிடம் கூறினார். அவர் மக்களுக்குப் பாடம் நடத்தும் போதெல்லாம் வஹ்ஹாபியத்தைப் பற்றி எச்சரிக்கத் தவறவே மாட்டார். அவருடைய சபைக்குச் சமூகமளிப்பவர்களில் ஒருவர், முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாபுடைய ஒரு புத்தகத்தை, அதன் பெயருள்ள முன் அட்டையைக் கழற்றிவிட்டுக் கொடுத்தார். அந்த ஆலிம் அதனை வாசித்து விட்டு ஆச்சரியமடைந்தார். அதன் ஆசிரியர் இமாமவர்கள் தான் என்பதை அறிந்ததும் அன்று முதல் அவரைப் புகழ ஆரம்பித்தார்.

நபி ﷺ அவர்கள் ஒரு சந்தர்ப்பத்தில் 'அல்லாஹ்வே! சாமு (ஸிரியாவு)க்கு நீ அபிவிருத்தியை அருள்வாயாக! யமனுக்கும் அபிவிருத்தியை அருள்வாயாக!' என்று பிரார்த்தனை புரிந்தார்கள். அப்பொழுது ஸஹாபாக்கள் யாரஸூலல்லாஹ்! நஜ்துக்கும் (பிரார்த்திப்பீர்களாக!) என்று கூறினார்கள். அதற்கு நபியவர்கள், எதிர்காலத்தில் அங்கிருந்து தான் ஷைத்தானின் கொம்பு முளைக்கும் என்று கூறினார்கள்'

**[ஆதாரம்: புகாரி, *முஸ்லிம்*]**

இப்னு ஹஜர் அஸ்கலானி ﵀ அவர்களும் இன்னும் பல உலமாக்களும் மேற்காட்டிய ஹதீஸிலுள்ள 'நஜ்து' என்ற ஊரைப் பற்றிக் கூறுகையில் 'அது இராக்கிலுள்ள நஜ்தாகும்' என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

(இமாம் முஹம்மதிப்னு அப்தில் வஹ்ஹாப் ﷺ அவர்கள் சவுதி அரேபியாவிலுள்ள நஜ்திலேயே பிறந்தார்கள்.)

நபி ﷺ அவர்கள் முன்னறிவிப்புச் செய்தவாறு இறாக் தேசத்திலுள்ள நஜ்தில் பல 'பித்னா'க் (குழப்பங்)கள் தோன்றின. அங்குதான் நபியவர் களின் பேரப்பிள்ளை, அலி ﷺ அவர்களின் மகன் ஹுஸைன் ﷺ அவர்கள் கொலை செய்யப்பட்டார்கள்.

சில மனிதர்கள் இந்த நஜ்தை ஹிஜாஸிலு(சவுதியிலு)ள்ள நஜ்து என்று கருதுகிறார்கள். இறாக்கில் தோன்றிய அளவு 'பித்னா'க்கள் ஹிஜாஸில் தோன்றவில்லை. ஆனால் ஹிஜாஸிலுள்ள நஜ்தில் தௌஹீத் தோன்றியது. உலகத்தார்கள் அனைவரையும் இந்தத் தௌஹீதுக்காகவே தான் அல்லாஹ் படைத்துள்ளான். இதனைப் பிரசாரம் செய்வதற்காகவே ரஸூல்மார்களை அனுப்பினான்.

நடுநிலையான சிந்தனையுள்ள சில உலமாக்கள் 'முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாப் ﷺ அவர்கள் ஹிஜ்ரி 12ம் நூற்றாண்டில் தோன்றிய ஒரு 'முஜத்தித்' (MUJADDHIDH – சீர்திருத்தவாதி)' என்று கூறியுள்ளார்கள். இவரைப்பற்றி பல நூல்கள் இயற்றியுள்ளனர்; இவர் மூலம் பல நூல்களை உலகுக்கு அறிமுகம் செய்தும் உள்ளனர்.

அவ்வாறான நூலாசிரியர்களில் அலியுத்தன்தாவி என்பவரும் ஒருவராவார். இவர் சில வரலாற்றுக் குறிப்புகளை வெளியாக்கினார். அவர்களில் முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாப், அஹமத் இப்னு இர்பான் ஆகியோரையும் சேர்த்துக் கொண்டார். அவர் அந்நூலில் 'மக்காவுக்கு ஹஜ்ஜுக்கு வந்தவர்கள் மூலமாகவே (இமாமவர்களின்) தௌஹீதுப் பிரசாரம் இந்தியா வரை பரவியது' என்று கூறியுள்ளார்.

ஆங்கிலேயர்களும் இஸ்லாத்தின் எதிரிகளும் தௌஹீதுக் கொள்கைக் கெதிராக செயல்பட ஆரம்பித்தனர். ஏனென்றால், இந்தக் கொள்கையானது

அவர்களுக்கு எதிரான வழியில் முஸ்லிம்களை ஒன்று படுத்துவதாக இருக்கின்றது.

இஸ்லாத்தின் எதிரிகள் அந்தக் கொள்கையின் பலத்தை மட்டம் தட்டுவதற்காக, வயிறு வளர்ப்பவர்களுக்கு ஜாடையாக வழிகாட்டி விட்டார்கள். இவர்களோ, தௌஹீதின் பக்கம் மக்களை அழைப்பவர் களுக்கு ‘வஹ்ஹாபி’ என்ற பட்டத்தைச் சூட்டி விட்டனர்.

தௌஹீதின்பால் மக்களை அழைக்கும் இவர்கள் இஸ்லாத்தில் புதுமைகளை ஏற்படுத்துகின்றவர்கள் என்று மக்கள் கருத ஆரம்பித்து விட்டனர். அல்லாஹ் ஒருவனை மட்டுமே அழைத்துப் பிரார்த்தனை செய்யும் தௌஹீதுக் கொள்கையை விட்டு முஸ்லிம்களை திசை திருப்பு வதற்காக எதிரிகள் (இஸ்லாத்தில் உள்ளவர்களை வைத்தே) இவ்விதம் செய்தனர்.

‘வஹ்ஹாபி’ என்றால் ‘அல்வஹ்ஹாப்’ என்ற அல்லாஹ்வின் பெயருடன் இணைக்கப்பட்டு அல்லாஹ்வைச் சேர்ந்தவன் என்று பொருள் படும் என்பதை இந்த அறிவீனர்கள் உணரவில்லை. இந்தப் பெயர் அல்லாஹ்வுடைய அழகு திருநாமங்களில் ஒன்றாகும். அவன் தான் தௌஹீதைக் கொடையாகக் கொடுத்து சுவர்க்கத்தைத் தருவதாக வாக்களித் துள்ளான்.



# தௌஹீதினதும் ஷிர்க்கினதும் போர்க்களம்

ஷிர்க்குடன் தௌஹீதுக்கு ஏற்பட்ட யுத்தம், அல்லாஹ் ஒருவனை மட்டுமே வணங்குமாறும், சிலை வணக்கத்தைக் கைவிடுமாறும் நூஹ் ﷺ அவர்கள் தனது மக்களை அழைத்த காலந்தொட்டு ஏற்பட்டதாகும். அம்மக்களிடையே நூஹ் ﷺ அவர்கள் 950 வருடகாலங்கள் வாழ்ந்து தௌஹீதுப் பிரசாரத்தை மேற்கொண்டார்கள். பின்வருமாறு அல்குர்ஆன் கூறுகின்றவாறு அவர்களுடைய மறுப்பு இருந்தது.

وَ قَالُوْا لَا تَذَرُنَّ اٰلِهَتَكُمْ وَلَا تَذَرُنَّ وَدًّا وَّلَا سُوَاعًا وَّ لَا يَغُوْثَ وَيَعُوْقَ وَنَسْرًا
وَقَدْ اَضَلُّوْا كَثِيْرًا

**“(அவர்களில் உள்ளவர்கள் தங்களில் உள்ள மற்றவர்களை நோக்கி) நீங்கள் உங்கள் தெய்வங்களை விட்டு விடாதீர்கள். ‘வத்’ (என்னும் விக்கிரத்)தையும் (விட்டு விடாதீர்கள்.) ‘ஸுவாவு’ ‘யகூஸ்’ ‘யஊக்’ ‘நஸ்ரு’ (ஆகிய விக்கிரகங்)களையும் விட்டு விடாதீர்கள் என்று கூறி நிச்சயமாக அநேகரை வழிகெடுத்து விட்டனர்”**

**[அல்குர்ஆன்: 71:23,24]**

இப்னு அப்பாஸ் ؓ அவர்கள், இவ்வசனங்களுக்கு அளிக்கும் விளக்கத்தை இமாம் புகாரி ؒ அவர்கள் பதிவு செய்துள்ளார்கள். இவ்வசனத்தில் கூறப்பட்ட பெயர்கள் நூஹ் ﷺ அவர்களது கூட்டத்திலிருந்த நல்லடியார்களுடையதாகும். அவர்கள் மரணித்த பின்னால், அவர்கள் அடக்கம் செய்யப்பட்ட இடங்களில் (அவர்களது நினைவாக) ஏதேனும் நட்டு அடையாளமிடுமாறு, ஷைத்தான் அம்மக்களைத் தூண்டினான். அவர்கள் அவ்வாறே நட்டார்கள். ஆனால் அவர்கள் அவற்றை வணங்கவில்லை. இந்தச் சமூகம் இறந்த பின்னால் அடுத்து

வந்த சமூகம் அதனை வணங்க ஆரம்பித்தது. (இதுதான் சிலை வணக்கத்தின் தோற்றமாகும்)

நூஹ் ﷺ அவர்களுக்குப் பின்னால் பல தூதர்கள் வந்தனர். அல்லாஹ் ஒருவனை மட்டுமே வணங்க வேண்டுமென்றும், வணக்கத் துக்குத் தகுதியற்ற அல்லாஹ் அல்லாதவற்றை வணங்குவதை விட்டு விடுமாறும் அவர்கள் மக்களுக்குப் போதனை செய்தனர். (சகோதரனே!) குர்ஆனின் பக்கம் செவிதாழ்த்து! அது அவர்களைப்பற்றி உனக்குத் தகவல் சொல்லும்.

وَاِلٰى عَادٍ اَخَاهُمْ هُوْدًا‌ؕ قَالَ يٰقَوْمِ اعْبُدُوا اللّٰهَ مَا لَـكُمْ مِّنْ اِلٰهٍ غَيْرُهٗ‌ؕ اَفَلَا تَتَّقُوْنَ

**"'ஆத்' (என்னும்) மக்களுக்கு அவர்களுடைய சகோதரர் ஹூதை (நம்முடைய ரஸூலாக அனுப்பினோம்) அவர் (அம்மக்களை நோக்கி,) என்னுடைய மக்களே! நீங்கள் அல்லாஹ் ஒருவனையே வணங்குங்கள். அவனைத் தவிர உங்களுக்கு வேறு நாயனில்லை. (ஆகவே,) நீங்கள் (அவனுக்குப்) பயப்பட வேண்டாமா?" என்று கூறினார்" [அல்குர்ஆன்: 7:65]**

وَاُتْبِعُوْا فِىْ هٰذِهِ الدُّنْيَا لَعْنَةً وَّيَوْمَ الْقِيٰمَةِ‌ ؕ اَلَاۤ اِنَّ عَادًا كَفَرُوْا رَبَّهُمْ‌ ؕ اَلَا بُعْدًا لِّعَادٍ قَوْمِ هُوْدٍ

**"'ஸமூது' (என்னும் மக்)களிடம், அவர்களுடைய சகோதரர் ஸாலிஹை (நம்முடைய ரஸூலாக அனுப்பி வைத்தோம்.) அவர் (அம்மக்களை நோக்கி,) என்னுடைய மக்களே! அல்லாஹ் ஒருவனையே நீங்கள் வணங்குங்கள்; உங்களுக்கு அவனைத் தவிர வேறு நாயன் இல்லை" என்று கூறினார்" [அல்குர்ஆன்: 11:60]**

وَاِلٰى مَدْيَنَ اَخَاهُمْ شُعَيْبًا‌ؕ قَالَ يٰقَوْمِ اعْبُدُوا اللّٰهَ مَا لَـكُمْ مِّنْ اِلٰهٍ غَيْرُهٗ

**"'மத்யன்' (என்னும் ஊர்) மக்களுக்கு, அவர்களுடைய சகோதரர் ஷுஐபை (நம்முடைய தூதராக அனுப்பினோம்.) அவர் (அம்மக்களை நோக்கி,) என்னுடைய மக்களே! அல்லாஹ் ஒருவனையே நீங்கள் வணங்குங்கள். அவனைத் தவிர வேறு நாயன் உங்களுக்கு இல்லை" என்று கூறினார்" [அல்குர்ஆன்: 11:84]**

وَاِذْ قَالَ اِبْرٰهِيْمُ لِاَبِيْهِ وَقَوْمِهٖۤ اِنَّنِىْ بَرَآءٌ مِّمَّا تَعْبُدُوْنَۙ

اِلَّا الَّذِىْ فَطَرَنِىْ فَاِنَّهٗ سَيَهْدِيْنِ

**“(நபியே!) இப்றாஹீம் (அலை) தன்னுடைய தந்தையையும் ஜனங்களையும் நோக்கிக் கூறியதை நினைத்துப் பாரும். ‘நிச்சயமாக நான் நீங்கள் வணங்குபவைகளை விட்டு விலகிக்கொண்டேன்; எவன் என்னைச் சிருஷ்டித்தானோ, அவனைத்தவிர, (அவனையே நான் வணங்குவேன்;) நிச்சயமாக அவனே எனக்கு நேரான வழியை அறிவிப்பான் (என்றும் கூறினார்.)” [அல்குர்ஆன்: 43:26,27]**

நபிமார்கள் கொண்டுவந்த மார்க்கத்தைப் புறக்கணிப்பவர்களாகவும் தடை செய்பவர்களாகவுமே முஷ்ரிக்குகள் இருந்துள்ளனர். அந்த நபிமார்கள் தங்களால் பலம் கொண்டளவு எதிரிகளை எதித்துப் போராடினர்.

எங்கள்பால் அனுப்பப்பட்ட ரஸூலுல்லாஹி ﷺ அவர்கள், நம்பிக்கைக்குரியவர்; உண்மையுரைப்பவர் என்றெல்லாம் நபித்துவத்துக்கு முன்னால் பிரபல்யமடைந்திருந்தனர். அம்மக்களை அல்லாஹ் ஒருவனுக்கு மட்டுமே வணக்கம் செலுத்துமாறும், அவர்களுடைய முன்னோர்கள் வணங்கி வழிபட்டு வந்த சிலை வணக்கத்தை விட்டு விடுமாறும் நபியவர்கள் சொன்னபோது, அவர்களுக்குச் சூட்டியிருந்த உண்மை பேசுபவர், நம்பிக்கைக்குரியவர் என்ற புகழாரங்களையெல்லாம் மறந்து, பொய்யன், சூனியக்காரன் என்றெல்லாம் அம்மக்கள் சொல்ல ஆரம்பித்தனர். அவர்களுடைய புறக்கணிப்பைப்பற்றிக் குர்ஆன் பின்வரு மாறு கூறுகின்றது.

وَعَجِبُوْۤا اَنْ جَآءَهُمْ مُّنْذِرٌ مِّنْهُمْ وَقَالَ الْكٰفِرُوْنَ هٰذَا سٰحِرٌ كَذَّابٌ

اَجَعَلَ الْاٰلِهَةَ اِلٰهًا وَّاحِدًا ۖۚ اِنَّ هٰذَا لَشَىْءٌ عُجَابٌ

وَانْطَلَقَ الْمَلَاُ مِنْهُمْ اَنِ امْشُوْا وَاصْبِرُوْا عَلٰٓى اٰلِهَتِكُمْ ۖۚ اِنَّ هٰذَا لَشَىْءٌ يُّرَادُ ۖۚ

“(அவர்களுக்கு) அச்சமூட்டி எச்சரிக்கை செய்யக்கூடிய ஒரு தூதர், (ஆகிய நீர்) அவர்களி(ன் இனத்தி)லிருந்தே அவர்களிடம் வந்ததைப் பற்றி அவர்கள் ஆச்சர்யப்பட்டு, ‘இவர் பொய் சொல்லும் ஒரு சூனியக்காரர்தான்’ என்று (உம்மைப் பற்றி) இந்நிராகரிப்போர் கூறுகின்றனர். என்ன! இவர் (நாம் வணங்கும்) தெய்வங்கள் யாவற்றையும் (நிராகரித்து விட்டு வணக்கத்துக்குரியவன்) ஒரே ஆண்டவன் தான் என்று ஆக்கி விட்டாரா? மெய்யாகவே இது ஓர் ஆச்சரியமான விஷயம்தான் (என்று கூறி,) அவர்களில் உள்ள தலைவர்கள், (மற்றவர்களை நோக்கி ‘இவரை விட்டு) நீங்கள் சென்று விடுங்கள்; உங்கள் தெய்வங்களில் நீங்கள் உறுதியாயிருங்கள். (உங்களுடைய தெய்வங்களைக் கைவிடும்படி கூறும்) இக்காரியம் நிச்சயமாக (உங்களுக்கு விரோதமாக)க் கருதப் பட்டதாகும்’ என்று (கூறிக் கொண்டே) சென்று விட்டனர்” [அல்குர்ஆன்: 38:4,5,6]

كَذٰلِكَ مَاۤ اَتَى الَّذِيْنَ مِنْ قَبْلِهِمْ مِّنْ رَّسُوْلٍ اِلَّا قَالُوْا سَاحِرٌ اَوْ مَجْنُوْنٌ ۚ
اَتَوَاصَوْا بِهٖ‌ ۚ بَلْ هُمْ قَوْمٌ طَاغُوْنَ ۚ

“இவ்வாறே அவர்களுக்கு முன்னிருந்தவர் (ஜனங்)களும் (அவர்களிடம்) எந்தத்தூதர் வந்த போதிலும் (அவரை) ‘சூனியக்காரர்’ அல்லது ‘பைத்தியக்காரர்’ என்று அவர்கள் கூறாமல் இருக்கவில்லை. இவ்வாறு (கூறும்படியே) அவர்கள் தங்களுக்குள் (பரம்பரையாக) ஒருவருக்கொருவர் உபதேசம் செய்து வந்தனர் போலும்! அன்று அவர்கள் (இயற்கையிலேயே) அக்கிரமக்கார ஜனங்களாக இருக்கின்றனர்” [அல்குர்ஆன்: 51:52,53]

தௌஹீதின்பால் மக்களை அழைத்த நபிமார்களின் நிலைபற்றியும், அவர்களையும், அவர்கள் கொண்டு வந்தவற்றையும் பொய்யாக்கிப் புறக்கணித்துப் பல அவதூறுகளைப் பரப்பிக்கொண்டிருந்த பொய்யர்களின் நிலைபற்றியும் மேலேயுள்ள வசனங்கள் அழகாகக் கூறுகின்றன.

எமது இக்காலத்தில் ஒரு முஸ்லிம் (அல்லது ஒரு ஜமாஅத்) ஏனைய முஸ்லிம் சகோதரர்களுக்கு நற்பண்புகள், உண்மை நம்பிக்கைப் போன்றவற்றைப் போதித்தால் இங்கு எதிர்ப்போ இடையூறோ வரமாட்டாது.

நபிமார்கள் ரஸூல்மார்கள் செய்த போதனையாகிய தௌஹீதின் பக்கம் மக்களை அழைக்க முற்பட்டாலோ எதிர்ப்புக் கிளம்பிவிடும். அவன்மீது பல பொய்யான கதைகளையெல்லாம் கட்டி விடுவார்கள். அவனுடைய அழைப்பை மக்கள் புறக்கணிக்க வேண்டும் என்பதற்காக அவனை 'வஹ்ஹாபி' என்றும் சொல்லுவார்கள். தௌஹீதுடையக் கருத்தைக் கூறும் குர்ஆன் வசனமொன்றை மொழிந்தாலும் 'இது வஹ்ஹாபியத்தான வசனம்' என்று அவர்கள் கூறிவிடுவார்கள்.

'உதவி தேடினால் அல்லாஹ்விடமே உதவி தேடு' என்ற ஹதீஸை அவர்கள் முன் கூறினால் இது வஹ்ஹாபியத்தான ஹதீஸ் என்று கூறிவிடுவார்கள். தொழுகின்றவன் நெஞ்சின் மீது கையை வைத்து விட்டாலும் அல்லது அத்தஹிய்யாத்தின் போது விரலை ஆட்டி விட்டாலும் அவனை வஹ்ஹாபி என்று சொல்லி விடுவார்கள்.

அல்லாஹ்வை மட்டுமே உதவிக்கு அழைத்து, அவனுக்கு மட்டுமே வணக்கம் செலுத்தி நபி ﷺ அவர்களுடைய ஸுன்னாவை நிலை நாட்டுகின்ற ஒருவனுடைய அடையாளமாக 'வஹ்ஹாபி' என்ற சொல் ஆகிவிட்டது. இது தௌஹீதுடைய அடிப்படையில் உள்ளவர்களுக்கு அல்லாஹ் செய்த ஒரு பேரருளாகும்.

தௌஹீதுப் பிரசாரகர்கள், பின்வரும் அல்குர்ஆன் வசனங்களில் அல்லாஹ் தனது ரஸூலுக்குச் சொன்னபடி அந்த ரஸூல் ﷺ நடந்தவாறு தமது நடைமுறையை அமைத்துப் பொறுமையாக நடந்து கொள்ளல் அவசியமாகும்.

وَاصْبِرْ عَلٰى مَا يَقُوْلُوْنَ وَاهْجُرْهُمْ هَجْرًا جَمِيْلًا

**"(நபியே!) அவர்கள் (உம்மைப்பற்றிக் குற்றம் குறைகள்) கூறுவதைச் சகித்துக் கொண்டு, கண்ணியமான முறையில் அவர்களை விட்டு விலகிவிடும்"**

**[அல்குர்ஆன்: 73:10]**

فَاصْبِرْ لِحُكْمِ رَبِّكَ وَلَا تُطِعْ مِنْهُمْ اٰثِمًا اَوْ كَفُوْرًا ۚ

**“உமது இறைவனின் கட்டளைக்காக நீர் பொறுத்திரும். அவர்களிலுள்ள யாதொரு பாவியையும் நன்றி கெட்டோரையும் நீர் பின்பற்றாதீர்”**

**[அல்குர்ஆன்: 76:24]**

முஸ்லிம்கள் அனைவரும் தௌஹீதை ஒப்புக்கொண்டு அதன் பிரசங்கிகளை நேசிக்க வேண்டும். ஏனென்றால் தௌஹீத் என்பது எல்லா ரஸுல்மார்களினதும் தஃவத்தா(பிரசாரமா)கும். இறுதி நபி முஹம்மத் ﷺ அவர்களுடைய தஃவத்தும் இதுவேயாகும்.

எவனொருவன் நபி ﷺ அவர்களை நேசிக்கிறானோ, அவன் தௌஹீதை நேசித்தவனாவான். எவன் தௌஹீதுடன் கோபம் கொள்கிறானோ, அவன் நபி ﷺ அவர்களுடன் கோபம் கொள்பவனாவான்.



# சட்டமியற்றும் அதிகாரம்

## சட்டமியற்றும் அதிகாரம் அல்லாஹ்வுக்கன்றி வேறெவருக்குமில்லை

அல்லாஹ், உலகத்தார்கள் அனைவரையும் தனக்கு வழிபடுவதற் காகவே படைத்தான்; அவர்களுக்குக் கற்றுக் கொடுப்பதற்காகவே அவர்களிடம் ரஸூல்மார்களை அனுப்பினான்; மனிதர்களுக்கு மத்தியில் உண்மையைக் கொண்டும் நீதத்தைக் கொண்டும் தீர்ப்பு வழங்குவதற்காக ரஸூல்மார்களுடன் வேதத்தையும் அனுப்பினான். இச்சட்டங்கள் அனைத்தும் அல்லாஹ்வுடைய வசனங்களிலும் அவனது ரஸூலுடைய போதனைகளிலும் அமைந்துள்ளன.

சட்டமென்பது, வணக்கவழிபாடுகள், அன்றாட நடைமுறைகள், கொள்கைக் கோட்பாடுகள், வாழ்க்கை நெறிகள், அரசியல் போன்ற வற்றையும், மனிதனுடைய வாழ்க்கையில் அமைகின்ற இவையல்லாத ஏனையவற்றையும் உள்ளடக்குகின்றதாகவே இருக்கின்றது.

## கொள்கையில் சட்டமென்பது:

ரஸூல்மார்கள் மனிதர்களைத் தௌஹீதின் பக்கம் அழைத்து, அடிப்படைக் கொள்கைகளைச் சரி செய்கின்றவர்களாகவே இருந்தனர். யூஸுப் ﵇ அவர்களுடன் சிறையிலிருந்த இரண்டு கைதிகள் தாம் கண்ட இரு கனவுகளுக்கு நபியவர்களிடம் விளக்கம் கேட்டபோது, அவற்றுக்குப் பதிலளிக்குமுன்னர் அவ்விருவரையும் தௌஹீதின் பக்கம் அழைப்பு விடுத்தார்கள். (கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லுமுன், கேளாத ஒன்றைக் கூறுமளவு முக்கியத்துவமானதுக்கே முதலிடம் அளித்துள்ளார்கள்.

يٰصَاحِبَىِ السِّجْنِ ءَاَرْبَابٌ مُّتَفَرِّقُوْنَ خَيْرٌ اَمِ اللّٰهُ الْوَاحِدُ الْقَهَّارُ

مَا تَعْبُدُوْنَ مِنْ دُوْنِهٖۤ اِلَّاۤ اَسْمَآءً سَمَّيْتُمُوْهَاۤ اَنْـتُمْ وَ اٰبَآؤُكُمْ مَّاۤ اَنْزَلَ اللّٰهُ بِهَا مِنْ سُلْطٰنٍ اِنِ

الْحُكْمُ اِلَّا لِلّٰهِ اَمَرَ اَلَّا تَعْبُدُوْۤا اِلَّاۤ اِيَّاهُ ذٰلِكَ الدِّيْنُ الْقَيِّمُ وَلٰـكِنَّ اَكْثَرَ النَّاسِ لَا يَعْلَمُوْنَ

“சிறைக் கூடத்திலிருக்கும் என்னிரு தோழர்களே! (யாதொரு சக்தியுமற்ற) வெவ்வேறு தெய்வங்கள் மேலா? அல்லது (யாவரையும்) அடக்கி ஆளுகின்ற (ஒரே நாயனாகிய) அல்லாஹ் ஒருவனே மேலா? அவனையன்றி நீங்கள் வணங்குபவை யாவும், நீங்களும் உங்கள் மூதாதையர்களும் வைத்துக் கொண்ட வெறும் (கற்பனைப்) பெயர்களைத் தவிர (உண்மையில் அவை எதுவுமே) இல்லை. அல்லாஹ் இதற்கு யாதோர் ஆதாரத்தையும் இறக்கி வைக்கவுமில்லை. சகல அதிகாரங்களும், அல்லாஹ் ஒருவனுக்கேயன்றி (வேறெவருக்கும்) இல்லை. அவனைத்தவிர, (மற்றெவரையும்) நீங்கள் வணங்கக் கூடாதென்று அவனே கட்டளை இட்டிருக்கின்றான். இதுதான் நேரான மார்க்கம். எனினும் மனிதர்களில் பெரும்பாலோர் (இதனை) அறிந்து கொள்வதில்லை. (என்று யூஸுப் (அலை) அவ்விருவருக்கும் நல்லுபதேசம் செய்துவிட்டு, அவர்களின் கனவுகளுக்கு விளக்கம் அளித்தார்கள்” [அல்குர்ஆன்: 12:39,40]

## வணக்கங்களில் சட்டமென்பது:

‘நான் தொழுவதை நீங்கள் பார்த்தது போன்று தொழுங்கள்’ [புகாரி, முஸ்லிம்] ‘என்னிலிருந்தே நீங்கள் வணக்கங்களை எடுத்துக் கொள்ளுங்கள்’ [முஸ்லிம்] என்று நபியவர்கள் கூறுவதற்கமைவாகவும், ‘ஹதீஸ் ‘ஸஹீஹாக’ இருக்குமானால் அதுவே எனது மத்ஹப்’ என்று முஜ்தஹிதுகளான இமாம்கள் ஒவ்வொருவரும் சொன்னதற்கு அமைவாகவும் தொழுகை, ஸகாத், ஹஜ் போன்ற வணக்கங்களுக்கும் இவையல்லாத இதர வணக்கங்களுக்கும் குர்ஆனையும் ஸஹீஹான ஹதீஸைகளையுமே ஆதாரமாகக் கொள்ளல் நம்மில் ஒவ்வொருவர் மீதும் கடமையாகின்றது.

இமாம்கள், ஏதாவதொரு விஷயத்தில் கருத்து வேறுபட்டால், அவர்களில் ஒருவருடைய சொல்லில் மட்டுமே நாங்கள் பிடிவாதமாக இருக்கக் கூடாது. சரியான ஆதாரம் எவரிடம் உண்டோ அதனையே எடுத்துக்கொள்ள வேண்டும். இதுவே குர்ஆன் ஸுன்னாவைக் கொண்டுள்ள அடிப்படைச் சட்டமாகும்.

## வியாபாரம், கொடுக்கல் வாங்கல், கடன் போன்றவற்றின் சட்டம்

அல்லாஹ்வுக்கும் அவனுடைய ரஸூலுக்கும் உரியதாகும். இதுபற்றி அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான்:

فَلَا وَرَبِّكَ لَا يُؤْمِنُوْنَ حَتّٰى يُحَكِّمُوْكَ فِيْمَا شَجَرَ بَيْنَهُمْ ثُمَّ لَا يَجِدُوْا فِيْٓ اَنْفُسِهِمْ حَرَجًا مِّمَّا قَضَيْتَ وَيُسَلِّمُوْا تَسْلِيْمًا

**“(நபியே!) உம் இறைவன் மீது சத்தியமாக அவர்கள் தங்களுக்குள் ஏற்பட்ட சச்சரவில், உம்மை நீதிபதியாக அங்கீகரித்து, நீர் செய்யும் தீர்ப்பைத் தங்கள் மனதில் எத்தகைய அதிருப்தியுமின்றி அங்கீகரித்து முற்றிலும் வழிபடாத வரையில் அவர்கள் உண்மை விசுவாசிகளாக ஆகமாட்டார்கள்” [அல்குர்ஆன்: 4:65]**

இவ்வசனம் அருளப்பட்ட காரணத்தை முபஸ்ஸிரீன்கள் (விரிவுரை யாளர்கள்) பின்வருமாறு கூறுகின்றார்கள்.

இரண்டு நபித்தோழர்கள் (அருகருகே உள்ள தத்தமது தோட்டங்களுக்கு) நீர் பாய்ச்சுவதில் கருத்து வேறுபட்டுக் கொண்டனர். அப்பொழுது நபி ﷺ அவர்கள் (அவர்கள் இருவருக்கும் மத்தியில் நீதியாக) ஸுபைர் ؓ அவர்களுக்கு நீர் பாய்ச்சுமாறு தீர்ப்பளித்தார்கள். இதில் சம்பந்தபட்ட அடுத்தவர் ‘நபியே! உங்களது சாச்சாவின் மகனுக்காக நீங்கள் இவ்வாறு தீர்ப்பளித்து விட்டீர்கள்’ என்று சொல்லிவிட்டார். அப்பொழுது தான் இவ்வசனம் அருளப்பட்டது. **[*ஆதாரம்: புகாரி*]**

தண்டனை வழங்குவதிலும் பழிவாங்குவதிலும் உள்ள சட்டங்களைப் பின்வரும் அல்குர்ஆன் வசனம் தெளிவுபடுத்துகின்றது:

وَكَتَبْنَا عَلَيْهِمْ فِيْهَاۤ اَنَّ النَّفْسَ بِالنَّفْسِۙ وَالْعَيْنَ بِالْعَيْنِ وَالْاَنْفَ بِالْاَنْفِ وَالْاُذُنَ بِالْاُذُنِ وَالسِّنَّ بِالسِّنِّۙ وَالْجُرُوْحَ قِصَاصٌؕ فَمَنْ تَصَدَّقَ بِهٖ فَهُوَ كَفَّارَةٌ لَّهٗؕ وَمَنْ لَّمْ يَحْكُمْ بِمَاۤ اَنْزَلَ اللّٰهُ فَاُولٰٓـئِكَ هُمُ الظّٰلِمُوْنَ

“அவர்களுக்காக அ(வர்களுடைய வேதமாகிய தவ்றாத்)தில் நாம் விதித்திருந்தோம்: ‘உயிருக்கு உயிர், கண்ணுக்குக் கண், மூக்குக்கு மூக்கு, காதுக்குக் காது, பல்லுக்குப் பல் ஆகவும் காயங்களுக்கும் பழிவாங்கப்படும் என்பதாக. (விதித்திருந்தோம்) எனினும் எவரேனும் பழிவாங்குவதை (மன்னித்து) தானமாக விட்டுவிட்டால், அது அவரு(டைய தீவினை)க்குப் பரிகாரமாகி விடும். எவர்கள் அல்லாஹ் அருளிய (வேதக்கட்டளைப்) பிரகாரம் தீர்ப்பளிக்கவில்லையோ அவர்கள், நிச்சயமாக அக்கிரமக்காரர்கள் தாம்” [அல்குர்ஆன்: 5:45]

## மார்க்க விதிபற்றிய சட்டம்:

ஷரீஅத் சட்டம் பற்றி பின்வரும் அல்குர்ஆன் வசனம் தெளிவு படுத்துகின்றது.

شَرَعَ لَكُمْ مِّنَ الدِّيْنِ مَا وَصّٰى بِهٖ نُوْحًا وَّالَّذِىْۤ اَوْحَيْنَاۤ اِلَيْكَ وَمَا وَصَّيْنَا بِهٖۤ اِبْرٰهِيْمَ وَمُوْسٰى وَعِيْسٰۤى اَنْ اَقِيْمُوا الدِّيْنَ وَ لَا تَتَفَرَّقُوْا فِيْهِؕ

“(மூமின்களே!) நூஹுவுக்கு அவன் (அல்லாஹ்) எதனை உபதேசித்தானோ, அதனையே உங்களுக்கும் மார்க்கமாக்கி இருக்கிறான். ஆகவே (நபியே!) நாம் உமக்கு வஹீ மூலம் அறிவிப்பதும், இப்றாஹீம், மூஸா, ஈஸா ஆகியோருக்கு நாம் உபதேசித்ததும் என்னவென்றால், (நீங்கள் ஒருமித்து ஏகதெய்வக் கொள்கையுடைய உண்மையான) மார்க்கத்தை நிலையாக கைக்கொள்ளுங்கள். அதில் (பல பிரிவுகளாகப்) பிரிந்து விடாதீர்கள் என்றுதான்” [அல்குர்ஆன்: 42:13]

மார்க்க விதிகளை ஏற்படுத்தும் உரிமையை அல்லாஹ் அல்லாத வர்களுக்குக் கொடுக்கும் இணைவைப்போரை அல்லாஹ் மறுத்துரைத்துப் பின்வருமாறு கூறுகின்றான்.

اَمْ لَهُمْ شُرَكَٰٓؤُا شَرَعُوْا لَهُمْ مِّنَ الدِّيْنِ مَا لَمْ يَاْذَنْۢ بِهِ اللّٰهُ

**“அல்லாஹ் அனுமதிக்காத எதனையும் அவர்களுக்கு மார்க்க மாக்கி வைக்கக்கூடிய இணை (தெய்வங்)களும் அவர்களுக்கு இருக்கின்றனவா?”**

**[அல்குர்ஆன்: 42:21]**



# அல்லாஹ் அருளியதைக் கொண்டே தீர்ப்பளித்தல்

## அனைத்துக்கும் மூல ஆதாரம் குர்ஆன் மற்றும் சுன்னா மட்டுமே!

முஸ்லிம்கள் ஒவ்வொருவரும் குர்ஆனைக் கொண்டும், சரியான ஸுன்னாவைக் கொண்டும் தீர்ப்பு வழங்க வேண்டும். எல்லாவற்றுக்கும் அவ்விரண்டின் பக்கமே தீர்ப்புக் கேட்டுச் செல்லவும் வேண்டும். பின்வரும் மறைவசனத்தைக் கொண்டே அவ்வாறு செயல்பட வேண்டும்.

وَاَنِ احْكُمْ بَيْنَهُمْ بِمَآ اَنْزَلَ اللّٰهُ

**“அல்லாஹ் அருளியவைகளைக் கொண்டே நீர் அவர்களுக்கிடையில் தீர்ப்பளிப்பீராக!” [அல்குர்ஆன்: 5:49]**

‘அல்லாஹ் அருளியவற்றைக் கொண்டே தீர்ப்பளித்து, அல்லாஹ் அருளியவற்றையே தேர்ந்து எடுத்துக் கொள்ளக்கூடிய தலைவர்களுக்கும், அவர்களுடைய சமூகத்தவர்களுக்கும் அல்லாஹ் பலத்தைக் கொடுக்கிறான்’ என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். [*ஆதாரம்: இப்னு மாஜா (ஹஸன்)*]

இஸ்லாமிய நாடல்லாத அந்நிய நாடுகளில் வாழ்கின்ற முஸ்லிம்கள் குர்ஆனுக்கும் ஸுன்னாவுக்கும் முரண்படுகின்ற பிரான்ஸ் சட்டம், ஆங்கிலேய சட்டம் ஆகியவற்றுக்கு அடிபணியாதிருப்பது கடமையாகும். இஸ்லாத்துக்கு முரண்படுகின்றவாறு தீர்ப்புகள் வழங்கப்படும் நீதிமன்றங்களுக்கு அவர்கள் செல்லாதிருக்க வேண்டும். அறிவாளிகளில் நம்பிக்கையானவர்களிடத்தில் இஸ்லாத்தின் தீர்ப்பைக் கொண்டு நீதி கேட்க வேண்டும். இதுவே அவர்களுக்கு சிறந்தது. ஏனென்றால் இஸ்லாம்

முஸ்லிம்களுக்கு மத்தியில் நீதியாகத் தீர்ப்பு அளிக்கின்றது. நகரங்க ளிலுள்ள நீதிமன்றங்களுக்குச் சென்று எந்தவிதப் பயனுமற்றதாக வீணாக்கக்கூடிய பணத்தையும், நேரத்தையும் அது சேமித்துக் கொடுக் கின்றது. அவ்வாறு வீணாக்கிக் கொண்டு, இஸ்லாத்துக்கு மாறான தீர்ப்பை எதிர்பார்க்கின்றவனுக்கு மறுமையில் இரட்டிப்பான வேதனை யுண்டு. ஏனென்றால் அவன், நீதியுள்ள அல்லாஹ்வுடைய சட்டத்தைப் புறக்கணித்து விட்டு, அநீதியாக நடந்து கொள்ளும், அல்லாஹ்வுடைய படைப்பின் சட்டத்தில் ஒதுங்கிக் கொண்டவனாகிறான்.



# தௌஹீதுக் கொள்கை முதலாவதா? அல்லது ஆட்சி முதலாவதா?

அஷ்ஷெய்க் முஹம்மத் குதுப் அவர்கள் மக்கா தாருல் ஹதீஸில் ஆற்றிய ஓர் உரையின் போது, இந்த அடிப்படையில் கேட்கப்பட்ட ஒரு கேள்விக்கு அவர் பதிலளித்தார். கேள்வியும், அதற்கான பதிலும் பின்வருமாறு:-

**கேள்வி:** 'ஆட்சியின் முன்னே தான் இஸ்லாம் மீட்சி பெறும்' என்று சிலர் கூறுகின்றனர். வேறு சிலரோ, அகீதாவை (அடிப்படைக் கொள்கையை)ச் சரிசெய்வதிலும் அவ்வழியில் மக்களைப் பயிற்று விப்பதிலும் தான் இஸ்லாம் மீட்சிபெறும் என்று கூறுகின்றனர். இவ்விரண்டில் எது சரியானது?

**பதில்:** 'அகீதாவை'ச் சரியான முறையில் பிரசாரம் செய்யக்கூடிய 'தாஇகள்' (பிரசாரகர்கள்) இல்லாமல், பூமியில் இந்த மார்க்கத்தின் ஆட்சி எங்கிருந்து வரும்? அந்த 'தாஇகள்' சரியான ஈமானைப் போதிக்கின்றனர்; தங்களுடைய மார்க்கத்தில் சோதிக்கப்பட்டு பொறுமையாக இருக்கின்றனர்; அல்லாஹ்வுடைய பாதையில் ஜிஹாத் செய்கின்றனர். அப்பொழுது பூமியிலே அல்லாஹ்வுடைய மார்க்கம் நல்லமுறையில் சட்டமாக்கப் படுகின்றது. ஆட்சி என்பது வானத்திலிருந்து பூமிக்கு வருகின்ற ஒன்றன்று. தானாக அது வானத்திலிருந்து இறங்கி விடவும் மாட்டாது. ஒவ்வொரு வஸ்துவும் வானத்திலிருந்து இறங்குகின்றன என்பது உண்மைதான். ஆனால் மனிதனுடைய முயற்சியின் பயனாகத்தான் இச்சந்தர்ப்பத்தை மனிதனுக்கு, அல்லாஹ் ஏற்படுத்திக் கொடுத்துள்ளான். இதுபற்றிக் குர்ஆன் பின்வருமாறு கூறுகின்றது.

وَلَوْ يَشَآءُ اللهُ لَانْـتَصَرَ مِنْهُمْ وَلٰـكِنْ لِّيَبْلُوَاْ بَعْضَكُمْ بِبَعْضٍؕ

**“அல்லாஹ் நாடியிருந்தால் (அவர்கள் உங்களுடன் யுத்தம் புரிய வருவதற்கு முன்னதாகவே) அவர்களிடம் பழிவாங்கியிருப்பான். ஆயினும் (யுத்தத்தின் மூலம்) உங்களில் சிலரை, சிலரைக் கொண்டு சோதிக்கிறான்.” [அல்குர்ஆன்: 47:04]**

அகீதாவைக் சரிசெய்வது கொண்டும் அதனமைப்பில் காலத்தைப் பயிற்றுவிப்பது கொண்டுமே நாம் (பிரசாரத்தை) ஆரம்பிக்க வேண்டும். (இஸ்லாத்தின்) ஆரம்பகாலம் சோதனைக்குள்ளானவாறு சோதிக்கப்பட்டு, சோதனைக்காக பொறுமை சாதிக்க வேண்டியேற்படும்.



# பெரிய ஷிர்க்கும் அதன் வகைகளும்

பெரிய ஷிர்க் என்றால் அல்லாஹ்வுக்கு நிகர் உண்டாக்குதல். உதாரணத்துக்கு அல்லாஹ்வை அழைப்பது போன்று அதனை அழைப்ப தாகும். அல்லது இரட்சிக்கத்தேடுதல், அறுத்துப் பலியிடுதல், நேர்ச்சை செய்தல் போன்ற வணக்கங்களில் ஏதாவது ஒன்றை அதற்கு ஏற்படுத் துவதாகும்.

'இப்னு மஸ்ஊத் ﵁ அவர்கள் நபி ﷺ அவர்களை நோக்கி,' பாவங்களில் மிக மகத்தானது எது?' என்று கேட்டார்கள். உன்னை அல்லாஹ் படைத்திருக்கும்போது, ஏதேனுமொன்றை அவனுக்கு நிகராக்கு வதாகும்' என்று நபியவர்கள் பதிலளித்தார்கள். [*ஆதாரம்: புகாரி, முஸ்லிம்*]

## துஆவில் ஷிர்க் ஏற்படுத்தல்:

பிரார்த்தனையில் ஷிர்க் வைத்தல் என்றால், உணவு கேட்பதற்கு, அல்லது நோயைக் குணப்படுத்தக் கோருவதற்கு அல்லாஹ் அல்லாத நபிமார்கள் அவுலியாக்கள் போன்றவர்களிடம் கேட்பதாகும். பின்வருமாறு அல்லாஹ் கூறுகிறான்.

وَلَا تَدْعُ مِنْ دُوْنِ اللهِ مَا لَا يَنْفَعُكَ وَ لَا يَضُرُّكَ ۚ فَاِنْ فَعَلْتَ فَاِنَّكَ اِذًا مِّنَ الظّٰلِمِيْنَ

**“உமக்கு யாதொரு நன்மையும், தீமையும் செய்யச் சக்தியற்ற அல்லாஹ் அல்லாதவற்றை (உதவி வேண்டி) நீர் அழைக்காதீர். அவ்வாறு செய்தால் அச்சமயமே அக்கிரமக்காரர் (இணைவைப்பவர்)களில் நீரும் ஒருவராகி விடுவீர்”**

**[அல்குர்ஆன்: 10:106]**

‘எவனொருவன் அல்லாஹ் அல்லாதவர்களை அவனுக்கு நிகராக ஏற்படுத்தியவனாக இருக்கும் நிலையில் மரணிக்கின்றானோ, அவன் நரகம் பிரவேசிப்பான்’ என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.

[ஆதாரம்: புகாரி]

இறந்தவர்களிடமோ, (உயிருள்ளவர்களில்) மறைவாக இருப்பவர் களிடமோ துஆக் கேட்பது ஷிர்க்காகும். பின்வரும் அல்குர்ஆன் வசனம் இதற்கு ஆதாரமாய் அமைகின்றது.

وَالَّذِيْنَ تَدْعُوْنَ مِنْ دُوْنِهٖ مَا يَمْلِكُوْنَ مِنْ قِطْمِيْرٍؕ
اِنْ تَدْعُوْهُمْ لَا يَسْمَعُوْا دُعَآءَكُمْ ۚ وَلَوْ سَمِعُوْا مَا اسْتَجَابُوْا لَـكُمْؕ
وَيَوْمَ الْقِيٰمَةِ يَكْفُرُوْنَ بِشِرْكِكُمْؕ وَلَا يُـنَـبِّـئُكَ مِثْلُ خَبِيْرٍ

**“அவனை (அல்லாஹ்வை)யன்றி எவற்றை நீங்கள் (ஆண்டவனென) அழைக்கின்றீர்களோ அவற்றுக்கு ஓர் அணுவளவும் அதிகாரமில்லை. அவற்றை நீங்கள் அழைத்தபோதிலும் உங்களுடைய அழைப்பை அவை செவியுறா; அவை செவியுற்ற போதிலும் உங்களுக்குப் பதிலளிக்கா; மறுமை நாளிலோ (இம்மையில் அவற்றை) நீங்கள் இணை வைத்ததையும் அவை நிராகரித்து விடும். யாவையும் அறிந்த (இறை)வனைப் போல் (அத்தெய்வங்கள்) எதனையுமே உங்களுக்கு அறிவிக்கா” [அல்குர்ஆன்:35:13,14]**

## அல்லாஹ்வுடைய ஸிபத்துகளில் இணைவைத்தல்:

இதில், நபிமார்கள், அவுலியாக்கள் முதலானோர் மறைவானவற்றை அறிவார்கள் என்று நம்பிக்கை கொள்வதாகும்.

وَعِنْدَهٗ مَفَاتِحُ الْغَيْبِ لَا يَعْلَمُهَآ اِلَّا هُوَؕ

**“மறைவானவற்றின் சாவிகள் அவனிட(அல்லாஹ்விட)ந்தான் இருக்கின்றன. அவற்(றிலுள் எவற்)றை அவனையன்றி வேறெவரும் அறியார்” [அல்குர்ஆன்:6:59]**

## நேசங்கொள்வதில் 'ஷிர்க்' வைத்தல்:

இது அல்லாஹ்வை நேசிப்பது போன்று அவுலியாக்களில் ஒரு வரையோ, பலரையோ நேசிப்பதாகும். இதுபற்றிக் குர்ஆன் கூறுவதாவது.

وَمِنَ النَّاسِ مَنْ يَّتَّخِذُ مِنْ دُوْنِ اللّٰهِ اَنْدَادًا يُّحِبُّوْنَهُمْ كَحُبِّ اللّٰهِؕ وَالَّذِيْنَ اٰمَنُوْٓا اَشَدُّ حُبًّا لِّلّٰهِ

**"அல்லாஹ் அல்லாதவற்றை, அவனுக்கு இணையாக எடுத்துக் கொண்டு, அல்லாஹ்வை நேசிப்பது போல அவற்றை நேசிப்போர் மனிதர்களில் பலர் இருக்கின்றனர். எனினும் மூமின்களோ, அல்லாஹ்வையே அதிகமாக நேசிப்பார்கள்" [அல்குர்ஆன்: 2:165]**

## வழிபடுவதில் 'ஷிர்க்' வைத்தல்:

அனுமதி உண்டு என்ற நம்பிக்கையுடன் அல்லாஹ்வுக்கு மாறு செய்வதில் உலமாக்களுக்கும், மஷாயிகு (தலைவர்)களுக்கும் வழிபடுதல். குர்ஆன் இதுபற்றிப் பின்வருமாறு கூறுகின்றது.

اِتَّخَذُوْٓا اَحْبَارَهُمْ وَرُهْبَانَهُمْ اَرْبَابًا مِّنْ دُوْنِ اللّٰهِ

**"இவர்கள் அல்லாஹ்வையன்றித் தங்கள் பாதிரிகளையும் சந்நியாசிகளையும் (தங்கள்) தெய்வங்களாக எடுத்துக் கொள்கின்றனர்" [அல்குர்ஆன்: 9:31]**

அல்லாஹ் ஹறாமாக்கியதை ஹலாலாக்குதல், அவன் ஹலாலாக் கியதை ஹறாமாக்குதல் ஆகியவற்றைக் கொண்டு மாறுசெய்வதில் மேலேயுள்ள வசனத்தில் கூறப்பட்டவர்களுக்கு வழிபடுவதையே 'இபாதத்' (வணக்கம்) என்று மேற்காட்டிய வசனம் கூறுவதாக விளக்கம் அளிக்கப் பட்டுள்ளது.

'அல்லாஹ்வுக்கு மாறு செய்வதில் அடியானுக்கு வழிபடக்கூடாதென நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.' **[ஆதாரம்: *அஹ்மத் (ஸஹீஹ்)*]**

## ஷிர்க்குல் ‘ஹூலூல்’ (இரண்டறக் கலப்பின் மூலம் இணை வைத்தல்):

இது, நிச்சயமாக அல்லாஹ் தனது படைப்புகளில் குடிகொண்டுள்ளான் என்று நம்பிக்கை கொள்வதாகும். (ஸிரியாவின் தலைநகர்) டமஸ்கஸில் அடக்கம் செய்யப்பட்டுள்ள இப்னு அரபியுடைய கொள்கையாக இது இருக்கின்றது. ‘அடியான் தான் இறைவன்; இறைவன்தான் அடியான்’ என்று அவர் கூறியுள்ளார்.

‘ஹுலூல்’ என்ற கொள்கைக் கொண்ட சூபிக் கவிஞன் ஒருவன் பின்வருமாறு பாடுகிறான்.

நாயும் பன்றியும் எங்களது இறைவனாகவே இருக்கின்றன. கிறிஸ்தவக் கோயிலிலுள்ள குருவும் அல்லாஹ்வாகவே இருக்கின்றனர்.

## ஷிர்க்குத் தஸர்ருப்: (தஸர்ருப் என்றால் அல்லாஹ்வுடைய பண்புகளை அவனுடைய சில அடியார்களுக்கு மாற்றுதல்)

அல்லாஹ்வுடைய சில கருமங்களை நிர்வாகம் செய்யக்கூடிய அதிகாரம் அவுலியாக்களுக்கு இருப்பதாக நம்பிக்கை கொள்வதாக இது இருக்கின்றது உதாரணத்துக்கு அப்துக் காதிர் ஜீலானிய்யி ﵀ அவர்கள் சொல்வதாக முஹ்யித்தீன் மௌலிதின் ஏழாவது ஹிகாயத்தில் பின்வருமாறு வந்துள்ளது. **(மொழிபெயர்ப்பாளர்)**

ஷைக் (அப்துல் காதிர் ஜீலானி ﵀) அவர்கள் ஒரு சபையிலுள்ளோரை நோக்கி ‘சூரியன் ஒவ்வொரு நாளும் என்னிடம் வந்து எனக்கு ஸலாம் சொல்லி, அன்றைய நாளில் உலகில் நடைபெறப் போவது என்ன என்பதை அறிவிக்காமல் உதிக்கமாட்டாது’ என்று கூறினார்.

அவுலியாக்கள் மீது வரம்பு மீறிய நம்பிக்கை கொள்வோர், அவர்களைக் ‘குதுபு’(தலைவர்)கள் என்று கூறுவார்கள். பண்டயக்கால

முஷ்ரிக்குகளிடத்தில் கேட்கப்பட்ட கேள்வியைப்பற்றிப் பின்வருமாறு அல்லாஹ் கூறுகிறான்.

وَمَنْ يُّدَبِّرُ الْاَمْرَ‌ؕ فَسَيَـقُوْلُوْنَ اللّٰهُ‌ ۚ

**“(உலகின்) சகல காரியங்களையும் திட்டமிட்டு நிர்வகிப்பவன் யார்? என்று கேட்பீராக! அதற்கு அவர்கள் அல்லாஹ்தான் என்று கூறுவார்கள்”**

**[அல்குர்ஆன்:10:31]**

(அவுலிய்யா பக்திகொண்ட இக்கால மக்கள் முற்கால முஷ்ரிக்குகளை விட மட்டரகமான நம்பிக்கையுடன் இருக்கின்றனர்)

## பயப்படுவதில் ஷிர்க் வைத்தல்:

இந்த நம்பிக்கை, மரணித்த அவுலியாக்களில் சிலருக்கு அல்லது (தூரமான இடத்தில் உயிருடனுள்ள) மறைவிலுள்ள சிலருக்கு, சில ஆற்றல்கள் உண்டு என்றும், அவர்கள் தண்டனை வழங்குவார்கள் என்றும் நம்பி பயப்படுவதாகும். இது முற்கால முஷ்ரிக்குகளின் நம்பிக்கையாகும். இதுபற்றி அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான்.

اَلَيْسَ اللّٰهُ بِكَافٍ عَبْدَهٗ‌ ؕ وَيُخَوِّفُوْنَكَ بِالَّذِيْنَ مِنْ دُوْنِهٖ‌

**“தன் அடியானுக்கு (வேண்டிய உதவிகளைச் செய்ய) அல்லாஹ் (ஒருவனே) போதுமானவனல்லவா? (நபியே!) அவர்கள் (தங்கள் தெய்வங்களாகிய) அல்லாஹ் அல்லாதவைகளைப் பற்றி (ப் பலவற்றைக் கூறி) உம்மைப் பயமுறுத்துகின்றனர். (அதை நீர் பொருட்படுத்த வேண்டாம்)” [அல்குர்ஆன்: 39:36]**

கொடிய விலங்கினங்களுக்கும், விஷஜந்துக்களுக்கும், உயிருடனி ருக்கும் கொடுமைக்கார மனிதனுக்கும், இதுபோன்ற வேறு ஏதாவது ஒன்றுக்கும் பயப்படுவது ஷிர்க்காக மாட்டாது.

## ஆட்சியில் ஷிர்க் வைத்தல்:

இதுதான் இஸ்லாத்திற்கு எதிரான சட்டங்களை வெளியாக்கி, அவற்றை ஆகுமாக்குதல் என்பதாகும். அல்லது இஸ்லாத்தின் சட்டத்தைப் பொருத்தமற்றது என்று(ம் காலத்துக்கு ஒவ்வாதது என்றும்) கருதுவதாகும்.

## ஷிர்க்குல் 'அக்பர்' (பெரிய இணைவைத்தல்):

இது நன்மைகளை அழித்து விடக் கூடியது. அல்லாஹ் இதுபற்றி பின்வருமாறு கூறுகின்றான்.

اِنَّ اللّٰهَ لَا يَغْفِرُ اَنْ يُّشْرَكَ بِهٖ وَيَغْفِرُ مَا دُوْنَ ذٰ لِكَ لِمَنْ يَّشَآءُ‌ ؕ وَمَنْ يُّشْرِكْ بِاللّٰهِ فَقَدْ ضَلَّ ضَلٰلًاۢ بَعِيْدًا

**"நிச்சயமாக அல்லாஹ் தனக்கு இணைவைப்பதை மன்னிக்கவே மாட்டான். இதல்லாத (குற்றத்)தைத் தான் விரும்பியவர்களுக்கே மன்னிப்பான். ஆகவே எவரேனும் அல்லாஹ்வுக்கு இணைவைத்தால் அவன் வெகு தூரமான வழிகேட்டில் தான் இருக்கின்றான்" [அல்குர்ஆன்: 4:116]**

ஷிர்க்கில் பல வகைகள் உண்டு. பெரிய ஷிர்க்கு, சிரிய ஷிர்க்கு ஆகியன அவற்றில் உள்ளதாகும். அவற்றைத் தவிர்ப்பது நம்மில் ஒவ்வொருவர் மீதும் கடமையாகும். நாம் எப்பொழுதும் மொழிந்துவரப் பின்வருமாறு நபி ﷺ அவர்கள் கற்றுத் தந்துள்ளார்கள்.

'அல்லாஹ்வே! நாங்கள் அறிந்தவர்களாக உனக்கு எதனையும் இணையாக்குவதிலிருந்து உன்னிடத்தில் பாதுகாவல் தேடுகிறோம். நாங்கள் அறியாதவற்றுக்கும் உன்னிடம் பிழைபொறுக்கத் தேடுகிறோம்.'

[ஆதாரம்: *அஹ்மத் (ஹஸன்)*]



# அல்லாஹ் அல்லாதவனை அழைப்பவனுக்கு உதாரணம்

அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான்:

يَـاَيُّهَا النَّاسُ ضُرِبَ مَثَلٌ فَاسْتَمِعُوْا لَهٗ‌ؕ اِنَّ الَّذِيْنَ تَدْعُوْنَ مِنْ دُوْنِ اللّٰهِ لَنْ يَّخْلُقُوْا ذُبَابًا وَّلَوِ اجْتَمَعُوْا لَهٗ‌ؕ وَاِنْ يَّسْلُبْهُمُ الذُّبَابُ شَيْـــًٔا لَّا يَسْتَـنْـقِذُوْهُ مِنْهُ‌ؕ ضَعُفَ الطَّالِبُ وَالْمَطْلُوْبُ

“மனிதர்களே! உங்களுக்கு ஓர் உதாரணம் கூறப்படுகின்றது. அதனைச் செவிதாழ்த்திக் கேளுங்கள்; அல்லாஹ் அல்லாத எவற்றை நீங்கள் (தெய்வங்களென) அழைக்கின்றீர்களோ, அவையாவும் ஒன்று சேர்ந்(து முயற்சித்)த போதிலும், ஓர் ஈயைக் கூட சிருஷ்டிக்க முடியாது. (ஈயை சிருஷ்டிப்பதென்ன?) ஓர் ஈ அவர்களுடைய யாதொரு பொருளை எடுத்துக் கொண்ட போதிலும் அதனிடமிருந்து அதனை விடுவிக்கவும் அவற்றால் முடியாது. (ஏனென்றால், அவற்றைத் தெய்வங்களென) அழைப்போரும், அவர்களால் தெய்வங்களென அழைக்கப் படுபவர்களும் பலஹீனமானவர்களே!” [அல்குர்ஆன்: 22:73]

கஷ்டத்திலும் துன்பத்திலும் உங்களுக்கு உதவ வேண்டும் என நீங்கள் அழைக்கும் அவுலியாக்கள் அதனைச் செய்ய சக்தியற்றவர்கள் என்பதை ஓர் உதாரணத்தின் மூலம் எல்லா மனிதர்களும் கேட்கக் கூடியவாறு அல்லாஹ் கூறியுள்ளான். அவுலியாக்களான அவர்களோ, அல்லாஹ்வுடைய படைப்புகளிலிருந்து ஓர் ஈயைத் தானும் படைக்கச் சக்தியற்றவர்கள்.

மரணித்து அடக்கம் செய்யப்படிருக்கும் அவர்களுக்கு முன்னால் வைக்கப்பட்டிருக்கும் உணவிலிருந்தோ, அல்லது பானத்திலிருந்தோ ஏதேனுமொன்றை அந்த 'ஈ' அபகரித்துக் கொண்டால் அதனை மீட்டு எடுக்கவும் அவர்களால் முடியாது. இவர்களுடைய பலஹீனத்துக்கு இதுவே ஓர் அத்தாட்சியாகும்.

ஈயோ பலஹீனமான ஒன்று. இதனுடைய சக்தியை விட மரணித்த அவர்கள் பலஹீனமானவர்கள். நீங்கள் எவ்வாறுதான் அவர்களை உதவிக்கு அழைப்பீர்கள்?

அல்லாஹ் அல்லாத நபிமார்களையும், அவுலியாக்களையும் உதவிக்கு அழைக்கின்றவர்களுக்கு எதிரான மிகக் கடுமையான ஒரு மறுப்பாகவே இந்த உதாரணம் அமைந்துள்ளது.

அல்லாஹ் அல்லாதவர்களை உதவிக்கு அழைப்பவர்களுக்கு மற்றுமொரு உதாரணத்தை அல்லாஹ் கூறுகிறான்.

لَهٗ دَعْوَةُ الْحَـقِّ‌ؕ وَالَّذِيْنَ يَدْعُوْنَ مِنْ دُوْنِهٖ لَا يَسْتَجِيْبُوْنَ لَهُمْ بِشَىْءٍ اِلَّا كَبَاسِطِ كَفَّيْهِ اِلَى الْمَآءِ لِيَبْلُغَ فَاهُ وَمَا هُوَ بِبَالِـغِهٖ‌ ؕ وَمَا دُعَآءُ الْـكٰفِرِيْنَ اِلَّا فِىْ ضَلٰلٍ

"(நாம் பிரார்த்தனை செய்து) அழைக்கத் தகுதியுடையோன் அவனே. (அல்லாஹ்தான்) எவர்கள் அவனையன்றி (மற்றைய பொய்யான தெய்வங்களைப் பிரார்த்தை செய்து) அழைக்கின்றார்களோ அவர்களுக்கு, அவை யாதொரு விடையும் அளிக்கா. (அல்லாஹ்வையன்றி மற்றவற்றை அழைப்போரின் உதாரணம்;) தண்ணீர் (தானாகவே) தன்வாயில் சென்றுவிட வேண்டுமென்று கருதி தன் இரு கைகளையும் (நீட்டி அள்ளிக் குடிக்காமல்) விரித்துக் கொண்டே இருப்பவனைப் போல் இருக்கிறது. (அதனை அவன் தன் கையைக்கொண்டு அள்ளிக் குடிக்கும் வரையில் அவனுடைய) வாயை அது அடைந்து விடாது. (பொய்யான தெய்வங்களிடம்) நிராகரிப்போர் செய்யும் பிரார்த்தனை (இத்தகைய) வழிகேடாகவே இருக்கிறது" [அல்குர்ஆன்: 13:14]

'துஆ' என்றால் அது 'இபாதத்' (வணக்கம்) என்றும், அது அல்லாஹ்வுக்கு மட்டுமே சொந்தமானது என்றும் இந்த (13: 14) வசனம் தெளிவுபடுத்துகிறது. (இணைவைக்கின்ற) இவர்கள் தான், அல்லாஹ் அல்லாதவர்களை அழைக்கின்றனர். அவர்களால் இவர்கள் எந்தப் பயனையும் அடையப் போவதில்லை. எதனைக் கொண்டும் இவர்களுக்கு அவர்கள் பதிலளிக்க மாட்டார்கள். இதிலே அவர்களுக்கு உதாரணமாவது, கிணற்று ஓரத்தில் நின்று கொண்டு கையை நீட்டாமலேயே அதிலிருந்து கையினால் தண்ணீரைக் குடிக்க முயற்சிப்பது போன்றதாகும். இதற்கு ஒருகாலும் அவன் சக்திபெற மாட்டான் என்று ஓர் உதாரணத்தின் மூலம் அல்லாஹ் விளக்குகிறான்.

முஜாஹித் ﷺ அவர்கள் கூறுவதை இப்னு கதீர் ﷺ அவர்கள் பின்வருமாறு பதிந்து வைத்துள்ளார்கள். 'அவன் தண்ணீரை நோக்கி தன்பால் வருமாறு அழைத்துச் சாடைகாட்டுபவனைப் போன்றவனாவான். அது அவனிடம் வரவே மாட்டாது'.

பின்பு அல்லாஹ், தன்னல்லாதவர்களை உதவிக்கு அழைப்பவர்கள் மீது குஃப்ரை (இறைநிராகரிப்பை)க் கொண்டு தீர்ப்பளித்துள்ளான். 'நிராகரிப்போர் செய்யும் பிரார்த்தனை வழிகேடாகவே இருக்கின்றது' என்று அல்லாஹ் கூறுவதற்கமைவாக அவர்கள் வழிகேட்டிலேயே இருக்கின்றனர்.

முஸ்லிம் சகோதரனே! அல்லாஹ் அல்லாதவர்களை அழைப்பதி லிருந்து நீ விலகிக் கொள்வாயாக! அவ்வாறு அழைத்தால் நீ நிராகரித்து வழிகேட்டிலாகி விடுவாய். ஏகத்துவக் கொள்கையுள்ள மூமினாக நீ ஆகுவதற்காக, யாவற்றின் மீதும் சக்தியுள்ளவனான அல்லாஹ்வை மட்டுமே பிரார்த்தனை செய்து அழைப்பாயாக!



# நாம் அல்லஹ்வுக்கு இணைவைப்பதிலிருந்து நீங்குவது எப்படி?

நாம், ஷிர்க்கில் மூன்று வகைகளைத் தவிர்ப்பதைக் கொண்டல்லாமல், அல்லாஹ்வுக்கு இணைவைப்பதிலிருந்து நீங்கியவர்களாக ஆகமாட்டோம்.

## இரட்சகனு(அல்லாஹ்வு)டைய செயல்களில் இணைவைத்தல்:

படைக்கக் கூடியதாகவோ, நிர்வகிக்கக் கூடியதாகவோ அல்லாஹ் வுடன் வேறெவரும் இருப்பதாக நம்புதல். இந்த நம்பிக்கை, அல்லாஹ் உலக நிர்வாகங்களில் சிலவற்றை சில அவுலியாக்களிடம் ஒப்படைத் துள்ளதாக, சில சூபிய்யாக்கள் நம்புவது போன்றாகும். இந்த நம்பிக்கை இஸ்லாத்துக்கு முன்னிருந்த முஷ்ரிக்குகளிடம் கூட இருந்ததில்லை.

'நிச்சயமாக அல்லாஹ்வுக்கு சில அடியார்கள் இருக்கின்றனர். அவர்கள் ஏதாவதொன்றை நோக்கி 'ஆகு' என்று சொன்னால், அது ஆகி விடும்' என்று ஒரு சூபி சொல்லுகிறார். அல்காபி பி-ர்ரத்தி அலல்-வஹ்ஹாபி என்ற பெயருடன் அந்த சூபி இயற்றிய நூலொன்றில் இதனைக் கூறுகிறார். இவருடைய கூற்றை குர்ஆன் பொய்யாக்குகின்றது.

اِنَّمَآ اَمْرُهٗۤ اِذَاۤ اَرَادَ شَيْـــًٔـــا اَنْ يَّقُوْلَ لَهٗ كُنْ فَيَكُوْنُ

**“என்னே! அவனது (அல்லாஹ்வினது) ஆற்றல்! அவன் யாதொரு பொருளை(ப் படைக்க)க் கருதினால், அவன் கட்டளையிடுவதெல்லாம் ‘ஆகுக’ எனக் கூறுவதுதான் (தாமதம்) உடனே அது ஆகிவிடும்” [அல்குர்ஆன்: 36:82]**

اَلَا لَـهُ الْخَـلْقُ وَالْاَمْرُ

“படைத்தலும், (அதன்) ஆட்சியும் அவனுக்குடையதல்லவா?”
[அல்குர்ஆன்: 7:54]

## வணக்கத்(இபாதத்)திலும் துஆவிலும் இணைவைத்தல்:

இது, அல்லாஹ் அல்லாத நபிமார்கள், நல்லடியார்கள் போன்றோருக்கு வழிபட்டு, அவர்களிடம் துஆக் கேட்பதாகும். இந்த வணக்கம் அவர்களைக் கொண்டு இரட்சிப்புத் தேடுதல், இன்பத்திலும் துன்பத்திலும் அவர்களிடம் பிரார்த்தித்தல் போன்றாகும்.

கவலைக்குரிய விஷயம் என்னவென்றால், இந்த முஸ்லிம் உம்மத் (சமுதாயத்)தில் அதிகமானவர்களுடைய பெரும்பாவங்களை, இந்த(க் குருட்டு) நம்பிக்கையை உறுதிப் படுத்தக்கூடிய சில மஷாயிகுகள் ‘வஸீலா’ என்ற பெயரைக் கொண்டு பொறுப்பேற்பதாகக் கூறுகின்றனர். ‘வஸீலா’ என்றால் அல்லாஹ்விடத்தில், ஒரு துணையைக் கொண்டு கேட்பதாகும் என்றும் கூறுகின்றனர். தம்மை அவ்வாறான துணைவர்கள் என்று நம்பச் செய்துள்ளார்கள். அப்பாவி மக்களும் அதனை நம்பியுள்ளனர்.

‘அல்-மதத்’ யாரஸூலல்லாஹ்! (உதவியளிக்கும் ரஸூலுல்லாஹ்வே!) யாமுஹ்யித்தீன்! (முஹ்யித்தீனே!) யா-பதவி! (பத(DHA)வியே!) என்றெல்லாம் அல்லாஹ் அல்லாதவர்களிடம் உதவி தேடுவதற்கு அந்த மஷாயிகுகள் கற்றுக் கொடுத்துள்ளார்கள்.

இந்த வேண்டுதல், அல்லாஹ் அல்லாதவர்களுக்கு வணக்கம் புரிவதாகும். இது ஒரு துஆ. ‘துஆ என்பது வணக்கமாகும்’ [திர்மிதி]. வணக்கத்தை அல்லாஹ் அல்லாத எவருக்கும் புரியலாகாது. அல்லாஹ் அல்லாத எவரிடமும் உதவி தேடக்கூடாது. இதுபற்றி அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான்.

وَّيُمْدِدْكُمْ بِاَمْوَالٍ وَّبَنِيْنَ

“(அல்லாஹ்) பொருள்களையும் மக்களையும் தந்து உங்களுக்கு உதவி புரிவான்” [அல்குர்ஆன்: 71:12]

தீர்ப்பளிக்கின்றவனோ, அல்லது தீர்ப்பளிக்கப்படுகின்றவனோ அல்லாஹ்வுடைய சட்டம் பொருத்தமற்றது என்று கருதுவானென்றால் அல்லது அல்லாஹ்வுடைய சட்டம் அல்லாததைக் கொண்டு தீர்ப்பளிப்பதை ஆகுமாக்கினால், இது ஆட்சியிலுள்ள வழிபாட்டில் (இபாதத்தில்) இணைவைப்பதாகும். இதுகூட ஷிர்க்கைச் சேர்ந்ததே!

## அல்லாஹ்வுடைய ஸிபத்துகளில் இணைவைத்தல்:

அல்லாஹ்வுக்கு மட்டுமே சொந்தமான மறைவானவற்றைப் பற்றிய அறிவு போன்ற சில பண்புகள், நபிமார்கள் அவுலியாக்கள் போன்றோருக்கு இருப்பதாக நம்புதல், ஸிபத்துகளில் இணைவைப்பதாகும். இந்த வகை சூபியாக்களிடமும் அவர்களைப் போன்றவர்களிடமும் இருக்கின்றன. புர்தாவை இயற்றிய ‘பூஸரி’ அவர்கள் ஒரு பாடலில் கூறுவது இந்த வகையான ஷிர்க்குக்கு ஒரு சான்றாய் அமைந்துள்ளதைக் காணலாம்.

‘நபியே! இம்மையும் அதன் சக்களத்தி (மறுமை)யும் உங்களது கொடையாகும். ‘லவ்ஹுல் மஹ்பூழ்’ அல்லாஹ்வுடைய கலம் ஆகியவை உங்களுடைய அறிவிலுள்ளதாகும்’.

கவிஞர் இந்தப்பாடலில் ‘துன்யா’ (இம்மை) என்ற சொல்லைத் தொடர்ந்து ‘ளர்ரத்’ என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளார். அந்தச் சொல்லின் சரியான அர்த்தம் ஒரு கணவன் முதலாவது மனைவி இருக்கும்போது மணக்கும் இரண்டாவது மனைவி என்பதாகும். இம்மையை முதலாவது மனைவி போலவும், மறுமையை இரண்டாவது மனைவி போலவும் கவிஞர் கற்பனை செய்து பாடியுள்ளார். எனவே இங்கு ‘ளர்ரத்’ என்ற சொல்லுக்கு மறுமை என்பதே பொருளாகும்.

அல்லாஹ்வுக்கு மட்டுமே சொந்தமான சில அதிகாரங்கள் நபியவர்களுக்கும் உண்டு என்பதாக கவிஞர் மிகைப்படுத்திக் கூறியுள்ளார். இது ஷிர்க்காகும்.

நபி ﷺ அவர்களை (அவர்களுடைய மௌத்துக்குப் பின்னால்) விளிப்பான நிலையில் கண்டதாகக் கூறுகின்ற தஜ்ஜால் (குழப்பக்காரர்) களுடைய வழிகேடும் இந்த வகையைச் சேர்ந்ததாகும்.

மறைவான பல விஷயங்களை நபியவர்களிடம் கேட்கின்றனர். இவர்களுடைய சில விவகாரங்களை நபியவர்கள் நிர்வகிக்க வேண்டுமென அவர்கள் விரும்புகின்றனர். குர்ஆன் சொல்லுகின்றவாறு நபியவர்கள் வாழ்ந்த காலத்திலேயே இப்படியானவற்றை அவர்கள் அறிந்திருக்கவில்லை.

قُلْ لَّاۤ اَمْلِكُ لِنَفْسِىْ نَـفْعًا وَّلَا ضَرًّا اِلَّا مَا شَآءَ اللّٰهُ‌ؕ وَلَوْ كُنْتُ اَعْلَمُ الْغَيْبَ لَاسْتَكْثَرْتُ مِنَ الْخَيْرِ ۛۚ وَمَا مَسَّنِىَ السُّۤوْءُ ۛۚ اِنْ اَنَا اِلَّا نَذِيْرٌ وَّبَشِيْرٌ لِّقَوْمٍ يُّؤْمِنُوْنَ

**“(நபியே!) நீர் கூறும்: அல்லாஹ் நாடினாலன்றி நான் எனக்கு யாதொரு நன்மையோ தீமையோ செய்து கொள்ள எனக்குச் சக்தியில்லை. நான் மறைவானவற்றை அறிய முடியுமாயின் நன்மைகளையே அதிகமாகத் தேடிக் கொண்டிருப்பேன். யாதொரு தீங்குமே என்னை அணுகியிராது. நான் (பாவிகளுக்கு) அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவனும் மூமின்களுக்கு நன்மாராயங் கூறுபவனுமேயன்றி வேறில்லை” [அல்குர்ஆன்: 7:188]**

இவ்வுலகில் உயிருடனிருக்கும்போதே மறைவானவற்றை அறிய முடியாதவர்களாக நபியவர்கள் இருந்தார்களென்றால், மரணத்துக்குப் பின் அவற்றை எவ்வாறு அறியமுடியும்?

ஓர் அடிமைப்பெண் ‘எங்களிடத்தில் ஒரு நபி இருக்கிறார். நாளை என்ன நடைபெறும் என்பதையும் அவர் அறிவார்’ என்று ஒரு பாடலைப் படித்தாள். இதனைச் செவியுற்ற நபியவர்கள் இவ்வாறு படிப்பதைத் தடை செய்தார்கள்’ [*ஆதாரம்: புகாரி*]

அல்லாஹ் சிலவேளை நபிமார்கள் ரஸூல்மார்களுக்கு மறைவான சிலவற்றை அறிவித்துக்கொடுப்பான். அவனால் அறிவித்துக் கொடுக்கப் பட்டதன்றி வேறெதுவும் அவர்களுக்குத் தெரியாது. இதுபற்றி அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான்.

عٰلِمُ الْغَيْبِ فَلَا يُظْهِرُ عَلٰى غَيْبِهٖۤ اَحَدًا ۙ

اِلَّا مَنِ ارْتَضٰى مِنْ رَّسُوْلٍ فَاِنَّهٗ يَسْلُكُ مِنْۢ بَيْنِ يَدَيْهِ وَمِنْ خَلْفِهٖ رَصَدًا ۙ

**“(அல்லாஹ்வாகிய) அவன்தான் இரகசியங்களை நன்கறிந்தவன். அவனுடைய இரகசியங்களை, அவன் ஒருவருக்கும் வெளிப்படுத்துவது மில்லை; ஆனால் (தன்னுடைய) தெரிந்தெடுத்த தூதருக்குத் தவிர. (அதனை அவன் அவருக்கு அறிவிக்கக் கூடும். அவன் அறிவிக்கும் சமயத்தில்) நிச்சயமாக அவன் அவருக்கு முன்னும் பின்னும் (ஒரு மலக்கைப்) பாதுகாவலராக அனுப்பி வைக்கிறான்”**

**[அல்குர்ஆன்: 72:26,27]**



# தௌஹீதுவாதி யார்?

எவனொருவன் மேலே கூறப்பட்ட மூன்று வகையான ஷிர்க்குகளை விட்டு நீங்கி, அல்லாஹ்வை, வணக்கத்திலும் துஆவிலும், அவனுடைய ஸிபத்துகளிலும் ஒருமை (தனிமை)ப்படுத்துகிறானோ, அவன்தான் ஏகத்துவவாதிக்குரிய எல்லாவித சிறப்புகளையும் அடைந்தவனாவான். ஷிர்க்கான அவற்றில் ஒன்றையேனும் அவனும் நம்புவானென்றால் அவன் ஏகத்துவவாதியாக மாட்டான். பின்வரும் அல்குர்ஆன் வசனம் அதுபற்றிக் கூறுகின்றது.

وَلَوْ اَشْرَكُوْا لَحَبِطَ عَنْهُمْ مَّا كَانُوْا يَعْمَلُوْنَ

**"அவர்கள் இணைவைத்தாலோ, அவர்கள் செய்து கொண்டிருந்த(நன்மையான) காரியங்கள்யாவும் அவர்களை விட்டு அழிந்து விடும்" [அல்குர்ஆன்: 6:88]**

ஷிர்க்கு வைத்தவன் தௌபாச்செய்து அல்லாஹ்வுடன் இணையாக்கப் பட்டதை விட்டு முற்றாக விலகி விடுவானென்றால் அவன் ஏகத்துவ வாதியாகி விடுகிறான். அல்லாஹ்வே! எங்களை ஏகத்துவ வாதிகளாக ஆக்கிவிடுவாயாக! ஷிர்க்கு வைப்பவர்களாக ஆக்கிவிடாதே!



# சிறிய ஷிர்க்கும் அதன் வகைகளும்

இஸ்லாம் அனுமதிக்காத வஸீலாக்கள் அனைத்தும் பெரிய ஷிர்க்கில் கொண்டுபோய்ச் சேர்க்கும். இது இபாத(வணக்க)த்தின் அந்தஸ்தை அடையாது. இதனைச் செய்தவனை அது இஸ்லாத்திலிருந்து வெளியேற்றி விடாது. எனினும் இது பெரும்பாவங்களில் அடங்கும்.

இலேசான முகஸ்துதிஃ (நன்மையானவற்றைப்) படைப்புகளுக்காகச் செய்தல், அல்லாஹ்வுக்காக வணக்கத்தைப் புரிந்து அவனுக்காகவே தொழுகின்ற ஒரு முஸ்லிம் தனது வணக்கங்களையும், தொழுகையையும் மனிதர்கள் புகழ வேண்டும் என்பதற்காகச் செய்தல் போன்றவை சிறிய ஷிர்க்கில் அடங்கும். இதுபற்றி பின்வருமாறு அல்லாஹ் கூறுகிறான்.

فَمَنْ كَانَ يَرْجُوْا لِقَآءَ رَبِّهٖ فَلْيَـعْمَلْ عَمَلًا صَالِحًـا وَّلَايُشْرِكْ بِعِبَادَةِ رَبِّهٖۤ اَحَدًا

**“எவன் தன் இறைவனைச்சந்திக்க விரும்புகிறானோ, அவன் நற்கருமங்களைச் செய்து, தன் இறைவனுக்கு ஒருவரையும் இணையாக்காது (அவனையே) வணங்கி வருவானாக!” [அல்குர்ஆன்: 18:110]**

நபி ﷺ அவர்கள் சிறிய ஷிர்க்கைப் பற்றிப் பின்வருமாறு கூறுகின்றார்கள்.

‘உங்களிடத்தில் நான் அதிகமாகப் பயப்படுவதெல்லாம் சிறிய ஷிர்க்காகும். அதுதான் ‘ரியா’ (முகஸ்துதி) மறுமைநாளில் அல்லாஹ், மனிதர்களிடத்தில் கூலியை எதிர்பார்க்கின்றவர்களை நோக்கி, ‘எவர்கள் பார்க்க வேண்டும் என்பதற்காக உலகில் அமல்கள் செய்தீர்களோ, அவர்களிடமே இப்பொழுது கூலியை வாங்கிக் கொள்ளுங்கள்’ என்று கூறுவான்’. [*ஆதாரம்: அஹ்மத் (ஸஹீஹ்)*]

## அல்லாஹ் அல்லாதவர்களைக் கொண்டு சத்தியம் செய்தல்:

'எவன் அல்லாஹ் அல்லாதவனைக்கொண்டு சத்தியம் செய்கிறானோ, அவன் அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்பவனாவான் என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.' **[*ஆதாரம்: அஹ்மத்(ஸஹீஹ்)*]**

அல்லாஹ் அல்லாதவனைக் கொண்டு சத்தியம் செய்தல் சிலவேளை பெரிய ஷிர்க்காகிவிடும். உதாரணமாக, 'வலி'க்கு சில ஆற்றல்கள் உண்டு; அவரைக் கொண்டு பொய்ச்சத்தியம் செய்தால் சத்தியம் செய்கின்றவனுக்கு தீங்கு ஏற்படும் என்று சத்தியம் செய்யும் ஒருவன் நம்புவானென்றால் இது பெரிய ஷிர்க்காகும்.

## மறைவான ஷிர்க்கு:

உதாரணத்துக்கு, அல்லாஹ்வும் இன்ன மனிதனும் நாடினால் என்று சொல்லுவது போன்று. (இவ்வாறு சொல்லுவது தடை செய்யப்பட்டுள்ளது) அல்லாஹ் இல்லையென்றால், பின்பு இன்னவர் இல்லையென்றால் என்று சொல்வது அனுமதிக்கத்தக்கது.

'அல்லாஹ்வும் இன்னமனிதனும் நாடினால் என்று நீங்கள் கூறாதீர்கள். அல்லாஹ்வும் பின்பு இன்னமனிதனும் நாடினால் என்று சொல்லுங்கள் என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள்'. **[*ஆதாரம்: அஹ்மத் (ஸஹீஹ்)*]**



# ஷிர்க் தோன்றக்கூடிய இடங்களில் சில..

இஸ்லாமிய உலகில் பரவியிருக்கும் ஷிர்க்குகள் வெளியாகக்கூடிய இடங்கள் முஸ்லிம்களுக்கு ஏற்பட்டிருக்கும் துன்பங்களில் மாபெரும் துன்பமாகும். முஸ்லிம்களிடத்தில் தௌஹீதை முன்வைக்கின்றவர்கள் சந்திக்கும் சோதனைகள் கஷ்டங்கள் முதலானவைகளும். இதல்லாத இன்னும் பல நோவினைகளும் இதன் காரணமாகத்தான். முஸ்லிம் களிடத்தில் நம்பிக்கையிலும் நடத்தையிலும் ஷிர்க் வெளியாகின்றது.

அதிகமான முஸ்லிம் நாடுகளில் உள்ள ஷிர்க் நடைபெறக்கூடிய இடங்கள் இதற்குச் சான்றாய் அமைந்துள்ளதைக் காணலாம். இதனை அதிகமான முஸ்லிம்கள் இஸ்லாம் என்றே கருதுகிறார்கள். இதனால்தான் 'இஸ்லாம் ஷிர்க்கை ஒழிப்பதற்காகவே வந்துள்ளது' என்பதை அறிந்திருந்தும், அந்த ஷிர்க்குகளை அவர்கள் மறுக்கிறார்களில்லை. அவர்கள் இஸ்லாம் என்று கருதிக்கொண்டிருப்பவற்றில் சில பின்வருமாறு:-

## அல்லாஹ் அல்லாதவர்களிடம் துஆக் கேட்டல்:

மௌலிது வைபவங்களில் படிக்கக்கூடிய கவிகள், பாட்டுக்கள் போன்றவற்றில் இது அமைந்துள்ளதைக் காணலாம். மக்கள் படிக்கின்ற பாடல்களைப் பின்வருமாறு செவிதாழ்த்தியுள்ளேன்.

'ரஸூல் மார்களுக்குத் தலைவரே! என்னைத் தாங்கிக் கொள்பவரே!

நீங்கள் தான் அல்லாஹ்வுடைய வாசலும் நான் நம்பிக்கை வைக்கத் தகுதியுள்ளவரும் ஆவீர்கள்.

ரஸூலுல்லாஹ்வே! இம்மையிலும் மறுமையிலும் என்னைக் கை தாங்குங்கள்.

சமூகமளிப்பவர்களில் தலைவரே! எனது துன்பத்தை உங்களைத் தவிர வேறெவரும் மாற்றமாட்டார்.

இவ்வாறான ஒன்றை (நபியவர்களால் தனது மௌத்துக்குப் பின்னால் செவிதாழ்த்த முடியாது, அவ்வாறு) நபியவர்கள் செவிதாழ்த் தினாலும் இதனைவிட்டு நீங்கியே இருப்பார்கள். ஏனென்றால் அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறெவரும் கஷ்டத்தை, இலகுவானதாக மாற்ற முடியாது.

இதுபோலவே பத்திரிக்கைகளிலும் சஞ்சிகைகளிலும் புத்தகங்களிலும் இப்படியான பாடல்கள் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். அவற்றிலே (மௌத்துக்குப்பின் மறுமை ஏற்படுவதற்கிடையில்) எந்தவித உதவியும் செய்யச் சக்தியற்ற ரஸூல்மார்கள், நபிமார்கள், அவுலியாக்கள், ஸாலிஹீன்கள் போன்றோரிடம் உதவி கேட்பதாகவும் அமைந்துள்ளது.

## பள்ளிவாசல்களில் அவுலியாக்கள் நல்லடியார்கள் ஆகியோர் களை அடக்கம் செய்தல்:

முஸ்லிம்கள் வாழுகின்ற அதிகமான பகுதிகளிலுள்ள சில பள்ளிவாசல்களினுள் கப்றுகள் இருப்பதைக் காணலாம். அவற்றின் மீது கட்டிடங்கள் கட்டி, குப்பாக்கள் (கோபுரங்கள்) கட்டப்பட்டுள்ளன. அவற்றில் அடக்கம் செய்யப்பட்டிருப்போரிடம், சிலர் தமது தேவைகளைக் கேட்கின்றனர். நபி ﷺ அவர்கள் இதனைப் பின்வருமாறு கூறித் தடை செய்துள்ளார்கள்.

'அல்லாஹ் யூதர்களையும், கிறிஸ்தவர்களையும் சபிப்பானாக! அவர்கள் தமது நபிமார்களின் அடக்கஸ்தலங்களை வணக்கஸ்தலங்களாக எடுத்துக் கொண்டனர்.' **[*ஆதாரம்: புகாரி, முஸ்லிம்*]**

பள்ளிவாசல்களினுள் நபிமார்களை அடக்கஞ்செய்வதையே இஸ்லாம் அனுமதிக்கவில்லையென்றால், மஷாயிகுகள், உலமாக்கள் போன்றோர்களை அடக்கஞ்செய்வது எவ்வாறு அனுமதிக்கப்படும்? அல்லாஹ்விடம் கேட்க வேண்டியதை, அடக்கம் செய்யப்பட்டவர்களிடம் கேட்பது ஷிர்க் என்பதையும், மரணித்தவர்களைக் கொண்டு அல்லாஹ்விடம் கேட்பதை இஸ்லாம் தடை செய்கின்றது என்பதையும் மக்கள் நன்கறிந்துகொண்டே அவுலியாக்கள், ஸாலிஹீன்கள் போன்றோரைப் பள்ளிவாசல்களினுள் அடக்கம் செய்கின்றனர்.

## அவுலியாக்களுக்காக நேர்ச்சை செய்தல்:

சில மனிதர்கள் குர்பானிக்குரிய ஒரு மிருகத்தையோ அல்லது பணத்தையோ, அதல்லாத வேறு பொருட்களையோ தனக்கு விருப்பமான ஒரு குறிப்பிட்ட 'வலி' (அல்லாஹ்வுடைய நேசனு)க்காக நேர்ச்சை செய்கின்றனர். இந்த நேர்ச்சை ஷிர்க்காகும். இதனை நிறைவேற்றாம லிருப்பது கடமையாகும். ஏனென்றால் நேர்ச்சை ஓர் 'இபாதத்'. இது அல்லாஹ் ஒருவனுக்காக மட்டுமே செய்யப்பட வேண்டும். இதுபற்றிப் பின்வருமாறு அல்லாஹ் கூறுகிறான்.

يُوْفُوْنَ بِالنَّذْرِ وَيَخَافُوْنَ يَوْمًا كَانَ شَرُّهٗ مُسْتَطِيْرًا

**"(மூமின்களாகிய) அவர்கள் (தங்கள்) நேர்ச்சைகளை நிறைவேற்றி வைக்கின்றனர். நீண்ட வேதனையுடைய நாளைக்கும் பயப்படுகின்றனர்"**

**[அல்குர்ஆன்: 76:7]**

அறுக்கின்றபோது அல்லாஹ்வுக்காக என்று 'நிய்யத்' வைத்தாலும் இந்தச்செயல்பாடு இணைவைப்பவர்களின் செயல்பாட்டைத் தழுவியதாகும். அவர்கள் தங்களுடைய நேர்ச்சைகளைத் தங்களது சிலைகள் நிறுத்தப் பட்டிருக்கும் இடங்களில் வைத்தே நிறைவேற்றுவார்கள். இதற்கொப் பாகவே முஸ்லிம்கள், தங்களது அவுலியாக்கள் அடக்கம் செய்யப்

பட்டிருக்கும் இடங்களில் நிறைவேற்றுவார்கள். இதுபற்றி நபி ﷺ அவர்கள் பின்வருமாறு கூறுகிறார்கள்.

'அல்லாஹ் அல்லாதவருக்காக அறுத்துப் பலியிடுகின்றவனை அல்லாஹ் சபிக்கிறான்' **[ஆதாரம்: *முஸ்லிம்*]**

முஹ்யித்தீன் அப்துல் காதிர் அல்ஜீலானி, ரிபாஈ, பதவி (ரஹ்-ஹிம்) ஹுஸைன் رضي الله عنه போன்றோரின் கப்றுகளை 'தவாப்' செய்தல்:- இவர்களின் கப்றுகளை மக்கள் 'தவாப்' (வலம் வருதல்) செய்கின்றனர். தவாப் என்பது ஓர் 'இபாதத்'தாகும். அல்லாஹ்வுடைய கட்டளைக்கமைய கஃபத்துல்லாஹ்வைச் சூழ மட்டுமே தவாப் செய்ய வேண்டும். வேறெந்த ஒன்றையும் 'தவாப்' செய்யக்கூடாது. குர்ஆன் பின்வருமாறு கூறுகின்றது.

وَلْيَطَّوَّفُوْا بِالْبَيْتِ الْعَتِيْقِ

**"அவர்கள் புராதன ஆலயத்தை (கஃபத்துல்லாவை)த் 'தவாப்' செய்யவும்"**

**[அல்குர்ஆன்: 22:29]**

## கப்றுகளை நோக்கித் தொழுவது அனுமதிக்கப்பட்டதல்ல:

இதுபற்றி நபி ﷺ அவர்கள் பின்வருமாறு கூறுகிறார்கள்.

'கப்றின் மீது அமரவோ, அதனை நோக்கித் தொழவோ வேண்டாம்' **[ஆதாரம்: *முஸ்லிம்*]**

நபி ﷺ அவர்களுடைய பின்வரும் சொல்லுக்கமைவாக 'பரக்கத்'தை நாடிக் கப்றடிகளுக்கு யாத்திரை மேற்கொள்வதோ தடை செய்யப் பட்டுள்ளது.

'மூன்று பள்ளிவாசல்களுக்கன்றி (வேறெந்த இடத்திற்கும் நேர்ச்சை செய்து) யாத்திரை மேற்கொள்ளக் கூடாது.

**ஒன்று** : மஸ்ஜிதுல் ஹறாம் (கஃபத்துல்லாஹ்).

**இரண்டு** : எனது இந்தப் பள்ளிவாசல் (மஸ்ஜிதுந்நபவி).

**மூன்று** : மஸ்ஜிதுல் அக்ஸா

என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.' **[*ஆதாரம்: புகாரி, முஸ்லிம்*]**

நாம் மதினா செல்ல விரும்பினால், (நபியவர்கள் கட்டிய பள்ளிவாசல்) மஸ்ஜிதுந்நபவியைத் தரிசிப்பதற்காகவும், (அதன் அருகில் அடக்கம் செய்யப்பட்டுள்ள) நபி ﷺ அவர்களுக்கு ஸலாம் சொல்வதற் காகவும் செல்கிறோம் என்று சொல்லுவது சரியான சொல்லாகும்.

குர்ஆனுக்கும் ஸுன்னாவுக்கும் முரணாக ஏற்படுத்தப்பட்ட சட்டங்களைக் கொண்டு தீர்ப்பு வழங்குவது சரியானதென்று நம்பிக்கை கொண்டு, அல்லாஹ் அருளியதைக் கொண்டு தீர்ப்பு வழங்காதிருப்பது, குர்ஆனுக்கும் ஸுன்னாவுக்கும் முரண்பட்டவற்றைக் கொண்டு தீர்ப்பளிப்பது போன்றாகும்.

இதற்கு உதாரணம் சில மஷாயிகுகள் வெளியாக்கும் மார்க்கத்தீர்ப்புக் (பத்வாக்)கள் போன்றாகும். இவை, இஸ்லாத்தின் மூலகருத்துக்களுக்கு முரண்படுகின்றன. இது, எதிர்த்துப் போராடவேண்டுமென அல்லாஹ் பிரகடனப்படுத்திய பாவச்செயலான வட்டியை ஆகுமென்று கூறுவது போன்றாகும்.

## குர்ஆனுக்கும் ஸுன்னாவுக்கும் முரண்படுகின்றவாறு கட்டளை பிறப்பிக்கின்ற, அதிகாரிகள், அறிஞர்கள், உலமாக்கள், மஷாயிகுகள் போன்றோருக்கு வழிபடுதல்:

நபி ﷺ அவர்களுடைய சொல்லுக்கமைவாக, இது வழிபாட்டில் ஷிர்க்காகும்.

'படைத்தவனுக்கு மாறுசெய்யும் வகையில் படைக்கப்பட்டவனுக்கு வழிபடக்கூடாது' [*ஆதாரம்: அஹ்மத் (ஸஹீஹ்)*]

இதுபற்றி அல்லாஹ்வும் பின்வருமாறு கூறுகின்றான்.

اِتَّخَذُوْٓا اَحْبَارَهُمْ وَرُهْبَانَهُمْ اَرْبَابًا مِّنْ دُوْنِ اللّٰهِ وَالْمَسِيْحَ ابْنَ مَرْيَمَ ۚ وَمَآ اُمِرُوْٓا اِلَّا لِيَـعْبُدُوْٓا اِلٰهًا وَّاحِدًا ۚ لَاۤ اِلٰهَ اِلَّا هُوَ ؕ سُبْحٰنَهٗ عَمَّا يُشْرِكُوْنَ

**“அவர்கள் அல்லாஹ்வையன்றித் தங்கள் பாதிரிகளையும் சந்நியாசிகளையும், மர்யமுடைய மகன் மஸீஹை (ஈஸாவை)யும் (தங்கள்) தெய்வங்களாக எடுத்துக் கொண்டிருக்கின்றனர். எனினும் ஒரே ஆண்டவனைத் தவிர மற்றெவரையும் வணங்கக் கூடாதென்றே, அவர்கள் (யாவரும்) ஏவப்பட்டிருக்கின்றனர். அல்லாஹ்வை யன்றி வேறெந்த நாயனுமில்லை. அவர்கள் இணைவைக்கும் இவைகளை விட்டு அவன் மிகவும் பரிசுத்தமானவன்” [அல்குர்ஆன்: 9:31]**

இவ்வசனத்துக்கு ஹுதைபா ﵁ அவர்கள் பின்வருமாறு விளக்க மளித்துள்ளார்கள். ‘யூதர்களிலுள்ள அறிஞர்கள் ஹலாலாக் கியதையும், அவர்கள் ஹறாமாக்கியதையும் சரியென ஏற்றுக்கொண்டு, அவர்களுக்கு வழிபடுவது கொண்டு ‘இபாதத்’ செய்வதே மேற்படி வசனத்தின் கருத்தாகும்.



# தரிசனம் செய்யப்படும் இடங்கள்

ஸிரியா, இராக், எகிப்து, இந்தியா, பாகிஸ்தான் போன்ற நாடுகளிலும், இவையல்லாத இன்னும் பல நாடுகளிலும் நாம் காணுகின்ற, கட்டப்பட்ட கப்றுகளில் நடைபெறும் நிகழ்ச்சிகள் எதனையும் இஸ்லாம் அனுமதிக்கவில்லை. கப்றின் மீது கட்டிடம் கட்டுவதை நபி ﷺ அவர்கள் தடை செய்துள்ளது பின்வருமாறு அமைந்துள்ளது.

'கப்றின் மீது சாந்து சுண்ணாம்பு பூசுவதையும், அதன் மீது அமர்வதையும், அதன் மீது கட்டிடம் கட்டுவதையும் நபி ﷺ அவர்கள் தடை செய்துள்ளார்கள்' **[ஆதாரம்: *முஸ்லிம்*]**

மேற்காட்டிய ஹதீஸில் வந்த **'தஜ்ஸீஸ்'** என்ற அரபு வார்த்தைக்கு சாந்து அல்லது சுண்ணாம்புகளின் கொழுப்புக்களைப் பூசுதல் என்று பொருள்படும். இமாம் திர்மிதி ﵀ அவர்களின் ரிவாயத் ஒன்றில் **'கப்றின் மீது எழுதப்படுவதையும் நபியவர்கள் தடை செய்துள் ளார்கள்'** என்று பதியப்பட்டுள்ளது. எழுதப்படுவது என்றால் அல்குர்ஆன் வசனம், ஹதீஸ் வாக்கியம், பாடல்கள், கப்றில் அடங்கியவரின் பெயர் போன்றவைகளாகும்.

ஸியாரத் செய்யக்கூடிய அதிகமான கட்டப்பட்ட கப்றுகள் முறையற்றனவாகவே இருந்து கொண்டிருக்கின்றன. ஹுஸைன் ؓ அவர்கள் இறாக்கில் ஷஹீதாகி அங்குதான் அடக்கம் செய்யப்பட்டார்கள். அவர்கள் மிஸ்ரு(எகிப்து)க்குச் செல்லவில்லை. அவர்களுடைய அடக்கஸ்தலம் மிஸ்ரில் இருப்பதாகச் சொல்லப்படுவது சரியானதன்று.

இவர்களுடைய பிழையான செயலுக்குரிய மற்றுமொரு சான்று யாதெனில் ஹுஸைன் ﵁ அவர்களின் அடக்கஸ்தலம் இறாக், எகிப்து, ஸிரியா ஆகிய மூன்று நாடுகளிலும் இருப்பதாக மக்கள் கருதுகின்றனர்.

இலங்கை, இந்தியா ஆகிய நாடுகளில் ஷைகு அலாவுத்தீன் என்பவர் பதினான்கு இடங்களில் அடங்கியிருப்பதாக சில மக்கள் கருதுகின்றனர். இவ்வாறே ஷைகு தாவுது வலியுல்லாஹ்வும் எண்ணி லடங்காத இடங்களில் அடங்கியிருப்பதாகவும் ஒவ்வொரு இடத்திலும் அவர் கராமத்துக் (அற்புதம்) காட்டுகிறார் என்றும் கூறுகின்றனர்.

(மொழிபெயர்ப்பாளர்)

ஹுஸைன்﵁ அவர்களுடைய கப்றைப்பற்றி மக்கள் கொண்டிருக்கும் தவறான நம்பிக்கைக்கு எதிரான மற்றுமொரு சான்று 'ஸஹாபாக்கள் மரணித்தால் நபி ﷺ அவர்களின் பின்வரும் சொல்லுக் கமைவாக பள்ளிவாசலினுள் அடக்கம் செய்யப்பட மாட்டார்கள்' என்பதாகும்.

'அல்லாஹ் யூதர்களையும், கிறிஸ்தவர்களையும் சபிப்பானாக! அவர்கள் தங்களுடைய நபிமார்களின் அடக்கஸ்தலங்களை வணக்கஸ் தலங்களாக ஆக்கிக் கொண்டார்கள்' **[*ஆதாரம்: புகாரி*]**

இவ்வாதாரத்தைக் கொண்டு ஸஹாபாக்களுடைய காலத்தில் மரணித்த எந்த ஸஹாபியும் பள்ளிவாசலினுள் அடக்கம் செய்யப்பட்டிருக்க முடியாது. இதனுடைய விளக்கம் என்னவெனில், அக்காலத்தில் இருந்த பள்ளி வாசல்கள் அனைத்தும் ஷிர்க் இல்லாத வழிபாட்டுத் தலங்களாக இருந்தன. அந்த ஸஹாபாக்கள் பின்வரும் மறைவசனத்தைக் கற்று அதன்படி செயல்படுகின்றவர்களாக இருந்தனர்.

وَّاَنَّ الْمَسٰجِدَ لِلّٰهِ فَلَا تَدْعُوْا مَعَ اللّٰهِ اَحَدًا ۙ

**“நிச்சயமாக மஸ்ஜிதுகளெல்லாம் அல்லாஹ்வி(ன் வணக்கத்தி)ற்காகவே உள்ளன. ஆகவே (அவற்றில்) அல்லாஹ்வுடன் மற்றெவரையும் (வணங்க, பெயர் கூறி) அழைக்காதீர்கள்” [அல்குர்ஆன்: 72:18]**

நபி ﷺ அவர்கள் தான் கட்டிய பள்ளிவாசலில் அடக்கம் செய்யப்படவில்லை; அவர்களது வீட்டிலேயே அடக்கம் செய்யப் பட்டுள்ளார்கள். இது நம்மிடையே உள்ள மிக உறுதியானதோர் ஆதாரமாகும். உமையாக்கள் தமது ஆட்சிக்காலத்தில் மஸ்ஜிதுந்நபவியை விசாலப்படுத்திய போது, அவர்கள் தான் நபியவர்களின் கப்றைப் பள்ளிவாசலினுள் உட்படுத்தினார்கள். அவர்கள் இவ்வாறு செய்யாதிருந் திருக்கலாம்.

இப்பொழுது ஹுஸைன் ؓ அவர்களின் கப்று பள்ளிவாசலினுள் இருக்கின்றது. (பிற்காலத்தவர்கள் கப்றைப் பள்ளிவாசலாக மாற்றி இருக்கலாம்.) சிலர் அதனைத் ‘தவாப்’ செய்கின்றனர். நோயைக் குணப்படுத்தல், கஷ்டங்களை நீக்குதல் போன்ற அல்லாஹ்விடம் மட்டுமே கேட்கத் தகுதியான சில தேவைகளை ஹுஸைன் ؓ அவர்களிடம் கேட்கின்றனர். நமது மார்க்கமோ, இவற்றை அல்லாஹ்விடம் மட்டுமே கேட்குமாறும், கஃபத்துல்லாவைத் தவிர வேறெதனையும் வலம் வரக் (தவாப் செய்யக்) கூடாதென்றும் நமக்குக் கட்டளை இடுகின்றது. தவாப் பற்றி அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான்.

وَلْيَطَّوَّفُوْا بِالْبَيْتِ الْعَتِيْقِ

**“அவர்கள் புராதன ஆலயத்தை (கஃபாவை)த் ‘தவாப்’ செய்யவும்” [அல்குர்ஆன்: 22:29]**

அலி ؓ அவர்களின் மகள் ஜைனபு ؓ அவர்களின் ‘கப்று’ மிஸ்ரிலும், டமாஸ்கஸ்ஸிலும் இருப்பதாகச் சொல்லுவது சரியானதன்று. அவர்கள் மிஸ்ரில் மரணிக்கவுமில்லை; ஸிரியாவில் மரணிக்கவுமில்லை.

அவ்விரு இடங்களில் அவர்கள் பெயரில் கப்றுகள் இருப்பதே, அதனை நம்புகின்ற மக்களுடைய கொள்கை பிழையானது என்பதற்கு ஆதாரமாகும்.

உண்மையாகவே கப்றில் ஒருவர் அடக்கம் செய்யப்பட்டிருந்தாலும், கப்றுகளின் மீது கட்டிடம் கட்டி, அவற்றைப் பள்ளிவாசலினுள் அமைப்பதை இஸ்லாம் தடை செய்கின்றது. இறாக்கில் ஹுஸைன் ﵁ அவர்களுடைய கப்றும், மிஸ்ரில் இமாம் ஷாபி ﵀ அவர்களுடைய கப்றும், பக்தாதில் அப்துல்காதிர் ஜிலானிய்யி ﵀ அவர்களுடைய கப்றும் இவர்களல்லாத பலருடைய கப்றுகளும் பள்ளிவாசல்களினுள் இருப்பதைக் காணலாம்.

'ஷைக் ஸாதிக்' என்பவர் பின்வருமாறு என்னிடம் ஒரு சம்பவத்தைக் கூறினார். ஒரு மனிதர் கிப்லாத் திசையை நோக்கித் தொழாமல் (முஹ்யித்தீன்) அப்துல் காதிர் ஜீலானிய்யி அவர்களுடைய கப்றை நோக்கித் தொழுது கொண்டிருந்தார். அவரை நோக்கி, கிப்லாவை முன்னோக்கித் தொழுவது 'பர்ளு' என்றும் 'கப்றுகளின் மீது கட்டிடம் கட்டவோ, அவற்றை நோக்கித் தொழவோ வேண்டாம்' என்று நபி ﷺ அவர்கள் தடை செய்துள்ளார்கள் என்றும் நான் செய்த உபதேசத்தைச் செவியேற்காதவரைப் போன்று என்னை நோக்கி **'நீ ஒரு வஹ்ஹாபி'** என்று சொன்னார்.

மிஸ்ரிலே கட்டடப்பட்ட அதிகமான கப்றுகள் 'பாதிமிய்யா' ஆட்சி காலத்தில் நிருவப்பட்டனவாகும். இமாம் இப்னு கதீர் ﵀ அவர்கள் இதனைத் தனது அல்-பிதாயா வந்-நிஹாயா என்ற நூலில் பாகம்-1, பக்கம் 346-ல் கூறியுள்ளார்கள்.

இறைநிராகரிப்பாளர்கள், பாவிகள், கொடுமைக்காரர்கள், நாத்திகர் கள், அல்லாஹ்வுடைய ஸிபத்துகளை மறுக்கின்றவர்கள், இஸ்லாத்தையே மறுக்கின்றவர்கள், நெருப்பு வணக்கத்தில் நம்பிக்கைக் கொண்டவர்கள் போன்ற காஃபிர்கள் பள்ளிவாசல்களில் ஐங்காலமும் தொழுதுவரும் முஸ்லிம்களின் கூட்டங்களை கண்டு பயந்தனர்; திடுக்குற்றனர்; இவர்களோ

தொழுவதுமில்லை. ஹஜ் செய்வதுமில்லை. முஸ்லிம்கள் மீது கடுமையான பொறாமைக் கொள்பவர்களாக இருந்தனர்.

இவர்கள், முஸ்லிம்களைப் பள்ளிவாசல் தொடர்பிலிருந்து திசை திருப்புவதைப் பற்றி சிந்தித்தனர். எனவே கப்றுகளின் மீது குப்பாக் களையும் மனாராக்களையும் கட்டி அலங்கரித்தனர். அவை ஒவ்வொன்றி னுள்ளும், ஹுஸைன் ﷺ, அவர்களின் சகோதரி ஜைனப் ﷺ போன்றோர் இருப்பதாக மக்களை நம்ப வைத்தனர். அவற்றின் பக்கம் மக்களைத் திசை திருப்புவதற்காக, அவற்றில் பல விழாக்களை ஏற்படுத்தினர். தங்கள் பக்கம் மக்களைக் கவரச் செய்வதற்காகத் தமக்குத்தாமே 'பாதிமிகள்' என்று பெயர் சூட்டிக் கொண்டனர்.

பின்னர் முஸ்லிம்கள், தம்மைச் ஷிர்க்கில் ஆழ்த்திய இந்த பித்அத்துகளைப் பற்றிப் பிடித்தனர். அன்று அம்மக்கள் எதிரிகளிடமிருந்து தமது மார்க்கத்தைப் பாதுகாப்பதற்காக ஆயுதங்கள் வாங்கவேண்டி யிருந்தது; அவர்களது பொருளாதாரத்தை வளர்க்க வேண்டியிருந்தது. இவ்வாறான பிரயோசனமும் தேவையுமுடைய வழியில் பணத்தைச் செலவு செய்வதற்குப் பதிலாக மேற்கூறப்பட்ட கப்று வணக்கங்களுக்காகச் செலவு செய்தனர்.

முஸ்லிம்கள் தங்களது பணத்தை கப்றுகளின் மீது குப்பாக்கள் கட்டவும், வளைத்துச்சுவர் எழுப்பவும் தரிசனை ஏற்படுத்தவும் பயன்படுத்த ஆரம்பித்தனர். இந்தப்பணம் இறந்தவர்களுக்கு எந்தப் பயனையும் அளிக்காது. 'கப்றுகளின் மீது கட்டிடம் கட்டுவதை இஸ்லாம் தடை செய்கின்றது' என்ற விஷயத்தை அறிந்த நிலையில், இந்தப்பணம் ஏழை களுக்குக் கொடுக்கப்பட்டால் அது உயிருள்ளவர் களுக்கும் மரணித்தவர் களுக்கும் பயனளிக்கும்.

'எந்த ஒரு சிலையையும் அழிக்காமலும், சிறப்பளித்துக் கொண்டிருக்கும் எந்த ஒரு கப்றையும் (பூமியுடன்) தரை மட்டமாக்

காமலும் விட்டுவிடாதே' என்று அலி ﵁ அவர்களை நோக்கி நபி ﷺ அவர்கள் கூறினார்கள். [*ஆதாரம்: முஸ்லிம்*]

'அதாவது உயர்ந்திருக்கும் எந்த ஒரு கப்றையும் உடைக்காமல் விட்டுவிடாதே!' என்பது இதன் கருத்தாகும். நபி ﷺ அவர்கள் சிலையை எந்தளவு வெறுத்தார்களோ அதே அளவு கட்டப்பட்ட கப்றையும் வெறுத்தார்கள் என்பதை மேற்காட்டிய ஹதீஸ் தெளிவுபடுத்துகின்றது. கப்றை அடையாளம் கண்டு கொள்வதற்காக ஒரு சாணளவு உயர்த்து வதற்கு இஸ்லாம் அனுமதியளிக்கின்றது.

இறந்தவர்களுக்காகச் செய்யப்படும் நேர்ச்சைகள் அனைத்தும் பெரிய ஷிர்க்காகும். மேற்கூறப்பட்ட இடங்களில் வேலை செய்கின்றவர்கள், நேர்ச்சை செய்யப்பட்ட பணம், மற்றும் பொருட்களைப் பெற்று, பாவமான கருமங்களிலும் இச்சையைத் தீர்க்கும் வழிகளிலும் செலவு செய்கின்றனர். நேர்ச்சை செய்து அதனைக் கொடுத்தவனின் பாவச் செயல்களுக்குக்கூட இவர்கள் துணையாகின்றனர்.

இந்தப்பணம் 'ஸதகா' என்ற பெயரில் ஏழைகளுக்குக் கொடுக்கப் பட்டிருந்தால் உயிருள்ளவர்களும் மரணித்தவர்களும் இதனால் பயனடைந் திருப்பர். இந்தத் தர்மத்தைப் பெற்றுக் கொண்டவன் தனது தேவைகளுக்கு இதனைப் பயன்படுத்துவான்.

அல்லாஹ்வே! நீ, உண்மையை உண்மையாகவே எங்களுக்குக் காட்டி, அதனை பின்பற்றுகின்றவர்களாகவும், அதிலே விருப்பம்கொள்ளக் கூடியவர்களாகவும் எங்களை ஆக்கி வைப்பாயாக! மேலும் தீமையை தீமையாகவே எங்களுக்குக் காட்டி, அதனை விட்டு விலகக் கூடியவர்களாகவும், அதிலே வெறுப்புக் கொள்ளக் கூடியவர்களாகவும் எங்களை ஆக்கி வைப்பாயாக!



# ஷிர்க்கின் கேடுளும் அதன் தீமைகளும்

நிச்சயமாக ஷிர்க்கின் தீமைகள் தனி மனித வாழ்க்கையிலும் கூட்டு வாழ்க்கையிலும் உண்டு. அவற்றில் மிக முக்கியமானவை பின்வருமாறு :

1. ஷிர்க் வைத்தல் மனித இனத்துக்கு இழிவை ஏற்படுத்துகின்றது. அது மனிதனுடைய கண்ணியத்தைக் குறைக்கின்றது. அவனுடைய அந்தஸ்தைத் தாழ்த்துகின்றது. அவனுடைய அந்தஸ்து யாதெனில், அல்லாஹ் அவனைப் பூமியில் தன்னுடைய பிரதிநிதியாக அமைத்து, அவனை கண்ணியப்படுத்தி, எல்லா வஸ்துக்களுடைய பெயர்களையும் அவனுக்குக் கற்றுக் கொடுத்தான் என்பதாகும்.

வானம் பூமியிலுள்ள எல்லாவற்றையும் அவனுக்கு வசப்படுத்திக் கொடுத்தான். இவ்வமைப்பில் அவனுக்குத் தலைமைத்துவத்தையும் கொடுத்து விட்டான். எனினும் அவன் தனது மகிமையை மறந்து இவ்வுலகிலுள்ள அற்பமான சிலவற்றைத் தான் வணங்கி வழிபடக்கூடிய தெய்வங்களாக எடுத்துக் கொண்டான்.

மனிதனுக்கு ஊழியம் செய்வதற்கென்றும், அவன் அறுத்துப் புசிப்பதற்கும் அல்லாஹ் படைத்திருக்கும் காளைமாட்டைத் தமது வணக்கத்திற்குரிய தெய்வமாகப் பல இலட்சகணக்கான இந்தியர்கள் எடுத்துக் கொண்டிருக்கின்றனர். சில முஸ்லிம்கள், மரணித்து அடக்கம் செய்யப்பட்டவர்களின் கப்றுகளிடத்தில் சென்று அவர்களிடம் தமது தேவைகளை வேண்டுகின்றனர்.

அங்கு அடக்கம் செய்யப்பட்டிருப்பவர்களோ இவர்களைப் போன்ற (அல்லாஹ்வின்) அடிமைகள். தமக்குத்தாமே எந்தவித நன்மையோ,

தீமையோ செய்துக் கொள்ள சக்தியற்றவர்கள். இன்று நாம் கண்கூடாகக் காணுகின்றவற்றில் மனிதன் செய்யும் ஷிர்க்கில் இதனைவிட இழிவான ஒன்றைக் காண முடியுமா?

மரணித்தவர்களைப் பொறுத்தமட்டில், உயிருடனிருப்பவர்கள் தமக்காக அல்லாஹ்விடம் துஆக் கேட்க வேண்டும் என்றளவு தேவை யுடையவர்களாக இருக்கின்றனர். நாம், அவர்களுக்காக அல்லாஹ்விடம் பிரார்த்திக்கின்றோம். அல்லாஹ்வையன்றி அவர்களிடம் எமது தேவைகளை வேண்டிப் பிரார்த்திக்க மாட்டோம். இதுபற்றிப் பின்வருமாறு அல்லாஹ் கூறுகிறான்.

وَالَّذِيْنَ يَدْعُوْنَ مِنْ دُوْنِ اللهِ لَا يَخْلُقُوْنَ شَيْـًــا وَّهُمْ يُخْلَقُوْنَؕ

اَمْوَاتٌ غَيْرُ اَحْيَآءٍ ۚ وَمَا يَشْعُرُوْنَ اَيَّانَ يُبْعَثُوْنَ

**“(நபியே!) அல்லாஹ்வையன்றி எவற்றை அவர்கள் (ஆண்டவனென) அழைக்கிறார்களோ அவற்றால், யாதொன்றையும் படைக்க முடியாது. அவைகளும் (அவனால் படைக்கப் பட்டவைகளாகும். (அன்றி அவை) உயிருள்ளவைகளுமல்ல; உயிரற்றவர்கள் (மரித்தோர்) எப்பொழுது (உயிர்கொடுத்து) எழுப்பப்படுவார்கள் என்பதையும் அவை அறியா. (ஆகவே அவை, அவர்களிடம் தேவைகளைக் கேட்கும் இவர்களுக்கு என்ன பலனளித்து விடும்)” [அல்குர்ஆன்:16:20,21]**

وَمَنْ يُّشْرِكْ بِاللّٰهِ فَكَاَنَّمَا خَرَّ مِنَ السَّمَآءِ فَتَخْطَفُهُ الطَّيْرُ اَوْ تَهْوِىْ بِهِ الرِّيْحُ فِىْ مَكَانٍ سَحِيْقٍ

**“எவன் அல்லாஹ்வுக்கு இணைவைக்கிறானோ அவன், வானத்திலிருந்து (முகங்குப்புற) விழுந்து (காகம், கழுகு போன்ற) பறவைகள் இராய்ந்து கொண்டு சென்றதைப் போலவோ; அல்லது வெகு தூரத்தில் காற்று அடித்துக்கொண்டு சென்றதைப் போலவோ ஆகிவிடுவான்” [அல்குர்ஆன்: 22:31]**

2. ஷிர்க் என்பது அனாச்சாரம், மூடக்கொள்கை ஆகியவற்றின் பிறப்பிடமாகும். ஏனென்றால் அல்லாஹ் அல்லாத நட்சத்திரங்கள், ஜின்கள்,

மனிதர்கள், ரூஹ்(உயிர்)கள் ஆகியவற்றுக்குச் சில ஆற்றல்கள் உண்டு என்று நம்புகின்றவனுடைய அறிவு எல்லாவித மூடக்கொள்கைகளையும் ஏற்றுக் கொள்ளவும், எல்லா தஜ்ஜால்களையும் (பொய்யர்களையும்) உண்மைப்படுத்தவும் தயாராகின்றது.

இதனைக்கொண்டே சாத்திரக்காரர்கள், ஜோதிடர்கள், சூனியக் காரர்கள், நட்சத்திர சாஸ்திரம் பார்ப்பவர்கள் போன்றோர்களால் ஷிர்க்குகள் (இணைவைத்தல்) மிக வேகமாகப் பரவுகின்றன. இவர்கள் அல்லாஹ்வை யன்றி வேறெவராலும் அறியமுடியாத மறைவானவற்றைத் தம்மால் அறிய முடியும் என்று அடித்துக் கூறுவர்.

3. ஷிர்க் மாபெரும் அக்கிரமமாகும். இது அடிப்படையிலேயே அக்கிரமம். ஏனென்றால் அடிப்படைகளில் மிக உன்னதமானது அல்லாஹ் வைத் தவிர வேறெந்த நாயனுமில்லை என்பதும், அவனைத்தவிர வேறெந்த இரட்சகனுமில்லை என்பதும், தீர்ப்பளிக்கக் கூடியவன் அவனையன்றி வேறெருவருமில்லை என்பதுமாகும்.

ஆனால் இணைவைக்கிறவனோ, அல்லாஹ்வைத்தவிர வேறு இரட்ச கர்களை எடுத்துக்கொண்டு, அவனல்லாதவர்களின் தீர்ப்பை விரும்பு கிறான். ஷிர்க் என்பது மனிதன் தனக்குத்தானே செய்து கொள்ளும் அக்கிரமமாகும்… ஏனென்றால் இணைவைக்கிறவன், தன்னைப் போன்ற ஒரு சிருஷ்டிக்கு அல்லது தன்னைவிட தாழ்ந்த ஒருவனுக்குத் தன்னை அடிமையாக ஆக்கிக்கொண்டான். இந்த மனிதனை (மற்றவர்களுக்கு அடிமையாகாத அளவுக்கு) அல்லாஹ் சுதந்திரமானவனாகப் படைத்துள்ளான்.

ஷிர்க் பிறருக்குத் தீங்கிழைத்து, அக்கிரமம் செய்வதாகும். ஏனென்றால் எவன் அல்லாஹ்வுக்கு அவனல்லாதவனை இணையாக்கு கின்றானோ, அவன் தகுதியில்லாத ஒன்றை அல்லாஹ்வுக்குச் சமப்படுத்தித் தீங்கிழைக்கிறான். இது மாபெரும் அக்கிரமமாகும்.

4. ஷிர்க் என்பது பயமும் சந்தேகங்களும் உதயமாகும் இடமாகும். எவனுடைய அறிவு சம்பிரதாயங்களை ஏற்று, அனாச்சாரங்களையும், பிழையான கொள்கைகளையும் உண்மைப் படுத்துகிறதோ அவன் பல திக்கிலும் பயப்படுகின்றவனாகவே இருப்பான்.

ஏனென்றால் அவன் பல தெய்வங்கள் மீதும் நம்பிக்கை வைத்தவனாவான். அவன் நம்பியுள்ள தெய்வங்கள் அனைத்தும் தமக்குத் தாமே நன்மையோ, தீமையோ செய்து கொள்ளச் சக்தியற்றவைகள். இதனால் தான் வெளிப்படையான எந்தவிதக் காரணமுமின்றி அர்த்தமற்ற பயமும், சகுனமும், பீடையும் இந்த ஷிர்க்கினால் பரவுகின்றன. பின்வருமாறு அல்லாஹ் சொல்வது போன்று இது அமைந்துள்ளது.

سَنُلْقِىْ فِىْ قُلُوْبِ الَّذِيْنَ كَفَرُوا الرُّعْبَ بِمَاۤ اَشْرَكُوْا بِاللّٰهِ مَا لَمْ يُنَزِّلْ بِهٖ سُلْطٰنًا

وَمَاْوٰىهُمُ النَّارُ‌ؕ

**“நிராகரிப்போரின் இருதயங்களில் அதிசீக்கிரமாக நாம் பீதியை உண்டு பண்ணிவிடுவோம். ஏனென்றால் அவர்கள் இணைவைப்பதற்கு (அல்லாஹ்) எவ்வித ஆதாரமும் அவர்களுக்கு அளிகாதிருக்க, அவர்கள் அல்லாஹ்வுக்கு இணை வைக்கிறார்கள். அவர்கள் தங்குமிடம் நரகம் தான்.” [அல்குர்ஆன்: 3:151]**

ஷிர்க் என்பது பிரயோசனமான அமல்களை வீணாக்கி விடுகின்றது. ஏனென்றால் அது (அல்லாஹ்விடத்தில் நெருங்குவதற்காக) இடைத்தரகர்கள் மீதும், பரிந்து பேசுபவர்கள் மீதும் நம்பிக்கை கொள்ளக் கற்றுக் கொடுக்கின்றது. இதனால் தான், ‘தாம் எவர்கள் மீது நம்பிக்கை வைத்துள்ளனரோ, அவர்கள் தமக்காக அல்லாஹ்விடத்தில் பரிந்து பேசுவார்கள்’ என்று நம்பியவர்களாக ஸாலிஹான அமல்களை விட்டுவிட்டு பாவங்களில் மூழ்கி விடுகின்றனர்.

பின்வரும் மறைவசனத்தில் அல்லாஹ் சொல்கின்றவாறு இதுதான் பண்டைய கால அரபிகளின் நம்பிக்கையாக இருந்தது.

وَيَعْبُدُوْنَ مِنْ دُوْنِ اللهِ مَا لَا يَضُرُّهُمْ وَلَا يَنْفَعُهُمْ وَيَقُوْلُوْنَ هٰٓؤُلَآءِ شُفَعَآؤُنَا عِنْدَ اللّٰهِ قُلْ اَتُنَبِّـــُٔـوْنَ اللّٰهَ بِمَا لَا يَعْلَمُ فِى السَّمٰوٰتِ وَلَا فِى الْاَرْضِ سُبْحٰنَهٗ وَتَعٰلٰى عَمَّا يُشْرِكُوْنَ

**“(ஷிர்க் வைப்போர்) தங்களுக்கு யாதொரு நன்மையும் தீமையும் செய்ய முடியாத அல்லாஹ் அல்லாதவற்றை வணங்குவதுடன், ‘இவை அல்லாஹ்விடத்தில் எங்களுக்குச்சிபாரிசு செய்பவை’ என்றும் கூறுகின்றனர். ‘(ஆகவே நபியே! நீர் அவர்களை நோக்கி)’ வானங்களிலோ, பூமியிலோ அல்லாஹ்வுக்குத் தெரியாதவை (உள்ளனவா? அவை)களை (இவைகள் மூலம்) நீங்கள் அவனுக்கு அறிவிக்கின்றீர்களா? (அவனோ யாவையும் நன்கறிந்தவன்;) அவன் மிகப் பரிசுத்தமானவன்; அவர்கள் இணைவைப் பவைகளை விட மிக்க உயர்ந்தவன்’ என்றும் கூறும்” [அல்குர்ஆன்: 10:18]**

“ஈஸா ﷺ அவர்கள் சிலுவையில் அறையப்பட்டது தமது பாவங் களுக்குப் பரிகாரமாக இருப்பதற்காகவேயாகும்” என்று கிறிஸ்தவர்கள் நம்பிக்கைக் கொண்டுள்ளனர். இதுபோலவே சில முஸ்லிம்கள் தாம் சுவர்க்கம் பிரவேசிப்பதற்காக நபி ﷺ அவர்களுடைய ‘ஷபாஅத்’ கிடைக்கும் என்ற நம்பிக்கையுடன் வாஜிபு(கடமை)களை விட்டுவிட்டு, ஹறாமானவற்றைச் செய்கிறார்கள். நபி ﷺ அவர்கள் தனது மகள் பாத்திமா ﵂ அவர்களுக்குப் பின்வருமாறு சொன்னார்கள்.

‘முஹம்மதுடைய மகள் பாத்திமாவே! எனது சொத்துக்களிலிருந்து நீ விரும்பியவற்றை என்னிடம் கேள்! (தந்து விடுகிறேன்) உனக்காக அல்லாஹ்விடத்தில் எதனையும் செய்துதர என்னால் முடியாது’

[ஆதாரம்: புகாரி]

5. நரகத்தில் நிரந்தரமாக ஷிர்க்கு காரணமாக அமைகின்றது. ஷிர்க் என்பது இவ்வுலகில் வீணான கருமத்தைச் செய்யவும் மறுமையில் நிரந்தர நரக வேதனையை அடைந்து கொள்ளவும் வழியை ஏற்படுத்துகின்றது. இதுபற்றி அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான்.

مَنْ يُّشْرِكْ بِاللّٰهِ فَقَدْ حَرَّمَ اللّٰهُ عَلَيْهِ الْجَنَّةَ وَمَاْوٰىهُ النَّارُ ؕ وَمَا لِلظّٰلِمِيْنَ مِنْ اَنْصَارٍ

**“எவன் அல்லாஹ்வுக்கு இணைவைக்கிறானோ, அவனுக்கு நிச்சயமாக அல்லாஹ் சுவனபதியை ஹறாமாக்குகிறான். அவன் தங்குமிடம் நரகம் தான். (இத்தகைய) அக்கிரமக்காரர்களுக்கு (மறுமையில்) உதவிசெய்வோர் ஒருவருமில்லை” [அல்குர்ஆன்: 5:72]**

நபி ﷺ அவர்களும் இதுபற்றிப் பின்வருமாறு கூறுகின்றார்கள்.

‘அல்லாஹ் அல்லாதவர்களை அவனுக்குப் பகரமாக அழைத்தவனாக எவன் மரணிக்கிறானோ அவன் நரகம் பிரவேசிப்பான்’ [*ஆதாரம்: புகாரி*]

6. ஷிர்க்கு முஸ்லிம் சமுதாயத்தைப் பிரித்துக் கூறுபோடுகின்றது. இதுபற்றி பின்வருமாறு அல்லாஹ் கூறுகிறான்.

وَلَا تَكُوْنُوْا مِنَ الْمُشْرِكِيْنَۙ مِنَ الَّذِيْنَ فَرَّقُوْا دِيْنَهُمْ وَكَانُوْا شِيَعًا ؕ كُلُّ حِزْبٍۭ بِمَا لَدَيْهِمْ فَرِحُوْنَ

**“இணைவைப்போரில் நீங்களும் ஆகி விடாதீர்கள். அவர்கள் தங்கள் மார்க்கத்தில் பிரிவினையை உண்டுபண்ணி, (பல) பிரிவுகளாகப் பிரிந்து விட்டனர். (அவர்கள்) ஒவ்வொரு வகுப்பாரும் தங்களிடமுள்ள(தவறான)தைக் கொண்டு சந்தோசப் படுகின்றனர்” [அல்குர்ஆன்: 30:31,32]**

மேற்காட்டிய ஷிர்க்கின் பிரிவுகள் அனைத்தும், ஷிர்க், அதனை விட்டு விலகுவதற்கு அவசியமாக மிக மகத்தான ஒரு கருமம் என்பதையும், அதில் ஈடுபடுவதைப் பயப்படுவது அவசியமாகும் என்பதையும் மிகத் தெளிவாக கூறிவிட்டன. ஏனென்றால் இது பாவத்திலேயே மிகப் பெரியதாகும். மனிதன் செய்யக்கூடிய ஸாலிஹான அமல்கள் அனைத்தையும் அழித்து விடக்கூடியதாக இது இருக்கின்றது. சிலவேளை அது இவ்வுலகில் மனிதனுக்குப் பயனளிப்பது போலவும் இருக்கும். ஆனால் மறுமையில் அது அவனுக்குப் பயனற்றதாகவே ஆகிவிடும். அல்குர்ஆன் அதனை பின் வருமாறு கூறுகின்றது.

وَقَدِمْنَآ اِلٰى مَا عَمِلُوْا مِنْ عَمَلٍ فَجَعَلْنٰهُ هَبَآءً مَّنْثُوْرًا

“அவர்கள் செய்து கொண்டிருந்த காரியங்களை நாம் (மறுமையில்) நோக்கினால் (அதில் யாதொரு நன்மையும் இல்லாததால்) பறக்கும் தூசிகளைப் போல் அவைகளை நாம் ஆக்கி விடுவோம்”. [அல்குர்ஆன்: 25:23]



# இஸ்லாம் அனுமதிக்கின்ற வஸீலா

يَاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوا اتَّقُوا اللّٰهَ وَابْتَغُوْٓا اِلَيْهِ الْوَسِيْلَةَ

**"மூமின்களே! நீங்கள் அல்லாஹ்வுக்குப் பயந்து அவனிடம் செல்வதற்குரிய வஸீலாவை (வழியை)த் தேடிக் கொள்ளுங்கள்" [அல்குர்ஆன்: 5:35]**

என்று அல்லாஹ் கூறுகிறான்.

'அல்லாஹ்வுக்கு வழிபடுவது கொண்டும், அவனுக்குத் திருப்தியை அளிக்கக்கூடிய வணக்கங்களைப் புரிந்து கொண்டும் அல்லாஹ்வின் பால் நெருங்குங்கள்' என்பதே மேற்காட்டிய வசனத்திலுள்ள வஸீலா என்ற சொல்லின் அர்த்தமாகும் என்பதாக கதாதா ﵀ அவர்கள் கூறியுள் ளார்கள். இதுதான் அல்குர்ஆன் கட்டளையிடுகின்ற அங்கீகரிக்கப்பட்ட 'வஸீலா'.

நபி ﷺ அவர்களும் இதனையே கூறியுள்ளார்கள். இதனைக் கொண்டே நபித்தோழர்கள் செயல்பட்டார்கள். வஸீலாவுக்குப் பல பிரிவுகள் உண்டு. அவற்றுள் மிக முக்கியமானவற்றில் சில பின்வருமாறு:-

## ஈமானைக் கொண்டு வஸீலாத் தேடுதல். இதுபற்றி அல்லாஹ் கூறுவதாவது:

رَبَّنَآ اِنَّنَا سَمِعْنَا مُنَادِيًا يُّنَادِىْ لِلْاِيْمَانِ اَنْ اٰمِنُوْا بِرَبِّكُمْ فَاٰمَنَّا رَبَّنَا فَاغْفِرْ لَنَا ذُنُوْبَنَا وَكَفِّرْ عَنَّا سَيِّاٰتِنَا وَتَوَفَّنَا مَعَ الْاَبْرَارِ

**"எங்கள் இறைவனே! 'உங்கள் இறைவனை விசுவாசியுங்கள்' என்று எங்களை ஈமானினளவில் அழைத்தோரின் அழைப்பை நிச்சயமாக நாங்கள் செவியுற்று,**

நாங்களும் அவ்வாறே 'ஈமான்' கொண்டோம். ஆதலால் எங்கள் இறைவனே! நீ எங்கள் குற்றங்களை மன்னித்து, எங்கள் பாபங்களிலிருந்து எங்களை விடுவித்து (முடிவில்) நல்லோர்களுடன் எங்களை மரிக்கும்படிச் செய்வாயாக!"

[அல்குர்ஆன்: 3:193]

## அல்லாஹ்வை ஒருமைப்படுத்துவது கொண்டு வஸீலாத்தேடுதல்:

யூனுஸ் ﷺ அவர்களை மீன் விழுங்கிய போது அவர்கள் செய்த துஆவைப் போன்று இது அமைகின்றது.

فِى الظُّلُمٰتِ اَنْ لَّاۤ اِلٰهَ اِلَّاۤ اَنْتَ سُبْحٰنَكَ ۖ اِنِّىْ كُنْتُ مِنَ الظّٰلِمِيْنَ

"(அவரை ஒரு மீன் விழுங்கும்படிச் செய்தோம்; மீன் வயிற்றின்) இருளிலிருந்த அவர் (நம்மை நோக்கி) 'உன்னைத்தவிர வேறெந்த நாயனுமில்லை; நீ மிகப் பரிசுத்தமானவன். நிச்சயமாக நானோ அக்கிரமக்காரர்களில் ஒருவனாகி விட்டேன். (என்னை மன்னித்து அருள் புரிவாயாக!) என்று பிரார்த்தனை செய்தார்.

فَاسْتَجَبْنَا لَهٗ ۙ وَنَجَّيْنٰهُ مِنَ الْـغَمِّ ؕ وَكَذٰلِكَ نُـنْجِى الْمُؤْمِنِيْنَ

நாம் அவருடைய துஆவை அங்கீகரித்து (அவருடைய மிக்க துக்ககரமான) கஷ்டத்திலிருந்தும், அவரை நாம் இரட்சித்துக் கொண்டோம். இவ்வாறே (கஷ்டத்தில் சிக்கி நம்மிடம் பிரார்த்தனை செய்யும்) மூமின்களையும் நாம் இரட்சித்துக் கொள்வோம்" [அல்குர்ஆன்: 21:87,88]

## அல்லாஹ்வுடைய அழகுத் திருநாமங்களைக்கொண்டு அவனிடம் வஸீலாத் தேடுதல்:

இதுபற்றி அல்லாஹ் கூறுவது பின்வருமாறு அமைந்துள்ளது.

وَلِلّٰهِ الْاَسْمَآءُ الْحُسْنٰى فَادْعُوْهُ بِهَا

**“அல்லாஹ்வுக்கு மிக்க அழகான திருநாமங்கள் உண்டு. ஆகவே அவற்றைக் கொண்டே அவனை நீங்கள் அழையுங்கள்” [அல்குர்ஆன்: 7:180]**

அல்லாஹ்வுடையப் பெயர்களைக் கொண்டு நபி ﷺ அவர்கள் பிரார்த்தனை புரிந்துள்ளது இதற்கு ஆதாரமாக அமைந்துள்ளது.

**‘அஸ்அலுக பி-குல்லி இஸ்மின் ஹுவலக’**

(பொருள்: அல்லாஹ்வே! உனக்கு சொந்தமான எல்லாப் பெயர்களைக் கொண்டும் உன்னிடம் கேட்கிறேன். [*ஆதாரம்: திர்மிதி (ஸஹீஹ்)*]

# அல்லாஹ்வுடைய ஸிபத்து (பண்பு)களைக் கொண்டு வஸீலாத் தேடுதல்:

நபி ﷺ அவர்கள் அவற்றைக்கொண்டு கேட்ட ஒரு துஆ பின்வருமாறு அமைந்துள்ளது.

**‘யாஹய்யு, யாகய்யூமு பிரஹ்மதிக அஸ்தகீஸு’**

(பொருள்: உயிருள்ளவனே! என்றும் நிலையானவனே! உன்னுடைய ரஹ்மத்தை(கிருபையை)க் கொண்டு உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.)

[*ஆதாரம்: திர்மிதி*]

தொழுகை, பெற்றோர்களுக்குப் பணிவிடை செய்தல், கடமைகளைப் பேணுதல், அமானிதங்களைப் பேணுதல், தருமங்கள் கொடுத்தல், அல்லாஹ்வை திக்ரு செய்தல், குர்ஆன் ஓதல், நபி ﷺ அவர்கள் மீது ஸலவாத் சொல்லல் போன்ற ஸாலிஹான அமல்களைக் கொண்டு வஸீலாத் தேடுதல். நபி ﷺ அவர்களையும், அவர்களது தோழர்களையும் நேசிப்பதும் இதல்லாத ஏனைய ஸாலிஹான அமல்களைச் செய்வதும் அதில் அடங்கும். ஸஹீஹ் முஸ்லிமில் இடம்பெற்றுள்ள பின்வரும் குகைவாசிகளின் சம்பவம் இதற்குச் சான்றாய் அமைகின்றது.

மூன்று தோழர்கள் ஒருவழியில் சென்று கொண்டிருந்த போது மழைபொழிய ஆரம்பிக்கவே ஒரு குகையினுள் தங்கினர். மழை பெய்து கொண்டிருக்கும் போது, பெரிய கல்லொன்று மலையிலிருந்து உருண்டு விழுந்து குகைவாயிலை அடைத்துக் கொண்டது. அப்பொழுது அவர்கள் மூவரும் ஒருவர் பின் ஒருவராக தாம் செய்த ஸாலிஹான சில அமல்களை முன்னிருத்திஅல்லாஹ்விடம் பிரார்த்தித்தனர்.கூலிக்காரனுடைய கூலியை நேர்மையாகக் கொடுத்ததாக ஒருவரும், பெற்றோர்கள் இருவருக்கும் முறையாகப் பணிவிடை செய்ததாக இரண்டாமவரும், வாய்ப்பேற்பட்ட சமயமொன்றில் விபச்சாரம் ஒன்றிலிருந்து தன்னைத் தடுத்துக் கொண்டதாக மூன்றாமவரும் பிரார்த்தித்தனர். ஒவ்வொருவருடைய பிரார்த்தனையின் பின்னும் குகையை மூடிக்கொண்டிருந்த கல் கொஞ்சங் கொஞ்சமாக அகன்று, மூன்றாவது பிரார்த்தனைக்குப் பின் முற்றாகவே அகன்று விட்டது. (இது நீண்ட வரலாற்றின் சுருக்கமாகும்.)

(இது நீண்ட வரலாற்றின் சுருக்கமாகும்.) மது அருந்துதல், விபச்சாரம் செய்தல் போன்ற பாபமான செயல்களை விடுவது கொண்டு வஸீலாத் தேடுதல், மேற்கூறப்பட்ட குகைவாசிகளின் சம்பவத்தில் இது அடங்குவதைக் காணலாம்.

இக்கால முஸ்லிம்கள் ஸாலிஹான அமல்கள் செய்வதையும் அவற்றைக் கொண்டு வஸீலாத் தேடுவதையும் விட்டு விட்டார்கள். அதேவேளை நபி ﷺ அவர்களின் நடைமுறைக்கு மாறாக மரணித்த நல்லடியார்களைக் கொண்டும், அவர்களுடைய அமல்களைக் கொண்டும் அல்லாஹ்விடத்தில் வஸீலாத் தேடுகின்றனர்.

உயிருடனுள்ள ஸாலிஹான நல்லடியார்களைக் கொண்டு வஸீலாத் தேடுதல் அனுமதிக்கப்பட்டதே! பொன்வரும் சம்பவமொன்று இதற்குச் சான்றாய் அமைகின்றது.

கண்பார்வையற்ற ஒருமனிதர் நபி ﷺ அவர்களிடம் வந்து 'யாரஸூலுல்லாஹ்! எனக்கு கண்பார்வை உண்டாவதற்காக அல்லாஹ்விடம் துஆக் கேளுங்கள்' என்று கூறினார். அப்பொழுது நபியவர்கள் 'நீர் விரும்பினால் நான் பிரார்த்திக்கிறேன்; ஆனால் நீர் விரும்பினால் பொறுமையாக இருப்பது உனக்கு மிக நன்று என்று கூறினார்கள். அதற்கு அம்மனிதர் யாரஸூலுல்லாஹ்! நீங்கள் பிரார்த்தனை செய்யுங்கள் என்று கூறினார்கள்.

அப்பொழுது நபி ﷺ அவர்கள், அம்மனிதருக்கு ஒழுச் செய்து கொண்டு இரண்டு ரக்கஅத்துக்கள் தொழுதுவிட்டு, பின்வருமாறு துஆக் கேட்கும்படி பணித்தார்கள். துஆவின் அர்த்தமாவது:-

'அல்லாஹ்வே! ரஹ்மத்துடைய நபியான உனது நபியைக் கொண்டு உன்னை முன்னோக்கி உன்னிடம் கேட்கிறேன். முஹம்மதே! என்னுடைய இறைவன் எனது இந்தத் தேவையை நிறைவேற்றி வைக்க வேண்டு மென்பதற்காக உங்களைக் கொண்டே எனது இறைவனிடம் எனது முகத்தைத் திருப்பியுள்ளேன். அல்லாஹ்வே! நபியவர்கள் எனக்கு 'ஷபாஅத் செய்யக்கூடியவராயிருக்க நீ ஆக்கி வைப்பாயாக!' இவ்விதம் அம்மனிதர் துஆக் கேட்கவே, அவர் குணமடைந்தார்'

**[ஆதாரம்: *அஹ்மத் (ஸஹீஹ்)*]**

நபி ﷺ அவர்கள் உயிருடனிருக்கும் போது, கண் பார்வையற்ற ஒருவர் தனக்காகப் பிரார்த்தனை செய்யுமாறு வேண்டினார் என்றும், அதனையடுத்து அம்மனிதராகவே அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்து அவனுடைய நபியினது துஆவைக் கொண்டு அல்லாஹ்வின் பால் முன்னோக்கினார் என்றும், அதனையடுத்து அவருடைய துஆவை அல்லாஹ் ஒப்புக்கொண்டான் என்றும் இந்த ஹதீஸின் மூலம் அறிகிறோம்.

இந்த துஆ நபி ﷺ அவர்கள் வாழ்ந்த காலத்துக்கு மட்டுமே சொந்தமானது. நபியவர்களது மௌத்துக்குப் பின்னால் இவ்விதம்

பிரார்த்திப்பதற்கு மார்க்கத்தில் இடமில்லை. ஏனென்றால், ஸஹாபக்கள் இவ்விதம் செய்ததுமில்லை. இந்நிகழ்ச்சிக்குப் பின்னால் வேறெந்த அந்தகரும் இவ்விதம் பிரார்த்தித்துக் குணமடைந்ததுமில்லை.



# தடை செய்யப்பட்ட வஸீலா

தடுக்கப்பட்ட வஸீலா என்பது மார்க்கத்தில் எவ்வித ஆதாரமுமற்ற தாகும். இது பல வகைப்படும்.

1. வஸீலா என்று சொல்லிக் கொண்டு இன்று நடைபெறுவது போன்று, மரணித்தவர்களிடம் தேவைகளை நிறைவேற்றித் தருமாறு வேண்டுதலும், அவர்களைக்கொண்டு உதவி தேடுவதும் மரணித்தவர் களிடம் வஸீலாத் தேடுவதாகும்.

மார்க்கம் இவ்வாறானதன்று. ஏனென்றால் வஸீலா என்பது, ஈமான் கொள்ளல், ஸாலிஹான அமல்கள் செய்தல், அல்லாஹ்வுடைய 'அஸ்மாஉல் ஹுஸ்னா'க்களைக் கொண்டு பிரார்த்தித்தல் போன்ற மார்க்கம் அனுமதிக்கின்ற வழிகளைக் கொண்டு அல்லாஹ்விடம் பிரார்த்தித்தலாகும். மரணித்தவர்களிடம் வேண்டுதல், அல்லாஹ்வைப் புறக்கணிப்பதாக அமையும். பின்வரும் அல்குர்ஆன் வசனத்துக்கமைவாக அது பெரிய ஷிர்க்கில் அடங்குகின்றது.

وَلَا تَدْعُ مِنْ دُوْنِ اللهِ مَا لَا يَنْفَعُكَ وَ لَا يَضُرُّكَ فَإِنْ فَعَلْتَ فَإِنَّكَ إِذًا مِّنَ الظّٰلِمِيْنَ

**"உமக்கு யாதொரு நன்மையும், தீமையும் செய்யச் சக்தியற்ற அல்லாஹ் அல்லாதவற்றை (ஆண்டவன் என) நீர் அழைக்க வேண்டாம். அவ்வாறு செய்தால் அச்சமயமே நீரும் அக்கிரமக்காரர்களில் ஒருவராவீர்" [அல்குர்ஆன்: 10:106]**

2. நபி ﷺ அவர்களுடைய மகிமையைக் கொண்டு பிரார்த்தித்தல். 'அல்லாஹ்வே! முஹம்மத் ﷺ அவர்களுடைய மகிமையைக் கொண்டு என்மீது கருணை காட்டுவாயாக!' என்று பிரார்த்திப்பது பித்அத்தாகும். ஏனென்றால் ஸஹாபாக்களில் எவரும் இவ்விதம் பிரார்த்தித்தது இல்லை.

உமர் ﷺ அவர்கள் மழை வேண்டி அல்லாஹ்விடம் பிரார்த்தித்த போது உயிருடனிருந்த அப்பாஸ் ﷺ அவர்களுக்குத் துஆக் கேட்குமாறு கூறி, அந்த துஆவைக் கொண்டு வஸீலாத் தேடினார்கள். நபியவர்களது மௌத்துக்குப் பின் அவர்களைக் கொண்டு வஸீலாத் தேடவில்லை.

நபியவர்களது மௌத்துக்கு முன்னால் அவர்களைக் கொண்டு வஸீலாத் தேடுவதற்கு அனுமதியிருந்தது போலவே, மௌத்துக்குப் பின்னும் இருக்கும் என்றிருந்தால், மனு-ஜின் வர்க்கங்களில் மிகமிக மேலானவரான நபி ﷺ அவர்களை விட்டுவிட்டு அப்பாஸ் ﷺ அவர்களைக் கொண்டு, உமர் ﷺ அவர்கள் துஆக் கேட்டிருக்க மாட்டார்கள்.

'எனது மகிமையைக் கொண்டு அல்லாஹ்விடம் வஸீலாத் தேடுங்கள்' என்று நபியவர்கள் சொன்னதாக சொல்லப்படும் ஹதீஸ் சரியானதன்று. பித்அத்தான இந்த வஸீலா சிலவேளை ஷிர்க்கின் பக்கம் கொண்டு செல்லும்.

ஷிர்க் ஏற்படுவது எவ்வாறெனில் நீதிபதியிடத்திலும், ஜனாதிபதி யிடத்திலும் செல்வதற்கு இடைத்தரகர் ஒருவர் தேவை என்பது போலவே அல்லாஹ்விடம் நெருங்குவதற்கும் ஒரு தரகர் தேவை என்று ஒருவன் நம்புவதாகும். இந்த உதாரணத்தில் படைத்தவனைப் படைக்கப்பட்டவனுக்கு ஒப்பாக்குவதன் மூலம் அவன் ஷிர்க் வைக்கிறான்.

'அல்லாஹ்விடத்தில் அவனல்லாதவனைக் கொண்டு உதவி தேடுவதை நான் கடுமையாக வெறுக்கிறேன்' என்று இமாம் அபூஹனீபா ﷺ அவர்கள் கூறியுள்ளார்கள்.

'யாரஸூலுல்லாஹ்! எனக்காக அல்லாஹ்விடம் துஆக் கேளுங்கள்' என்று நபியவர்களது மௌத்துக்குப் பின் கேட்பது அனுமதியற்றதாகும். ஏனென்றால் பின்வரும் நபிமொழிக்கு அமைவாக ஸஹாபாக்கள் அவ்விதம் துஆக் கேட்டதே இல்லை.

'மனிதன் மரணித்து விட்டால் (அவனால் செய்யப்பட்ட) அவனுடைய மூன்று செயல்களைத் தவிர மற்றவை அனைத்தும் தொடர்பு அறுந்து விடும்.

1. நிலையான தருமம்
2. பிரயோசனம் தரும் கல்வி
3. அவனுக்காகப் பிரார்த்திக்கும் ஒரு ஸாலிஹான பிள்ளை'.

**[ஆதாரம்: முஸ்லிம்]**

நபி ﷺ அவர்களது மௌத்துக்கு முன்னால், ஸஹாபாக்கள் தமக்காக பிரார்த்திக்குமாறு நபியவர்களிடம் வேண்டியுள்ளார்கள். அதே ஸஹாபாக்கள் மௌத்துக்குப் பின்னால் அவ்விதம் நபியவர்களிடம் வேண்டியதே இல்லை.



# உதவியை உறுதிப்படுத்துவதற்கான நிபந்தனைகள்

நபி ﷺ அவர்கள் சரித்திரத்தைப் படிக்கிறவன் பின்வரும் படித்தரங் களைக் கண்டுக் கொள்வான்.

1. **தௌஹீத்:** நபி ﷺ அவர்கள் தனது கூட்டத்தாரை இபாதத்திலும், துஆக் கேட்பதிலும், அல்லாஹ்வை ஒருமைப் படுத்துவதிலும், ஷிர்க்குக்கு எதிராகப் போராடுவதிலும் பதிமூன்று வருடங்களை மக்காவில் கழித்தார்கள். இந்த நம்பிக்கை தமது தோழார்களுடைய உள்ளங்களில் உறுதியாகப் பதிந்து விடும்வரை, நபியவர்கள் இப்போராட்டத்தை நடத்திக் கொண்டே இருந்தார்கள். இதனால் நபித்தோழர்கள் அல்லாஹ் அல்லாத எவருக்கும் பயப்படாத வீரமுள்ளவர்களாக மாறினர். இஸ்லாமிய அழைப்பாளர்கள் அல்லாஹ்வுடைய ரஸூலைப் பின்பற்றியவர்களாக ஆகுவதற்காகத் தமது பிரசாரத்தைத் தௌஹீதைக் கொண்டும், ஷிர்க்கை விட்டு மக்களை எச்சரிப்பது கொண்டுமே ஆரம்பிக்க வேண்டும்.

2. **சகோதரத்துவம்:** நபி ﷺ அவர்கள், இஸ்லாமிய சமுதாயம் தமக்குள் ஒருவருக்கொருவர் நேசிப்பவர்களாக இருக்கக் கூடியவர்களாக, அவர்களை அமைப்பதற்காக மக்காவிலிருந்து மதீனாவுக்கு ஹிஜ்ரத் செய்தார்கள்.

நபியவர்கள் மதினா சென்றதும், முதலாவதாக முஸ்லிம்கள் தமது இறைவனை வணங்குவதற்கு ஒன்று கூடுவதற்காக, ஒரு பள்ளிவாசலை நிறுவுவதைக்கொண்டே ஆரம்பித்தார்கள். முஸ்லிம்கள் தமது வாழ்க்கையை நெறிப்படுத்திக் கொள்வதற்காக ஒவ்வொரு நாளும் ஐவேளை பள்ளிவாசலில் ஒன்று கூடுவதற்கான ஏற்பாடு செய்யப்பட்டது.

மதினாவாசிகளான அன்ஸாரிகளும், தமது சொத்துக்களை விட்டுவந்த மக்காவாசிகளான முஹாஜிர்களுக்கும் இடையில் சகோதரத்துவத்தை ஏற்படுத்துவதில் நபி ﷺ அவர்கள் தீவிரமடைந்தார்கள். அன்ஸார்கள் தமது சொத்துக்கள் அனைத்தையும் முஹாஜிர்களுக்கு முன்னால் வைத்து, அவர்களது தேவைகளுக்கேற்றவாறு கொடுத்தார்கள்.

நபி ﷺ அவர்கள், மதினாவாசிகளில் 'அவுஸ்' 'கஸ்ரஜ்' என்ற இரு கோத்திரங்களை நீண்டகாலப் பகைவர்களாகக் கண்டு, அவர்களுக்கு மத்தியில் சமாதானத்தை ஏற்படுத்தி வைத்தார்கள். அவர்களது உள்ளங்களி லிருந்து வஞ்சகத்தையும், பகைமையையும் நீக்கி விட்டார்கள். அவர்களை ஈமானிலும், தௌஹீதிலும் ஒருவருக்கொருவர் நேசங்கொள்ளக்கூடிய சகோதரர்களாக ஆக்கி வைத்தார்கள். 'ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமுக்குச் சகோதரன்' என்பது இதற்குச் சான்றாய் அமைகின்றது.

3. **முன்னேற்பாடு செய்து கொள்ளல்:** பகைவர்களுக்கெதிரான யுத்த ஏற்பாடுகளைச் செய்து கொள்ளுமாறு குர்ஆன் கட்டளையிடுகின்றது.

وَاَعِدُّوْا لَهُمْ مَّا اسْتَطَعْتُمْ مِّنْ قُوَّةٍ وَّمِنْ رِّبَاطِ الْخَيْلِ

**“அவர்களை (எதிரிகளை) எதிர்ப்பதற்காக (ஆயுத) பலத்தையும், (திறமையான) போர்க் குதிரைகளையும் உங்களுக்குச் சாத்தியமான அளவு நீங்கள் (எந்நேரமும்) தயார்படுத்தி வையுங்கள்” [அல்குர்ஆன்: 8:60]**

நபி ﷺ அவர்கள் இவ்வசனத்துக்குப் பின்வருமாறு விளக்கம் அளித்துள்ளார்கள்.

'அறிந்து கொள்ளுங்கள்! நிச்சயமாக அம்பெய்யக் கற்று கொள்வதில் (எம்மைக் காத்துக் கொள்ளும்) பலமுண்டு' **[*ஆதாரம்: முஸ்லிம்*]**

முஸ்லிம்கள் ஒவ்வொருவரும் அவரவருடைய தகுதிக்கேற்றவாறு தற்காப்பு ஏற்பாட்டைச் செய்துக் கொள்வதும், ஏனையவர்களுக்குக் கற்றுக் கொடுப்பதும் வாஜிபாகும். துப்பாக்கி, பீரங்கி போன்ற ஆயுதங்களை

இயக்குவதற்கு முஸ்லிம்களுக்குக் கற்றுக் கொடுப்பது அவசியமாகும். பாடசாலை மாணவர்கள் இவ்விதமான பயிற்சிகளைக் கற்றுக்கொள்ள வேண்டிய இக்காலத்தில் கைப்பந்தாட்டம், உதைப்பந்தாட்டம், கிரிக்கெட் போன்ற விளையாட்டுகளுக்காக தமது நேரங்களை வீணாக்குகின்றனர்.

இஸ்லாம் மறைத்துக் கொள்ளுமாறு உத்தரவிடுகின்ற தமது உடலின் பகுதிகளை இவர்கள் வெளிப்படுத்தி ஆடை அணிகின்றனர். பேணிக் காத்துக் கொள்ளுமாறு அல்லாஹ் நமக்குக் கட்டளையிடுகின்ற தொழுகை களை எல்லாம் இவர்கள் விளையாட்டுக்காக வீணாக்கி விடுகின்றனர்.

4. ஏகத்துவ கொள்கையின்பால் நாங்கள் மீளுகின்றபோது ஒருவருக் கொருவர் நேசிக்கும் சகோதரர்களாக ஆகிவிடுகிறோம்; பகைவர் களுக்கு எதிராக ஆயுதங்களைப் பயன்படுத்துவதற்கு நாம் தயாராகி விடுவோம்.

நபி ﷺ அவர்களுக்கும், அவர்களது தோழர்களுக்கும் அல்லாஹ் வுடைய உதவி வந்தது போலவே, ஒரு காலத்தில் நமக்கும் உதவி கிட்டும். அல்லாஹ்வும் இதுபற்றி பின்வருமாறு கூறுகிறான்.

يَـٰٓأَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْٓا اِنْ تَـنْـصُرُوا اللّٰهَ يَنْصُرْكُمْ وَيُثَبِّتْ اَقْدَامَكُمْ

**“மூமின்களே! நீங்கள் அல்லாஹ்வுக்கு உதவி புரிந்தால், அவனும் உங்களுக்கு உதவிபுரிந்து, உங்களுடைய பாதங்களை ஸ்திரப்படுத்தி விடுவான்”**

**[அல்குர்ஆன்: 47:7]**

மேற்கூறப்பட்ட படித்தரங்கள் ஒவ்வொன்றும் ஒன்று மற்றொன்றுடன் தொடர்பற்றது என்று அர்த்தமல்ல. இப்படித்தரங்கள் ஒவ்வொன்றும் ஒன்று மற்றொன்றுடன் தொடர்புடையதாகவே இருக்கின்றது.



# ‘முஃமின்களுக்கு உதவி புரிதல் நம் கடமையாகும்’ – அல்குர்ஆன்: 30:47

அல்லாஹ் இந்த (அல்குர்ஆன்: 30: 47) வசனத்தில் முஃமின்களுக்கு உதவி செய்வதாகவும், அவர்களது பகைவர்களுக்குத் தோல்வியை ஏற்படுத்துவ தாகவும் உறுதிமொழி கூறுகின்றான். அல்லாஹ் தனது ரஸூலுக்கு பத்ரு, அஹ்ஸாப் போன்ற யுத்தங்களில் உதவி செய்துள்ளான். நபியவர்களது மௌத்துக்குப் பின்னால் அவர்களது தோழர்களுக்கும் உதவி செய் துள்ளான். எதிரிகள் தோல்விக்குமேல் தோல்வி கண்டார்கள்.

இஸ்லாம் பரவியது; பல நாடுகள் வெற்றிக் கொள்ளப்பட்டன; முஸ்லிம்கள் வெற்றிப் பெற்றார்கள். முஸ்லிம்களுக்குப் பல சோதனைகளும் துன்பங்களும் ஏற்பட்டாலும் முடிவு அவர்களுக்குச் சாதகமாகவே இருந்தது. கஷ்டத்திலும், துன்பத்திலும் தங்களது இறைவனாகிய அல்லாஹ்வை ஒருமைப்படுத்தி அவனுக்கு வணக்கம் செலுத்தி, அவனிடத்திலேயே துஆக் கேட்பவர்களாக இருந்தனர்.

நாம் ஓதுகின்ற அல்குர்ஆன் ‘பத்ரு’ யுத்தத்தின் போது முஃமின்கள் இருந்த நிலையையும், எண்ணிக்கையில் அவர்கள் குறைந்தவர்களாக இருந்து தங்களது இறைவனிடம் பிரார்த்தனை புரிந்ததையும் கூறிக் கொண்டிருக்கின்றது.

اِذْ تَسْتَغِيْثُوْنَ رَبَّكُمْ فَاسْتَجَابَ لَـكُمْ اَنِّىْ مُمِدُّكُمْ بِاَلْفٍ مِّنَ الْمَلٰٓٮِٕكَةِ مُرْدِفِيْنَ

**“(உங்களைப்) பாதுகாத்துக் கொள்ளுமாறு நீங்கள் உங்கள் இறைவனிடம் கோரியபோது, அணிஅணியாக (உங்களைப் பின்பற்றி வரக்கூடிய) ஆயிரம்**

**மலக்குகளைக் கொண்டு, நிச்சயமாக நான் உங்களுக்கு உதவி செய்வேன் என்று அவன் உங்களுக்குப் பதிலளித்தான்" [அல்குர்ஆன்: 8:9]**

அல்லாஹ் அவர்களுடைய துஆவை ஒப்புக்கொண்டு, அவர்களுடன் சேர்ந்து போராடி நிராகரிப்பவர்களுடைய தலைகளைத் துண்டிப்பதற்கு உதவியாக அவர்களிடத்தில் மலக்குகளை அனுப்பி வைத்தான். அதுபற்றி அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான்.

اِذْ يُوْحِىْ رَبُّكَ اِلَى الْمَلٰٓٮِٕكَةِ اَنِّىْ مَعَكُمْ فَثَبِّتُوا الَّذِيْنَ اٰمَنُوْا‌ ؕ سَاُلْقِىْ فِىْ قُلُوْبِ الَّذِيْنَ كَفَرُوا الرُّعْبَ فَاضْرِبُوْا فَوْقَ الْاَعْنَاقِ وَاضْرِبُوْا مِنْهُمْ كُلَّ بَنَانٍ ؕ

**"(நபியே!) உமது இறைவன் மலக்குகளை நோக்கி நிச்சயமாக நான் உங்களுடன் இருக்கிறேன். ஆகவே நீங்கள் முஃமின்களை உறுதிப் படுத்துங்கள். (என்று கட்டளையிட்டு) 'நிராகரிப்போரின் இருதயங்களில் நாம் திகிலை உண்டுபண்ணுவோம்' (என்று கூறி முஃமின்களை நோக்கி) 'நீங்கள் அவர்களுடைய பிடரிகளின் மேல் வெட்டுங்கள். கணுக்கணுவாகத் துண்டித்து விடுங்கள்' என்று அறிவித்ததை நினைத்துப் பார்ப்பீர்களாக!" [அல்குர்ஆன்: 8:12]**

ஏகத்துவவாதிகளான முஃமின்களுக்குப் பூரணமான உதவி கிடைத்தது. இதுபற்றிப் பின்வரும் வசனத்தில் அல்லாஹ் கூறுகிறான்.

وَلَقَدْ نَصَرَكُمُ اللّٰهُ بِبَدْرٍ وَّاَنْـتُمْ اَذِلَّةٌ ‌ۚ فَاتَّقُوا اللّٰهَ لَعَلَّكُمْ تَشْكُرُوْنَ

**"பத்ரில் (நடந்த யுத்தத்தில்) நீங்கள் (எதிரிகளைவிட ஆயுதத்திலும் தொகையிலும்) குறைந்தவர்களாக இருந்த சமயத்தில் நிச்சயமாக அல்லாஹ் உங்களுக்கு உதவி புரிந்தான். ஆகவே நீங்கள் நன்றி செலுத்தும் பொருட்டு, அல்லாஹ்வுக்குப் பயந்து (வழிபட்டு) நடங்கள்" [அல்குர்ஆன்: 3:123]**

பதிரின்போது நபி ﷺ அவர்களுடைய துஆ எவ்வாறிருந்தது? என்பது ஸஹீஹ் முஸ்லிமில் பின்வருமாறு பதிவாகியுள்ளது.

‘அல்லாஹ்வே! நீ எனக்கு வாக்களித்ததைத் தந்துவிடு. அல்லாஹ்வே! (என்னுடனிருக்கும்) இக்கூட்டத்தை நீ அழித்து விடுவாயென்றால், உன்னை வணங்கக்கூடிய எவரும் இப்பூமியில் இருக்க மாட்டார்கள்’

**[ஆதாரம்: முஸ்லிம்]**

இன்று இதற்கு மாறாக நாம் காண முடிகிறது. அதிகமான நாடுகளில், காஃபிர்களுக்கு முன்னால் முஸ்லிம்கள் தோல்வியடைகிறார்கள். இதன் காரணம்தான் என்ன? முஃமின்களைப் பொறுத்தமட்டில் அல்லாஹ் அவர்களுக்கு அளித்த வாக்குறுதியை நிறைவேற்றாமல் இருப்பானா? நிலைமை அவ்வாறில்லை. மேற்கூறப்பட்ட வசனத்தில் உள்ளபடி வெற்றி கிட்டக்கூடியவாறு இன்றைய முஃமின்களின் நிலை இருக்கின்றதா? யுத்தங்களில் ஈடுபடுபவர்களிடம் கேட்போம்.

1. நபி ﷺ அவர்கள், யுத்தத்துக்கு முன்னர் ஈமானைக் கொண்டும், தௌஹீதைக் கொண்டும் தனது பிரசாரத்தை மக்காவில் ஆரம்பித்தது போலவே இவர்களும் தம்மைத் தயார் செய்துக் கொண்டனரா?

وَاَعِدُّوْا لَهُمْ مَّا اسْتَطَعْتُمْ مِّنْ قُوَّةٍ وَّمِنْ رِّبَاطِ الْخَـيْلِ تُرْهِبُوْنَ

**2. “அவர்களை எதிர்ப்பதற்காக, உங்களுக்குச் சாத்தியமான அளவு (ஆயுத) பலத்தைத், போர் குதிரைகளையும் தயார்படுத்திக் கொள்ளுங்கள்”**

**[அல்குர்ஆன்: 8:60]**

என்று அல்லாஹ் கட்டளையிட்டதற்கிணங்க அவர்கள் தம்மைத் தயார் படுத்திக் கொண்டனரா? இவ்வசனத்துக்கு ‘யுத்தப்பயிற்சியை மேற் கொள்ளல்’ என்று நபி ﷺ அவர்கள் விளக்கம் அளித்துள்ளார்கள்.

3. யுத்தத்தின் போது தங்களது இறைவனை மட்டுமே அழைத்து துஆக் கேட்பதிலே, இவர்கள் அவனைத் தனிமைப் படுத்தினார்களா? அல்லது அவனல்லாதவர்களின் உதவியை நாடினார்களா? இவர்களோ அவனல்லாதவர்களின் உதவியை வேண்டி, அவர்களுடைய பாதுகாப்பி லேயே நம்பிக்கையும் வைத்தனர்.

அவர்கள், எவர்களுடைய பாதுகாப்பை நாடினார்களோ, அவர்கள் அல்லாஹ்வுடைய அடிமைகளாகவும், தமக்கே யாதொரு நன்மையோ தீமையோ செய்துகொள்ள முடியாதவர்களாகவும் இருக்கின்றனர். "தன் அடியாருக்கு (வேண்டிய உதவியைச் செய்ய) அல்லாஹ் ஒருவனே போதுமானவனல்லவா?" என்று குர்ஆன் கூறுவதற்கமைய, நபி ﷺ அவர்கள் அல்லாஹ்வின் உதவியை மட்டுமே நம்பி, அவனிடம் துஆக் கேட்டார்கள். இதனை அவர்கள் பின்பற்றாதிருக்கக் காரணமென்ன?

وَلَا تَنَازَعُوْا فَتَفْشَلُوْا وَتَذْهَبَ رِيْحُكُمْ

**4. "உங்களுக்குள் தர்க்கித்துக் கொள்ளாதீர்கள்; அவ்வாறாயின் நீங்கள் தைரியத்தை இழந்து, உங்கள் வலிமை குன்றிவிடும்" [அல்குர்ஆன்: 8:46]** என்று இவர்களுடைய இறைவன் இவர்களது அடையாளத்தைப் பற்றிக் கூறுவதற்கமைய, இறுதியாக இவர்கள் தமக்கிடையே நேசத்துடன் ஒன்று படுகின்றனரா?

وَكَانَ حَقًّا عَلَيْنَا نَصْرُ الْمُؤْمِنِيْنَ

**"முஃமின்களுக்கு உதவி செய்வது நம்மீது கடமையாக இருக்கின்றது" [அல்குர்ஆன்: 30:47]** என்று அல்லாஹ் கூறுவதற்கமைய, நீங்கள் உங்களது ஈமானை முறையாகச் சரிசெய்து கொள்வீர்களென்றால், உங்களுக்கு வாக்களிக்கப்பட்ட உதவி உங்களிடம் வந்தே தீரும்.



# பெரிய குஃப்ரும் அதன் வகைகளும்

'பெரிய குஃப்ர்' அதனைச் செய்கின்றவனை இஸ்லாத்திலிருந்து வெளியேற்றி விடுகின்றது. இதுதான் நம்பிக்கையின் அடிப்படையிலுள்ள குஃப்ராகும். (இறைநிராகரிப்பாகும்) இதன் வகைகள் அதிகமானவை.

1. **பொய்யாக்குவதால் ஏற்படும் குஃப்ர்:** இது குர்ஆனையும் ஹதீஸையும், அல்லது இவ்விரண்டில் சில பகுதிகளைப் பொய்யாகு வதாகும். இதுபற்றி குர்ஆன் பின்வருமாறு கூறுகிறது.

وَمَنْ اَظْلَمُ مِمَّنِ افْتَرٰى عَلَى اللهِ كَذِبًا اَوْ كَذَّبَ بِالْحَقِّ لَمَّا جَآءَهٗ اَلَيْسَ فِىْ جَهَنَّمَ مَثْوًى لِّلْكٰفِرِيْنَ

**"அல்லாஹ்வின் மீது கற்பனையாகப் பொய் கூறுபவனைவிட, அல்லது தன்னிடம் வந்த உண்மையைப் பொய்யாக்குபவனைவிட அக்கிரமக்காரன் யார்? (இத்தகைய) நிராகரிப்போரின் தங்குமிடம் நரகத்திலல்லவா இருக்கின்றது"**

**[அல்குர்ஆன்: 29:68]**

اَفَتُؤْمِنُوْنَ بِبَعْضِ الْكِتٰبِ وَتَكْفُرُوْنَ بِبَعْضٍ

**"நீங்கள் வேதத்தில் சில கட்டளைகளை விசுவாசித்துச் சில கட்டளைகளை நிராகரிக்கின்றீர்களா?" [அல்குர்ஆன்: 2:85]**

2. **உண்மையை ஒப்புக் கொண்டு வழிபடாமல் பெருமையடிப்பது கொண்டும், மாறுசெய்வது கொண்டும் ஏற்படும் குஃப்ர்:** இது ஷைத்தானுடைய குஃப்ரைப் போன்றதாகும். அல்குர்ஆன் இதுபற்றி பின்வருமாறு கூறுகின்றது.

وَاِذْ قُلْنَا لِلْمَلٰٓئِكَةِ اسْجُدُوْا لِاٰدَمَ فَسَجَدُوْٓا اِلَّآ اِبْلِيْسَؕ اَبٰى وَاسْتَكْبَرَ وَكَانَ مِنَ الْكٰفِرِيْنَ

“பின்னர் நாம் மலக்குகளை நோக்கி ‘ஆதமுக்கு நீங்கள் பணி(ந்து ‘ஸுஜூது’ செய்)யுங்கள் எனக் கூறியபோது, அவர்கள் (யாவரும்) ‘ஸுஜூது’ செய்தார்கள். இப்லீஸைத் தவிர. அவனோ பெருமைக் கொண்டு விலகி (நம்முடைய கட்டளையை) நிராகரிப்பவனாகி விட்டான்” [அல்குர்ஆன்: 2:34]

3. மறுமை நாளைக் கொண்டு சந்தேகப்படல், அதனை நிராகரித்தல், அதனை உண்மைப் படுத்தாதிருத்தல் போன்றவைகளைக் கொண்டு குஃப்ர் ஏற்படுத்தல்:

அல்குர்ஆன் இதுபற்றிப் பின்வருமாறு கூறுகிறது.

وَّمَاۤ اَظُنُّ السَّاعَةَ قَآٮِٕمَةً وَّلَٮِٕنْ رُّدِدْتُّ اِلٰى رَبِّىْ لَاَجِدَنَّ خَيْرًا مِّنْهَا مُنْقَلَبًا
قَالَ لَهٗ صَاحِبُهٗ وَهُوَ يُحَاوِرُهٗۤ اَكَفَرْتَ بِالَّذِىْ خَلَقَكَ مِنْ تُرَابٍ ثُمَّ مِنْ نُّطْفَةٍ ثُمَّ سَوّٰٮكَ رَجُلًا ؕ

“(மறுமையை நிராகரிக்கும் ஒருவன்) மறுமை ஏற்படும் என்று நான் நம்பவேயில்லை. ஒருக்கால் நான் என் இறைவனிடம் கொண்டுப் போகப்பட்டாலும், இங்கிருப்பதைவிட, அங்கு மேலானவனாக இருப்பதையே காண்பேன் என்று (தனது சினேகிதனை நோக்கிக்) கூறினான். அதற்கு அவனுடன் பேசிக் கொண்டிருந்த அவனுடைய சினேகிதன் அவனை நோக்கி ‘உன்னைப் படைத்தவனையே நீ நிராகரிக்கிறாயா? மண்ணிலிருந்து பின்னர் இந்திரியத்தி(ன் ஒரு துளியி)லிருந்து படைத்த அவன், பின்னர் ஒரு பூரண மனிதனாகவும் உன்னை அமைத்தான்”

[அல்குர்ஆன்: 18:36,37]

**4. புறக்கணிப்பதைக் கொண்டு குஃப்ர் ஏற்படுத்தல்:** இஸ்லாத்தின் அம்சங்களை நம்பாமல் அவற்றைப் புறக்கணித்தல். அல்குர்ஆன் இதுபற்றிப் பின்வருமாறு கூறுகிறது.

وَالَّذِيْنَ كَفَرُوْا عَمَّاۤ اُنْذِرُوْا مُعْرِضُوْنَ

**“எவர்கள் (அல்லாஹ்வை) நிராகரிக்கின்றார்களோ அவர்கள், தங்களுக்குப் பயமுறுத்தி எச்சரிக்கப்பட்டதைப் புறக்கணிக்கின்றனர்” [அல்குர்ஆன்: 46:3]**

**5. நயவஞ்சகத்தனமான குஃப்ர்:** இந்தப் பிரிவு நாவைக் கொண்டு இஸ்லாத்தை வெளிப்படுத்துவதும், உள்ளத்தாலும் செயல்களாலும் அதற்கு மாறாக நடப்பதுமாகும். அல்குர்ஆன் இதைக் குறித்து பின்வருமாறு கூறுகிறது.

ذٰلِكَ بِاَنَّهُمْ اٰمَنُوْا ثُمَّ كَفَرُوْا فَطُبِعَ عَلٰى قُلُوْبِهِمْ فَهُمْ لَا يَفْقَهُوْنَ

**“(இந்த நயவஞ்சகத்துக்குக்) காரணமாவது, இவர்கள் ஈமான் கொண்டு பின்னர் (அதனை) நிராகரித்து விட்டதுதான். ஆகவே அவர்களுடைய இருதயங்களில் முத்திரையிடப்பட்டு விட்டது. (எதையும்) அவர்கள் உணர்ந்து கொள்ள மாட்டார்கள்” [அல்குர்ஆன்: 63:3]**

وَمِنَ النَّاسِ مَنْ يَّقُوْلُ اٰمَنَّا بِاللّٰهِ وَبِالْيَوْمِ الْاٰخِرِ وَمَا هُمْ بِمُؤْمِنِيْنَ

**“‘அல்லாஹ்வையும் இறுதி நாளையும் விசுவாசங்கொண்டிருக்கிறோம்’ எனக் கூறுவோரும் மனிதரில் சிலருண்டு. ஆனால் (உண்மையில்) அவர்கள் விசுவாசம் கொண்டவர்கள் அல்லர்” [அல்குர்ஆன்: 2:8]**

**6. மறுப்பதைக் கொண்டு குஃப்ர் ஏற்படுத்தல்:** இந்தப்பிரிவு ஈமானின் கடமைகள், இஸ்லாத்தின் கடமைகள் போன்றவற்றிலுள்ள ஏதேனு மொன்றை மறுத்தலாகும். இது, தொழுகையைக் கடமை என்று ஏற்றுக் கொள்ளாமல் அதனை விட்டுவிடுவது போன்றதாகும். இப்படியானவன் காஃபிராவான். இவன் இஸ்லாத்தை விட்டு வெளியேறியனவா (முர்தத்தா)வான். நீதித் தீர்ப்பளிக்கிறவன் அல்லாஹ்வுடைய தீர்ப்பை மறுப்பதும் இவ்வாறுதான். இதுபற்றிப் பின்வருமாறு அல்லாஹ் கூறுகிறான்.

وَمَنْ لَّمْ يَحْكُمْ بِمَآ اَنْزَلَ اللّٰهُ فَاُولٰٓئِكَ هُمُ الْكٰفِرُوْنَ

**“எவர்கள் அல்லாஹ் அருளியவற்றைக் கொண்டு தீர்ப்பளிக்க வில்லையோ அவர்கள், நிச்சயமாக நிராகரிப்பவர்களே!” [அல்குர்ஆன்: 5:44]**

‘அல்லாஹ் அருளியதை மறுக்கிறவன் காஃபிராவான்’ என்று இப்னு அப்பாஸ் ﵄ அவர்கள் கூறுகிறார்கள்.



# சிறிய குஃப்ரும் அதன் வகைகளும்

இந்த வகை இதனைச் செய்பவனை இஸ்லாத்தை விட்டு வெளியேற்றி விடாது.

**1. (அல்லாஹ்வுடைய) அருட்கொடைகளை நிராகரித்தல்:** மூஸா ﵇ அவர்களுடைய கூட்டத்தாரை நோக்கி அல்லாஹ் கூறும் சில அம்சங்கள் இதற்கு ஆதாரமாய் அமைந்துள்ளன.

وَاِذْ تَاَذَّنَ رَبُّكُمْ لَٮِٕنْ شَكَرْتُمْ لَاَزِيْدَنَّـكُمْ وَلَٮِٕنْ كَفَرْتُمْ اِنَّ عَذَابِىْ لَشَدِيْدٌ

**“அன்றி உங்கள் இறைவன் (பனூ இஸ்ராயீல்களை நோக்கி இதற்காக) ‘நீங்கள் (எனக்கு) நன்றி செலுத்தினால் (நான் என்னுடைய அருளைப் பின்னும்) உங்களுக்கு அதிகப்படுத்துவேன்; நீங்கள் (என்னுடைய அருளுக்கு நன்றி செலுத்தாது) மாறு செய்தால் நிச்சயமாக என்னுடைய வேதனை மிகக் கொடியதாக இருக்கும்’ என்று அறிக்கையிட்டதையும் (நபியே!) நீர் (இவர்களுக்கு) நினைவூட்டும்”**

**[அல்குர்ஆன்: 14:7]**

**2. செயல் முறையில் குஃப்ர்:** குஃப்ருடைய பெயரைத் தாங்கியதாக இஸ்லாம் கூறும் ஒவ்வொரு பாவத்தையும் இது குறிக்கும். இதனைச் செய்கின்றவனிடத்தில் ஈமான் தரிபாடாக இருக்கும். பின்வரும் நபிமொழி இதற்கு ஆதாரமாக அமைந்துள்ளது.

‘விபசாரி விபசாரம் செய்கின்றபோது, அவன் மூஃமினல்லன்; மது அருந்துகின்றவன் மது அருந்துகின்ற போது அவனும் மூஃமினல்லன்’

[ஆதாரம்: *முஸ்லிம்*]

இந்தப்பிரிவு நம்பிக்கையின் அடிப்படையிலுள்ள குஃப்ருக்கு மாற்ற மானதாகும். இது, இதனைச் செய்கின்றவனை இஸ்லாத்தை விட்டு வெளியேற்றி விடாது.

**3. அல்லாஹ்வுடைய தீர்ப்பு இன்னது தான் என்பதை அறிந்து கொண்டே அதற்கு மாறாகத் தீர்ப்பளித்தல்:** இது பற்றி இப்னு அப்பாஸ் ﵄ அவர்கள் கூறுவது பின்வருமாறு அமைந்துள்ளது.

'அல்லாஹ், அல்லாதவனுடைய தீர்ப்பை எவன் அங்கீகரிக் கின்றானோ, அவன் அக்கிரம் செய்கின்றவனும் பாவியுமாவான்'. இப்னு ஜரீர் ﵀ அவர்களும் இதே கருத்தைக் கொண்டவர்களாவார்கள். 'இது தாழ்ந்த குஃப்ர்' என்று அதாஉ ﵀ அவர்கள் கூறுகிறார்கள்.



# தாகூத்துகளைத் தவிர்ந்து கொள்ளுங்கள்

**'தாகூத்'** என்றால், அல்லாஹ் அல்லாமல் வணங்கப்படக் கூடியவையும், அல்லாஹ்வுக்கும் அவனுடைய ரஸூலுக்கும் வழிபடாமல், வணக்கத்தாலும், வழிபாட்டாலும் பின்பற்றுவதாலும் வேறொருவரைக் கொண்டு திருப்தியடைவதும் ஆகும். அல்லாஹ்வுக்கு அடிபணியுமாறும், தாகூத்துகளை விட்டு விலகி விடுமாறும் தத்தமது கூட்டத்தாருக்குக் கட்டளையிடுமாறு ரஸூல்மார்களை அல்லாஹ் அனுப்பினான். இதுபற்றிப் பின்வருமாறு அல்லாஹ் கூறுகிறான்.

وَلَقَدْ بَعَثْنَا فِىْ كُلِّ اُمَّةٍ رَّسُوْلًا اَنِ اعْبُدُوا اللّٰهَ وَاجْتَنِبُوا الطَّاغُوْتَ‌ۚ

**"(உலகின் பல பாகங்களில் வசித்திருந்த) ஒவ்வொரு வகுப்பினருக்கும் நிச்சயமாக நாம் தூதரை அனுப்பியிருக்கிறோம். (அவர்கள் அம்மக்களை நோக்கி) 'அல்லாஹ் ஒருவனையே வணங்குங்கள். (வழிகெடுக்கும்) தாகூத்து(ஷைத்தான்)களை விட்டு விலகிக்கொள்ளுங்கள்' (என்று கூறிச் சென்றார்கள்.)" [அல்குர்ஆன்: 16:36]**

தாகூத்துகள் அதிகமாக இருக்கின்றனர். அவர்களில் முன்னனியில் இருப்பவர்கள் ஐவர்.

**1. அல்லாஹ் அல்லாதவர்களுக்கு அடிபணியுமாறு அழைப்பு விடுக்கும் ஷைத்தான்:**

இதுபற்றிக் குர்ஆன் பின்வருமாறு கூறுகின்றது.

اَلَمْ اَعْهَدْ اِلَيْكُمْ يٰبَنِىْۤ اٰدَمَ اَنْ لَّا تَعْبُدُوا الشَّيْطٰنَ‌ۚ اِنَّهٗ لَـكُمْ عَدُوٌّ مُّبِيْنٌ ۙ

“ஆதமுடைய மக்களே! நீங்கள் ஷைத்தானுக்கு வழிபடக் கூடாது; நிச்சயமாக அவன் உங்களுக்குப் பகிரங்க விரோதி என்று நான் உங்களிடம் உறுதிமொழி வாங்கவில்லையா?” [அல்குர்ஆன்: 36:60]

2. அல்லாஹ்வுடைய சட்டத்தை மாற்றுகின்ற அக்கிரமக்கார நீதிபதி:

இவன் இஸ்லாத்துக்கு மாறான சட்டமொன்றை ஏற்படுத்து கின்றவனைப் போலாவான். அல்லாஹ் அங்கீகரிக்காதவற்றை மார்க்கமாக்கக் கூடிய இணைவைப்பவர்களை மறுத்து பின்வருமாறு அல்லாஹ் கூறுகிறான்.

اَمْ لَهُمْ شُرَكٰٓؤُا شَرَعُوْا لَهُمْ مِّنَ الدِّيْنِ مَا لَمْ يَأْذَنْۢ بِهِ اللّٰهُ

“அல்லாஹ் அனுமதிக்காத எதனையும் அவர்களுக்கு மார்க்கமாக்கி வைக்கக்கூடிய இணை(தெய்வங்)களும் அவர்களுக்கு இருக்கின்றனவா?”

[அல்குர்ஆன்: 42:21]

3. அல்லாஹ் அருளாததைக் கொண்டு தீர்ப்பளிக்கும் நீதிபதி:

‘அல்லாஹ் அருளிய சட்டம் பொருத்தமற்றது’ என்று நம்புதல், அல்லது அவனுடைய சட்டமல்லாததைக் கொண்டு தீர்ப்பளிப்பதை ஆகுமாக்குதல் போன்ற செயல்களையே இவன் தனது தொழிலாகக் கொள்வான். இதுபற்றிக் குர்ஆன் பின்வருமாறு கூறுகிறது.

وَمَنْ لَّمْ يَحْكُمْ بِمَآ اَنْزَلَ اللّٰهُ فَاُولٰٓٮِٕكَ هُمُ الْكٰفِرُوْنَ

“எவர்கள் அல்லாஹ் அருளியதைக் கொண்டு தீர்ப்பளிக்க வில்லையோ அவர்கள் நிச்சயமாகக் காஃபிர் (நிராகரிப்பவர்)களே!” [அல்குர்ஆன்: 5:44]

4. அல்லாஹ் அல்லாதவர்களுக்கும் மறைவானவற்றை அறியும் ஆற்றலுண்டு என்று கூறுதல்:

இதுபற்றிக் குர்ஆன் கூறுவதாவது:

قُلْ لَّا يَعْلَمُ مَنْ فِى السَّمٰوٰتِ وَالْاَرْضِ الْغَيْبَ اِلَّا اللّٰهُ

"நீர் கூறும்: வானங்களிலோ, பூமியிலோ மறைந்திருப்பவற்றை அல்லாஹ்வைத் தவிர மற்றெவரும் அறியமாட்டார்" [அல்குர்ஆன்: 27:65]

**5. அல்லாஹ் அல்லாத ஒருவனுக்கு மனிதர்கள் அடிபணிந்து, அவனிடம் தமது தேவைகளை வேண்டுதலும், அவர்களின் வழிபாட்டை (வணங்கப்பட்ட) அவன் திருப்தியாக ஏற்றுக் கொள்வதுமாகும்:**

இதுபற்றிக் குர்ஆன் கூறுவதாவது:

وَمَنْ يَّقُلْ مِنْهُمْ اِنِّىْٓ اِلٰـهٌ مِّنْ دُوْنِهٖ فَذٰلِكَ نَجْزِيْهِ جَهَـنَّمَ‌ؕ كَذٰلِكَ نَجْزِى الظّٰلِمِيْنَ

"அவர்களில் எவனாவது 'அல்லாஹ்வையன்றி நிச்சயமாக நானும் ஓர் ஆண்டவன் தான்' என்று கூறினால் அவனுக்கு நரகத்தையே நாம் கூலியாக்குவோம். அக்கிரமக்காரர்களுக்கு (அவர்கள் எவராயினும்) இவ்வாறே நாம் கூலி கொடுப்போம்" [அல்குர்ஆன்: 21:29]

அறிந்துகொள்! ஒரு முஃமின் தனது ஈமானில் உறுதியாக இருப்பதற்காக தாகூத்துகளை நிராகரிப்பது அவன் மீது கடமையாகும். குர்ஆன் இதுபற்றிப் பின்வருமாறு கூறுகின்றது.

فَمَنْ يَّكْفُرْ بِالطَّاغُوْتِ وَيُؤْمِنْۢ بِاللّٰهِ فَقَدِ اسْتَمْسَكَ بِالْعُرْوَةِ الْوُثْقٰى
لَا انْفِصَامَ لَهَا‌ ؕ وَاللّٰهُ سَمِيْعٌ عَلِيْمٌ

"எவன் ஷைத்தானை நிராகரித்து விட்டு, அல்லாஹ்வை விசுவாசிக்கிறானோ, அவன் நிச்சயமாக அறுபடாத பலமானதொரு கயிற்றைப் பற்றிப் பிடித்துக் கொண்டான். அல்லாஹ் செவியுறுவோனும் அறிவோனுமாக இருக்கின்றான்" [அல்குர்ஆன்: 2:256]

அல்லாஹ் அல்லாதவர்களுக்கு அடிபணிவதிலிருந்து முற்றாக நீங்கி, அல்லாஹ்வுக்கு அடிபணிவதால் மட்டுமே சரியான பயனை அடைய

முடியும் என்பதை இவ்வசனம் (2: 256) உணர்த்திற்று. பின்வரும் நபிமொழியும் இதுபற்றிக் கூறுகின்றது.

'எவனொருவன் 'லாஇலாஹ இல்லல்லாஹ்' என்று கூறி அல்லாஹ் அல்லாத வணங்கப்படக் கூடியவற்றை நிராகரிக்கின்றானோ, அவனுடைய பொருளும், அவனுடைய இரத்தமும் (நீதமின்றி ஓட்டப்படுவது) ஹறாமாகிவிடும்' **[*ஆதாரம்: முஸ்லிம்*]**



# பெரிய 'நிபாக்' (நயவஞ்சகத்தனம்)

பெரிய நிபாக் (நயவஞ்சகத்தனம்) என்றால் நாவினால் இஸ்லாமிய நம்பிக்கையை வெளியாக்குவதும், உள்ளத்தினாலும் உறுப்புகளினாலும் 'குஃப்ரை' நம்புவதுமாகும். இது பலவகைப்படும்.

1. நபி ﷺ அவர்களைப் பொய்யாக்குதல் அல்லது அவர்கள் கொண்டு வந்தவற்றில் சிலவற்றைப் பொய்யாக்குதல்.

2. நபி ﷺ அவர்கள் மீது கோபம் கொள்ளுதல் அல்லது அவர்கள் கொண்டுவந்ததில் சிலவற்றின் மீது வெறுப்படைதல்.

3. இஸ்லாம் வீழ்ச்சியடைவதால் மகிழ்ச்சியடைதல் அல்லது இஸ்லாத் திற்கு ஏற்படும் வெற்றியை வெறுத்தல். நிபாக் செய்கின்றவனுக்குரிய தண்டனை குஃப்ர் செய்கின்றவனுக்குரிய தண்டனையை விடக் கொடியதாகும். அல்லாஹ் இதுபற்றிப் பின்வருமாறு கூறுகிறான்.

اِنَّ الْمُنٰفِقِيْنَ فِى الدَّرْكِ الْاَسْفَلِ مِنَ النَّارِ

**"நிச்சயமாக 'முனாபிக்'கள் நரகத்தின் கீழ்பாகத்தில்தான் இருப்பார்கள்"**

**[அல்குர்ஆன்: 4:145]**

இதனாலதான் அல்லாஹ், ஸூரதுல் பகறாவின் ஆரம்பத்தில் காஃபிர்களை இரண்டு வசனங்களைக் கொண்டும்; 'முனாபிக்'களைப் பதின்மூன்று வசனங்களைக் கொண்டும் (படுமோசமாக)வர்ணித்துள்ளான்.

ஸூஃபிகளாக இருக்கும் முஸ்லிம்களைக் காண்கிறோம். அவர்கள் தொழுகிறார்கள்; நோன்பு நோற்கிறார்கள். ஆனால் அவர்கள் ஏற்படுத்தும் அபாயம் என்னவெனில், முஸ்லிம்களுடைய அடிப்படைக் கொள்கைகளை

யெல்லாம் கெடுத்து விடுகிறார்கள். பெரிய ஷிர்க்கான அல்லாஹ் அல்லாதவர்களிடம் துஆக் கேட்பதை ஆகுமாக்குகிறார்கள். 'அல்லாஹ் எல்லா இடங்களிலும் இருக்கிறான்' என்று நம்புகிறார்கள். 'அல்லாஹ் அர்ஷில் அமைந்துள்ளான்' என்று குர்ஆனிலும் ஹதீஸிலும் கூறப் பட்டுள்ளதை மறுக்கிறார்கள்.



# சிறிய ‘நிபாக்’

இது செயல்மூலம் ஏற்படுகின்றது. பின்வருமாறு நபி ﷺ அவர்கள் கூறியுள்ளது இதற்கு ஆதாரமாய் அமைந்துள்ளது.

‘முனாபிக்குடைய அடையாளம் மூன்று.

1. பேசினால் பொய்யுரைப்பான்
2. வாக்களித்தால் மாறு செய்வான்
3. நம்பினால் மோசடி செய்வான்’ **[ஆதாரம்: புகாரி, முஸ்லிம்]**

‘எவனிடம் நான்கு அம்சங்கள் உண்டோ, அவன் பூரணமான ஒரு முனாபிக் ஆவான். எவனிடம் அவற்றில் ஒருபகுதி உண்டோ, அவன் அதனை விட்டுவிடும்வரை அவனிடத்தில் நயவஞ்சகத்தனத்தின் ஒரு பகுதி இருந்துகொண்டே இருக்கின்றது.

1. பேசினால் பொய்யுரைப்பான்.
2. வாக்களித்தால் மாறு செய்வான்.
3. உடன்படிக்கை செய்தால் முறித்து விடுவான்.
4. வழக்காடினால் வம்பு செய்வான்’ **[ஆதாரம்: புகாரி, முஸ்லிம்]**



# ஈமானுடைய கிளைகளும், குஃப்ருடைய கிளைகளும்

1. சொல், செயல், விசுவாசம் என்று ஈமானுக்கு மூன்று கிளைகள் உண்டு. ஈமானென்றால் நாவினால் மொழிந்து, உள்ளத்தினால் உறுதி கொண்டு, உறுப்புகளினால் செயல்படுத்துவதாகும்.

நாவினால் மொழிவதென்றால் இஸ்லாத்தின் கலிமாவான 'லாஇலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் ரஸூலுல்லாஹ்' என்ற வாக்கியத்தை மொழி வதாகும். உள்ளத்தின் செயல்பாடென்றால் அதன் எண்ணம் அதனைத் தூய்மைப்படுத்தல் என்றும், உறுப்புகளைக் கொண்டு செயல்படுத்தல் என்றும் இருவகைப்படும்.

ஒருவனிடமிருந்து இம்மூன்று வகையும் நீங்கிவிட்டால், அவனிட மிருந்து இஸ்லாம் பூரணமாகவே நீங்கிவிடும். உள்ளத்தால் உண்மைப் படுத்தும் பகுதி அவனிடமில்லை என்றால் மீதமுள்ள இரண்டு கிளைகளாலும் எந்தவிதப் பயனுமிராது.

2. செயல்பாட்டினால் 'குஃப்ர்' என்றும், மறுப்பதினால் 'குஃப்ர்' என்றும் 'குஃப்ர்' இருவகைப்படும். மறுத்தல் என்பது எல்லாவகையிலும் ஈமானுக்கெதிராகவே இருக்கும். செயல்பாட்டைக் கொண்டு ஏற்படும் குஃப்ர், ஈமானுக்கு முரண்பட்டதென்றும், முரண்படாததென்றும் இருவகைப் படும். சிலைக்கு ஸுஜூது செய்தல், குர்ஆனை இழிவுபடுத்தல், நபிமார்களைத் திட்டுதல், மார்க்கத்தைப் பரிகசித்தல் போன்றவை ஈமானுக்கு முரண்படுவதாகும். அல்லாஹ் அருளாததைக்கொண்டு தீர்ப்பளித்தல், அலட்சியமாகத் தொழுகையை விடுதல் போன்றவை ஈமானுக்கு

முரண்படாத செயல்ரீதியான குஃப்ராகும். குஃப்ரை வருத்தக்கூடிய செயல் ரீதியான குஃப்ருக்கு ஓர் உதாரணம் பின்வரும் நபிமொழியாகும். 'ஒரு முஸ்லிமைத் திட்டுவது பாவமாகும். அவனைக் கொலை செய்வது குஃப்ராகும்' **[ஆதாரம்: *புகாரி*]**

(நடைமுறைப்படுத்த வேண்டிய இஸ்லாமிய நடைமுறைகளை செயல் படுத்தாமலிருக்கும்) செயல்முறையான குஃப்ர் எவரையும் மார்க்கத்தை விட்டு வெளியாக்கி விடாது. அல்லாஹ்வும் அவனுடைய ரஸூலும் மார்க்கமாக்கிய செயல்முறையான கடமைகளைச் செய்யாமல் ஈமானுடன் இருக்கும் நிலையையே இது குறிக்கும்.

3. ஒன்றுக்கொன்று முரண்பட்ட ஈமான், குஃப்ர், ஷிர்க், தௌஹீத், இறையச்சம், பாவம் செய்தல், நயவஞ்சகத்தனம், இறைவிசுவாசம் போன்றவை சிலவேளை மனிதனிடத்தில் ஒன்றுசேரும். ஒருவனை முஃமின் என்று சொல்வதற்கு ஈமானின் கிளைகளில் ஒருகிளை இருந்தால் போதாது. அவன் ஈமானுடன் இருப்பதாகச் சொல்லிக் கொண்டாலும் சரியே.

4. நபி ﷺ அவர்களுடைய பின்வரும் சொல்லுக்கமைவாக ஷிர்க்கும் குஃப்ரும் பொதுவான நிலையில் கணிக்கப்படும்.

'எங்களுக்கும் (முஸ்லிமல்லாத) அவர்களுக்கும் இடையிலுள்ள உடன்படிக்கை தொழுகையாகும். எவன் அதனை விடுகிறானோ அவன் காஃபிராவான்' **[ஆதாரம்: *அஹ்மத் (ஸஹீஹ்)*]**

செயல்ரீதியான ஈமானுக்கு செயல்ரீதியான குஃப்ர் எதிரானதாகும். நம்பிக்கை ரீதியான ஈமானுக்கு நம்பிக்கை ரீதியான குஃப்ர் எதிரானதாகும்.



# ஈமானுடைய கிளைகளின் வகைகள்!

'ஈமான் என்பது அறுபதுக்கும் எழுபதுக்கும் இடைப்பட்ட கிளைகள் கொண்டதாகும். அவற்றில் மிக உயர்வானது 'லாஇலாஹ இல்லல்லாஹ்' என்று சொல்லுவதாகும். மிகத்தாழ்ந்தது பாதையில் (பிறருக்குத்) தீங்கு ஏற்படுத்தக் கூடியதை அகற்றி விடுவதாகும்' என நபி ﷺ அவர்கள் கூறினார்கள். **[*ஆதாரம்: முஸ்லிம்*]**

இப்னு ஹிப்பான் ﵀ அவர்கள் சொன்னதை இப்னு ஹஜர் அஸ்கலானி ﵀ அவர்கள் பின்வருமாறு பத்ஹுல் பாரியில் பதிவு செய்துள்ளார்கள்.

'ஈமானின் இந்தக் கிளைகளெல்லாம் உள்ளத்தின் செயல்கள், நாவின் செயல்கள், உடலின் செயல்கள் என்று பல பிரிவுகள் கொண்டதாகும்'.

**1. உள்ளத்தின் செயல்கள் நம்பிக்கைகள், எண்ணங்கள் போன்றவைகளாகும். அவை இருபத்துநான்கு பிரிவுகளைக் கொண்டதாகும்.**

**அல்லாஹ்வைக்கொண்டு ஈமான் கொள்ளுதல்:** அல்லாஹ்வை அவனுடைய 'தாத்' (சுயதன்மை)கள் ஸிபாத் (இறைமையின் சிறப்பியல்பு) கள் ஆகியவைகளைக் கொண்டு ஒருமைப்படுத்துவது கொண்டு நம்பிக்கை கொள்வதாகும். இதுபற்றி அல்குர்ஆன் பின்வருமாறு கூறுகின்றது.

لَيْسَ كَمِثْلِهٖ شَىْءٌ‌ۚ وَهُوَ السَّمِيْعُ الْبَصِيْرُ

**"அவனுக்கு ஒப்பானது ஒன்றுமில்லை. அவன் (யாவற்றையும்) செவியுறுவோனாகவும், உற்று நோக்கினவனாகவும் இருக்கின்றான்"**

[அல்குர்ஆன்: 42:11]

அல்லாஹ் அல்லாத அனைத்தும் அவனால் படைக்கப்பட்ட புதியவை என நம்புவதும் ஈமானில் அடங்குவதாகும். அவனுடைய மலக்குகள், அவனால் அருளப்பட்ட வேதங்கள், அவற்றைப் போதித்த அவனுடைய ரஸுல்மார்கள் 'களா, கத்ரு' நன்மை தீமை ஆகியவற்றின் முடிவு அல்லாஹ்விடமே உண்டு என்பனவற்றை நம்புவதும் ஈமானாகும்.

கப்றில் விசாரணை, அதிலுள்ள சுகம், அதிலுள்ள தண்டனை, மறுமையில் எழுப்புதல், அனைவரையும் ஓரிடத்தில் ஒன்று சேர்த்தல், விசாரணைச் செய்தல், (நன்மை தீமைகளை எடைபோடும்) மீஸான் (தராசு), ஸிராதுல் முஸ்தகீம், சுவர்க்கம், நரகம், அல்லாஹ்வுடைய நேசம், அவனுக்காக விருப்பம் கொள்ளல், அவனுக்காகக் கோபம் கொள்ளல், நபி ﷺ அவர்கள் மீது நேசம் கொள்ளல், அவர்களை மகிமைப் படுத்துவதாக நம்பிக்கை கொள்ளல் ஆகியவை அனைத்தும் ஈமானில் அடங்கும்.

மேலும், நபி ﷺ அவர்கள் மீது ஸலவாத் சொல்லுதல், அவர்களுடைய ஸுன்னாவைப் பின்பற்றல், இக்லாஸு (உளத்தூய்மையு) னிருத்தல் போன்றவைகளும் ஈமானில் அடங்கும்.

முகஸ்துதி, நயவஞ்சகத்தனம், ஆகியவற்றை விடுதல், தௌபாச் செய்தல், (அல்லாஹ்வுக்குப்) பயப்படுதல், (அவனுடைய நற்கூலியை) ஆதரவு வைத்தல், (அவனுடைய அருட்கொடைகளுக்கு) நன்றி செலுத்தல், (நேர்ச்சைகளை) நிறைவேற்றல், பொறுமையாய் இருத்தல், 'கழாகத்ரைத்' திருப்தியாக ஏற்றுக்கொள்ளல், (அல்லாஹ்விடத்தில்) 'தவக்குல்' வைத்தல் (பாரம்சாட்டுதல்) பணிவுடன் நடந்து கொள்ளல் ஆகியவையும் ஈமானில் அடங்குவனவாகும்.

முதியவர்களுக்கு மரியாதை செய்தல், சிறியவர்கள் மீது அனபு காட்டல், தற்பெருமையை விடுதல், பொறாமை, வஞ்சகம், கோபம் போன்றவற்றை விடுதல் ஆகியனவும் ஈமானில் அடங்கும்.

### 2. நாவின் செயல்கள் ஏழுவகைகளை உள்ளடக்குகின்றன.

அல்லாஹ்வைத்தவிர வேறெந்த நாயனுமில்லை; முஹம்மத் ﷺ அவர்கள் அல்லாஹ்வின் ரஸூலாவார்கள் எனறு சான்றுகூறி நம்புவது கொண்டு தௌஹீதுக் கலிமாவை மொழிதல், குர்ஆனை ஓதுதல், கல்வி கற்றல், (அதனைப் பிறருக்குக்) கற்பித்தல், துஆக் கேட்டல், திக்ரு செய்தல், இஸ்திஃபார் செய்தல் (பிழை பொறுக்கத்தேடல்) தஸ்பீஹ் செய்தல், வீணான பேச்சுகளை விட்டுவிடல் ஆகியவை நாவின் செயல்களாக அமைகின்றன.

### 3. உடலின் செயல்கள் முப்பதெட்டு வகைப்படும்.

**I.** இவற்றில் முதற்தரமானவை பதினைந்து. சுத்தமாயிருத்தல், உணவளித்தல் விருந்தினரை உபசரித்தல், பர்ளாகவும், நபிலாகவும் நோன்பு நோற்றல், இஃதிகாப் இருத்தல், லைலத்துல்கத்ரை அடைந்து கொள்ள முயற்சித்தல், ஹஜ், உம்ரா செய்தல், தவாப் செய்தல், மார்க்கத்துக்காக ஹிஜ்ரத் செய்தல், நேர்ச்சைகளை நிறைவேற்றல், தேவை ஏற்படும்போது அல்லாஹ்வைக் கொண்டு சத்தியஞ் செய்தல், குற்றப் பரிகாரங்களை நிறைவேற்றல். (உதாரணத்துக்கு சத்தியத்தை முறிக்கின்ற போதும், ரமலானில் நோன்பிருக்கும்போது மனைவியுடன் உடலுறவு கொண்டாலும் குற்றப்பரிகாரமாக மார்க்கம் விதித்ததை நிறைவேற்றல்).

**II.** வழிபாட்டுடன் தொடர்புடையவை ஆறு வகைப்படும். திருமணத்தின் மூலம் கற்பை காத்துக் கொள்ளல், உறவினர்களின் கடமைகளைச் செய்தல், பெற்றோருக்குப் பணிவிடை செய்தல், அவர்க ளுக்கு நோவினை செய்யாதிருத்தல், இஸ்லாமிய வழியில் பிள்ளைகளை வளர்த்தல், உறவுமுறையைப் பேணி நடத்தல், அல்லாஹ்வுக்கு மாறு

செய்யாதிருக்கும் காலமெல்லாம் தலைவர்களுக்கு வழிபடல், அடிமை, ஊழியர் ஆகியோருடன் இரக்கமாக நடந்து கொள்ளல்.

**III.** பொதுப்படையானவை பதினேழாகும். நிர்வாகத்தை நீதியாக நடத்துதல், இஸ்லாமிய ஜமாஅத்துடன் சேர்ந்து கொள்ளல், இஸ்லாமிய அமைப்பிலுள்ள நிர்வாகிகளுக்கு வழிபடல், மனிதர்களுக்கிடையில் சமாதானம் செய்து வைத்தல், காரிஜிய்யாக்கள், கொடுமைக்காரர்கள் போன்றவர்களுக்கு எதிராக போராடுதல், நன்மை, தக்வா ஆகியவற்றின் மீது ஒன்றுபடல், நன்மையைக் கொண்டு ஏவுதல், தீமையை விட்டுத் தடுத்தல், இஸ்லாமிய அமைப்பின் கீழ் தண்டனைகளை நிறைவேற்றல், ஜிஹாது செய்தல், ஐக்கியமாக இருத்தல், அமானிதத்தைப் பாதுகாத்தல், அண்டைவீட்டாருக்கு உபகாரம் செய்தல், நல்ல காரியங்களைச் செய்தல், ஹலாலான வழியில் பணம், பொருள் சேமித்தல், முறையாக அதனைச் செலவு செய்தல், வீண் விரயம் செய்யாதிருத்தல், ஸலாம் சொன்னவருக்குப் பதில் ஸலாம் சொல்லல், தும்மியவர் 'அல்ஹம்துலில்லாஹ்' என்று சொன்னால் 'யர்ஹமுகல்லாஹ்' (அல்லாஹ் உமக்கு அருள் புரிவானாக!) என்று பதில் சொல்லல், மனிதர்களுக்கு தீங்கு ஏற்படக்கூடியவற்றைத் தடுத்து விடல், வீணான பொழுதுபோக்கை விட்டு விடல், பாதையில் தீங்கு ஏற்படுத்தக் கூடியவற்றை நீக்கிவிடல்.

மேற்கூறப்பட்ட ஹதீஸில், ஈமானின் படித்தரங்களில் **'லாஇலாஹ இில்லல்லாஹ்'** என்ற கலிமாவே மிக உயர்வானதும், மிகச் சிறப்பானது மாகும் என்று கூறப்பட்டுள்ளது. இஸ்லாமியப் பிரசாரப்பணி செய்வோர் உயர்வானதிலிருந்தே தமது பிரசாரத்தை ஆரம்பித்துப் பின்னர் தான் படிப்படியாகச் செய்யவேண்டும்.

கட்டிடம் கட்டுவதற்கு முன்னால் அஸ்திவாரமிட வேண்டும். மிக அவசியமானதையே முதலில் செய்ய வேண்டும். ஏனென்றால் தௌஹீதுக் கலிமாதான் அரபிகளையும் அஜமிகளையும் ஒன்றுபடுத்தி அவர்களுக்

கிடையில் இஸ்லாமிய ஆட்சியையும், தௌஹீதுடைய ஆட்சியையும் நிறுவியது.



# துன்பம் ஏற்படுவதற்கான காரணங்களும் அவற்றை நீக்குவதற்கான வழிகளும்

துன்பங்கள் ஏற்படுவது பற்றியும் அவற்றை அடியார்களிடமிருந்து அல்லாஹ் நீக்குவது பற்றியும் அல்குர்ஆன் பின்வருமாறு கூறுகின்றது.

ذٰلِكَ بِاَنَّ اللّٰهَ لَمْ يَكُ مُغَيِّرًا نِّـعْمَةً اَنْعَمَهَا عَلٰى قَوْمٍ حَتّٰى يُغَيِّرُوْا مَا بِاَنْفُسِهِمْۙ

“எந்த மக்களும் தங்கள் நிலைமையை மாற்றிக் கொள்ளாத வரையில் நிச்சயமாக அல்லாஹ்வும் அவர்களுக்குப் புரிந்த அருளை மாற்றி விடுவதில்லை” [அல்குர்ஆன்: 8:53]

وَمَاۤ اَصَابَكُمْ مِّنْ مُّصِيْبَةٍ فَبِمَا كَسَبَتْ اَيْدِيْكُمْ وَيَعْفُوْا عَنْ كَثِيْر

“எந்த தீங்கும் உங்களை வந்தடைந்ததெல்லாம் உங்கள் கைகள் தேடிக்கொண்ட (தீ)வினையின் காரணமாகவே தான். ஆயினும் (அவற்றில்) அநேகமானவற்றை அவன் மன்னித்து விடுகிறான்” [அல்குர்ஆன்: 42:30]

ظَهَرَ الْفَسَادُ فِى الْبَرِّ وَالْبَحْرِ بِمَا كَسَبَتْ اَيْدِى النَّاسِ لِيُذِيْقَهُمْ بَعْضَ الَّذِىْ عَمِلُوْا لَعَلَّهُمْ يَرْجِعُوْنَ

“மனிதர்களின் கைகள் தேடிக்கொண்ட (தீ)வினையின் காரணமாகக் கடலிலும் தரையிலும் தீமைகள் தோன்றி விட்டன. (அவற்றிலிருந்து) அவர்கள் விலகிக் கொள்ளும் பொருட்டு, அவர்களின் (தீ)வினைகளில் சிலவற்றை, அவர்கள் (இம்மையிலும்) சுகிக்கும்படி அவன் (அல்லாஹ் செய்கிறான்” [அல்குர்ஆன்: 30:41]

وَضَرَبَ اللّٰهُ مَثَلًا قَرْيَةً كَانَتْ اٰمِنَةً مُّطْمَٮِٕنَّةً يَّاْتِيْهَا رِزْقُهَا رَغَدًا مِّنْ كُلِّ مَكَانٍ فَكَفَرَتْ بِاَنْعُمِ اللّٰهِ فَاَذَاقَهَا اللّٰهُ لِبَاسَ الْجُوْعِ وَالْخَوْفِ بِمَا كَانُوْا يَصْنَعُوْنَ

**“ஓர் ஊரை, அல்லாஹ் உதாரணமாகக் கூறுகிறான். அவ்வூர் (மிக்க செழிப்பாகவும்) அமைதியுடனும் அச்சமற்றும் இருந்தது. அதற்கு வேண்டிய பொருள்கள் யாவும் ஒவ்வொரு திசையிலிருந்தும் தடையின்றி வந்து கொண்டிருந்தன. இந்நிலையில் (அவ்வூர்வாசிகள் அல்லாஹ்வை நிராகரித்து) அல்லாஹ்வுடைய அருட்கொடைகளுக்கு(ம் நன்றி செலுத்தாமல்) மாறு செய்தனர். ஆகவே அவர்கள் செய்து கொண்டிருந்த (தீய) செயல்களின் காரணமாக அல்லாஹ் பசியையும் பயத்தையும் அவர்களுக்கு ஆடையாக (அணிவித்து, அவர்கள் அதனைச்) சுகிக்கும்படிச் செய்தான்” [அல்குர்ஆன்: 16:112]**

எந்த ஒரு கூட்டமும், அது செய்த தீவினையின் காரணமாகவே யன்றி அல்லாஹ் அதற்குச் சோதனையை இறக்கவில்லை’ என்று மேற்காட்டிய வசனங்கள் அனைத்தும் தெளிவுப்படுத்திக் காட்டுகின்றன. குறிப்பாக **தௌஹீதைப் புறக்கணித்து ஷிர்க்கில் ஈடுபட்டதினாலேயே அது ஏற்பட்டது.** முற்றாக ஷிர்க்கிலிருந்து நீங்கி, தௌஹீதின் பால் மீண்டு, இஸ்லாமிய அமைப்பை ஏற்றுக் கொண்டாலன்றி அந்தச் சோதனை நீங்காது. இணைவைத்தவர்களின் நிலையையும், துன்பத்தின் போது அவர்கள் அல்லாஹ்வை மட்டுமே அழைத்துப் பிரார்த்தித்ததையும், அதிலிருந்து அல்லாஹ் அவர்களைப் பாதுகாத்தபின், மீண்டும் ஷிர்க்கின் பால் திரும்பி, அல்லாஹ் அல்லாதவர்களை அழைத்ததையும் அல்குர்ஆன் பின்வருமாறு சொல்லிக் காட்டுகிறது.

فَاِذَا رَكِبُوْا فِى الْفُلْكِ دَعَوُا اللّٰهَ مُخْلِصِيْنَ لَـهُ الدِّيْنَ فَلَمَّا نَجّٰىهُمْ اِلَى الْبَـرِّ اِذَا هُمْ يُشْرِكُوْنَۙ

**“(மனிதர்கள்) கப்பலில் ஏறி (ஆபத்தில் சிக்கி)க் கொண்டால், அவர்கள் முற்றிலும் அல்லாஹ்வுக்கு வழிபட்டு,பரிசுத்த மனத்தோடு அவனை அழை(த்துப் பிரார்த்தி)க்கின்றனர். அவன் அவர்களை கரையில் (இறக்கி) இரட்சித்துக் கொண்ட பின்னர், அவனுக்கே அவர்கள் (பலரை) இணையாக்குகின்றனர்”**

**[அல்குர்ஆன்: 29:65]**

இக்காலத்திலுள்ள அதிகமான முஸ்லிம்கள் துன்பத்தில் சிக்கிக் கொண்டால் அல்லாஹ் அல்லாதவர்களை அழைக்கின்றனர். யாரஸூலல்லாஹ்! யாமுஹ்யித்தீன்! யாபதவீ! யாரிபாஈ! யாமுர்கீ! யாஷைகல் அரப்! என்றெல்லாம் உரத்த தொனியில் சப்தமிட்டு உதவிக்கழைத்து, இன்பத்திலும் துன்பத்திலும் அல்லாஹ்வுக்கும் அவனது ரஸூலுக்கும் மாறு செய்கின்றனர்.

உஹது யுத்தத்தின் போது முஸ்லிம்களில் ஒரு கூட்டம் தமது தலைவருக்கு மாறு செய்ததினால் யுத்தம் தோல்வியில் முடிந்தது. அப்பொழுது அல்லாஹ் அவர்களை நோக்கி

قُلْ هُوَ مِنْ عِنْدِ اَنْفُسِكُمْ

**“(நீங்கள் உங்கள் அரண்களை விட்டு விலகியதனால்) உங்களால் தான் இது ஏற்பட்டது என்று (நபியே!) நீர் கூறுவீராக!” [அல்குர்ஆன்: 3:165]** என்று கூறினான்.



# நபி ﷺ அவர்கள் பேரில் மௌலிது வைபவம் நடத்துதல்

இவ்வைபவம், நபி ﷺ அவர்களோ, ஸஹாபாக்கள், தாபிஈன்கள், நான்கு இமாம்கள் ஆகியோர்களோ அல்லது சிறப்பெனக் கருதப்பட்ட காலங்களிலிருந்தவர்களோ செய்யாததாகும். மார்க்க அடிப்படையில் இதற்கு எந்தவித ஆதாரமுமில்லை.

மௌலிது ஓதுகின்றவர்கள் அதிகமாக, ஷிர்க்கிலேயே மூழ்கியுள்ளனர். அவர்கள், மௌலிதுகளில் பின்வருமாறு ஓதுவார்கள்.

'இரட்சிக்கக்கூடிய உதவி செய்யக்கூடிய அல்லாஹ்வுடைய ரஸூலே! உங்கள் மீதே நம்பிக்கை வைக்கிறோம். அல்லாஹ்வுடைய ரஸூலே! எங்களது துன்பங்களை அகற்றி விடுங்கள்! துன்பங்கள் உங்களைக் கண்டதும் ஓடிவிடும்'

இந்த வார்த்தையை நபி ﷺ அவர்கள் செவிதாழ்த்தி இருப்பார்களென்றால், **'பெரிய ஷிர்க் செய்தவன்'** என்று இதனை ஓதியவனுக்குத் தீர்ப்பு வழங்கியிருப்பார்கள். ஏனென்றால் இரட்சிப்புக் கோருவதும், துன்பங்களை அகற்றுமாறு கோருவதும், உதவி தேடுவதும், நம்பிக்கை வைப்பதும் அல்லாஹ்விடம் மட்டுமேயாகும். அல்லாஹ் இதுபற்றி பின்வருமாறு கூறுகிறான்.

اَمَّنْ يُّجِيْبُ الْمُضْطَرَّ اِذَا دَعَاهُ وَيَكْشِفُ السُّوْٓءَ وَيَجْعَلُكُمْ خُلَفَآءَ الْاَرْضِ ؕ ءَاِلٰـهٌ مَّعَ اللّٰهِ ؕ قَلِيْلًا مَّا تَذَكَّرُوْنَ ؕ

**“கஷ்டத்தில் சிக்கித் துடித்துக் கொண்டிருப்போர் அ(பயமிட்ட) ழைத்தால், அவர்களுக்குப் பதில் கூறி அவர்களுடைய கஷ்டங்களை நீக்குபவன் யார்? பூமியில் உங்களை (த் தன்னுடைய) பிரதிநிதியாக ஆக்கிவைப்பவன் யார்? (இத்தகைய) அல்லாஹ்வுடன் வணக்கத்துக்குரிய (வேறொரு)வன் இருக்கின்றானா? (இல்லவே இல்லை) நீங்கள் (இதைப்பற்றிச்) சிந்திப்பது வெகு சொற்பம்.” [அல்குர்ஆன்: 27:62]**

அல்லாஹ் தனது ரஸூலை நோக்கி மனிதர்களுக்குக் கூறும்படி பின்வருமாறு கட்டளையிடுகிறான்.

قُلْ اِنِّىْ لَاۤ اَمْلِكُ لَـكُمْ ضَرًّا وَّلَا رَشَدًا

**“உங்களுக்கு நன்மையோ, தீமையோ செய்ய நிச்சயமாக நான் சக்தியற்றவன் என்று (நபியே!) நீர் கூறுவீராக!” [அல்குர்ஆன்: 72:21]**

எமது தேவைகளை அல்லாஹ்விடம் மட்டுமே கேட்டுப் பெற்றுக் கொள்ள வேண்டும் என்பது பற்றிப் பின்வருமாறு நபி ﷺ அவர்கள் கூறுகிறார்கள்.

‘நீ கேட்டால் அல்லாஹ்விடமே கேள்! உதவி கோரினால் அல்லாஹ்விடமே உதவி கோரு!’ **[*ஆதாரம்: திர்மிதி (ஸஹீஹ்)*]**

அதிகமான மௌலிதுகள் நபி ﷺ அவர்களை அளவுகடந்து எல்லை மீறி புகழ்வதாக அமைந்துள்ளைதைக் காணலாம். நபி ﷺ அவர்கள் பின்வருமாறு கூறி அதனைத் தடை செய்துள்ளார்கள்.

‘மர்யமுடைய மகன் ஈஸாவைக் கிறிஸ்தவர்கள் அளவு கடந்து புகழ்ந்தது போல் என்னையும் புகழாதீர்கள். நானோ அல்லாஹ்வுடைய அடியானாவேன். அல்லாஹ்வுடைய அடியான் என்றும், அவனுடைய ரஸூல் என்றும் என்னை அழையுங்கள்’ **[*ஆதாரம்: புகாரி*]**

ஸுப்ஹான மௌலிதும், அதல்லாதவைகளும் ‘அல்லாஹ் தனது நூரை(ஒளியை)க் கொண்டு முஹம்மத் ﷺ அவர்களைப் படைத்தான்’

என்றும் 'முஹம்மதுடைய நூரினால் எல்லாப் படைப்பினங் களையும் படைத்தான்' என்றும் கூறுகின்றன. குர்ஆன் இதனைப் பொய்யாக்குகின்றது.

قُلْ اِنَّمَاۤ اَنَا بَشَرٌ مِّثْلُكُمْ يُوْحٰٓى اِلَىَّ اَنَّمَاۤ اِلٰهُكُمْ اِلٰـهٌ وَّاحِدٌ

**"நிச்சயமாக நானும் உங்களைப் போன்ற ஒரு மனிதன் தான். நிச்சயமாக உங்களுடைய நாயன் ஒரே நாயன் தான் என்று எனக்கு வஹீ மூலம் அறிவிக்கப்பட்டுள்ளது என்று (நபியே!) நீர் கூறும்" [அல்குர்ஆன்: 18:110]**

'நபி ﷺ அவர்கள் ஒரு தாய்க்கும் தந்தைக்கும் பிறந்தார்கள்' என்பதே சரித்திரம் கூறும் உண்மை. அல்லாஹ்வினால் வஹியைக் கொண்டு தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு மனிதராகவே அவர்கள் இருக்கின்றார்கள். 'முஹம்மத் ﷺ அவர்களுக்காகவே, அல்லாஹ் உலகமனைத்தையும் படைத் தான்' என்று மௌலிதுகள் கூறுவதைக் குர்ஆன் பொய்யாக்குகின்றது.

وَمَا خَلَقْتُ الْجِنَّ وَالْاِنْسَ اِلَّا لِيَعْبُدُوْنِ

**"எனக்கு வழிபட்டு என்னை வணங்குவதற்காகவே தான் ஜின்களையும் மனிதர்களையும் நான் படைத்தேன்" [அல்குர்ஆன்: 51:56]**

கிறிஸ்தவர்கள் ஈஸா عليه السلام அவர்களுடைய பிறந்த நாளைக் கொண்டாடுவது கொண்டும், தமது குடும்பத்திலுள்ள ஒவ்வொருவருடைய பிறந்தநாளைக் கொண்டாடுவது கொண்டும் தமது மார்க்கத்துக்கு முரணாக நடக்கின்றனர். நபி ﷺ அவர்கள் இதனைப் பின்வருமாறு எச்சரிக்கின்றனர்.

'எவன் எந்தக் கூட்டத்துக்கு ஒப்பாகிறானோ, அவன் அந்தக் கூட்டத்தைச் சேர்ந்தவனாவான்' ***[ஆதாரம்: அபூதாவூத் (ஸஹீஹ்)]***

மௌலிது வைபவங்களில் அதிகமான ஆண்களும் பெண்களும் இரண்டறகலக்கின்றனர். இது இஸ்லாம் தடை செய்கின்ற ஒரு செயலாகும்.

மீலாது, மௌலிது நாட்களில் பல இலட்சம் ரூபாய் வரை, முஸ்லிம்கள் பணத்தை செலவு செய்து, அலங்காரங்கள் செய்கின்றனர்;

விளக்குகள் ஏற்றுகின்றனர். காஃபிர்களுடைய நடைமுறையைப் பின்பற்றுவ தன்றி, இதனால் வேறெந்தப் பிரயோசனத்தையும் அடைய முடியாது. நபி ﷺ அவர்களோ வீண்விரயம் செய்வதைத் தடை செய்துள்ளார்கள்.

மக்கள் அலங்காரங்களுக்குச் செலவு செய்யும் நேரங்களில் சிலவேளை பர்ளான தொழுகைகளைக்கூட விட்டு விடுகின்றனர்.

மௌலிது வைபவத்தின் இறுதிக் கட்டத்தில், 'நபி ﷺ அவர்கள் அந்த சபைக்கு சமூகமளிக்கிறார்கள்' என்ற நம்பிக்கையுடன் மக்கள் எழுந்து நிற்பதுண்டு. இது மிகத் தெளிவானதொரு பொய்யாகும். ஏனென்றால் பின்வருமாறு அல்லாஹ் கூறுகிறான்.

وَمِنْ وَّرَآىِٕهِمْ بَرْزَخٌ اِلٰى يَوْمِ يُبْعَثُوْنَ

**"(மரணித்த) அவர்களுக்கு முன் அதில் (உயிர் கொடுத்து) எழுப்பப்படும் நாள்வரையில் ஓர் அரண் ஏற்பட்டுவிடும்" [அல்குர்ஆன்: 23:100]**

மேற்காட்டிய வசனத்தில் அரண் என்று மொழிபெயர்க்கப்பட்டுள்ள சொல்லின் அரபுப் பதம் 'பர்ஸக்' (BARZAKH) என்பதாகும். இம்மைக்கும் மறுமைக்கும் இடைப்பட்ட ஓர் உலகத்துக்கே இவ்வாறு சொல்லப்படும்.

'ஸஹாபாக்களுக்கு நபி ﷺ அவர்களைவிட மிக நேசத்துக்குரிய எவரும் இருந்ததில்லை. அவர்கள், நபியவர்கள் வருவதைக் கண்டால் எழுந்து நிற்க மாட்டார்கள். நபியவர்கள் இதனை வெறுப்பதினாலேயே அவ்வாறு செய்யாதவர்களாக இருந்தனர்' என்பதாக அனஸ் رضي الله عنه அவர்கள் கூறுகிறார்கள். **[ஆதாரம்: *அஹ்மத், திர்மிதி (ஸஹீஹ்)*]**

மௌலிது ஓதுகின்றவர்கள், தாம் நபி ﷺ அவர்களுடைய சரித்திரத்தை வாசிப்பதாகக் கூறுகின்றனர். நடப்பது என்னவென்றால், இவர்கள் அல்லாஹ்வுடைய சொல்லுக்கும், நபி ﷺ அவர்களுடைய நடைமுறைக்கும் மாறு செய்கின்றனர்.

நபி ﷺ அவர்களை நேசிக்கின்றவன், அவர்களுடைய சரித்திரத்தை வருடத்துக்கு ஒருமுறை மட்டுமல்ல, ஒவ்வொரு நாளும் வாசிக்கின்றவனாகவே இருப்பான். நபியவர்கள் பிறந்தது ரபியுல் அவ்வல் மாதத்தில். மரணமடைந்ததும் அதே மாதத்தில் தான். அவர்கள் மரணமடைந்தது பிறை 12ம் நாளிலாகும். அறிவு ரீதியாக உற்று நோக்கினாலும் இம்மாதத்தில் (முஸ்லிம்களின் இரு பெருநாட்களைப் போன்று மீலாத் கொண்டாடி) சந்தோசப்படுவதை விட துக்கமாக இருப்பதே மேலானதாகும்.

மௌலிது ஓதுகின்றவர்களும், அவ்வைபவத்தை நடத்துகின்றவர்களும் அத்தினத்தில் நடுஇரவுவரை விழித்திருப்பார்கள். இதனால் மறுநாள் காலை சிலர் ஸுப்ஹ் தொழுகையின் ஜமாஅத்தைத் தவற விடுவார்கள். பலர் தொழுகையையே தவற விடுவார்கள். வீட்டிலுள்ளவர்கள் சபை ஏற்பாட்டிற்காகப் பல நேரத் தொழுகைகளைத் தவற விடுவார்கள்.

அதிகமான மனிதர்கள் மௌலிது வைபவங்களை நடத்துகின்றார்கள் என்பதால், மௌலிது ஓதுவது ஆகும் என்பதற்கு ஆதாரமாய் அமைந்து விடாது. பின்வருமாறு அல்லாஹ் கூறுவது இதற்கெதிரான ஆதாரமாக அமைகின்றது.

وَاِنْ تُطِعْ اَكْثَرَ مَنْ فِى الْاَرْضِ يُضِلُّوْكَ عَنْ سَبِيْلِ اللّٰهِ

**“இப்புவியிலிருப்போரில் அநேகரை நீர் பின்பற்றுவீரானால் அவர்கள் உம்மை அல்லாஹ்வுடைய பாதையிலிருந்து திருப்பி விடுவார்கள்” [அல்குர்ஆன்: 6:116]**

‘பித்அத்’ பற்றி ஹுதைபா ﷺ அவர்கள் பின்வருமாறு கூறுகின்றார்கள். ‘பித்அத்துகள் அனைத்தும் வழிகேடாகும். மக்கள் அவற்றை நல்லதென்று கருதினாலும் சரியே!’

ஸுன்னத் வல் ஜமாஅத் பற்றி ஹஸன் பஸரி ؓ அவர்கள் தனது காலத்து ஜனங்களை நோக்கிப் பின்வருமாறு கூறினார்கள்.

'ஸுன்னத் வல் ஜமாஅத்தைச் சேர்ந்தோர் கடந்த காலங்களில் குறைந்தவர்களாகவே இருந்தனர்; எதிர் காலத்திலும் அவ்வாறே இருப்பார்கள்; அவர்கள் வீண் கேளிக்கைகள் செய்வோருடனோ, பித்அத்துக்களைச் செய்பவர்களுடனோ இருக்க மாட்டார்கள். அவர்கள் தங்களுடைய இறைவனைச் சந்திக்கும் வரை ஸுன்னத்துகளைப் பின்பற்றுவதில் பொறுமையாக இருப்பார்கள். நீங்களும் அவ்வாறே இருங்கள்.



# அல்லாஹ்வையும் அவனுடைய ரஸூலையும் எவ்வாறு நேசிப்பது?

ஒருவன் அல்லாஹ்வை நேசிக்கின்றவனாக ஆவதற்கு, அவனுடைய ரஸூலைப் பின்பற்றியே ஆக வேண்டும் என்பதைப் பின்வருமாறு அல்லாஹ் கூறுகிறான்.

قُلْ اِنْ كُنْتُمْ تُحِبُّوْنَ اللهَ فَاتَّبِعُوْنِىْ يُحْبِبْكُمُ اللهُ وَيَغْفِرْ لَكُمْ ذُنُوْبَكُمْ‌ؕ وَاللهُ غَفُوْرٌ رَّحِيْمٌ

**“நீங்கள் மெய்யாகவே அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால், என்னைப் பின்பற்றுங்கள். உங்களை அல்லாஹ் நேசிப்பான். உங்கள் பாபங்களையும் உங்களுக்காக அவன் மன்னித்து விடுவான். அல்லாஹ் மன்னிப்போனும் மிக்க இரக்கமுடையோனுமாக இருக்கிறான் என்று (நபியே! மனிதர்களை நோக்கி) நீர் கூறும்” [அல்குர்ஆன்: 3:31]**

‘உங்களில் எவரும் தனது தந்தையை விட, தனது பிள்ளையை விட உலகிலுள்ள மனிதர்கள் அனைவரையும் விட என்னை அதிகம் நேசிக்கும்வரை மூமினாக முடியாது’ என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். [*ஆதாரம்: புகாரி*]

‘நபி ﷺ அவர்கள் கொண்டு வந்ததைப் பின்பற்றுவது கொண்டும், அவர்களுடைய ஏவலுக்கு வழிபட்டு, தடுத்ததை விட்டு விடுவது கொண்டுமே நாம் அல்லாஹ்வை நேசித்தவர்களாக ஆகமுடியும்’ என்பதை மேற்காட்டிய அல்குர்ஆன் வசனம் கூறுகின்றது. நபியவர்களுடைய நடைமுறையைப் பின்பற்றுவது கொண்டும், அவர்களுடைய கட்டளைகளை ஏற்று நடப்பது கொண்டும் செயல்படுவதை விட்டுவிட்டு, அதிகமாகப் பேசுவது கொண்டு நேசம் ஏற்பட்டுவிட முடியாது.

ஒரு முஸ்லிமுடைய ஈமான் தனது தந்தை, பிள்ளை, உலகிலுள்ள மனிதர்கள் ஆகிய அனைவரைவிட, ஏன்? அவனது உயிரை விடவும் நபி ﷺ அவர்களை அதிகம் நேசிக்கும்வரை அவனுடைய ஈமான் பூர்த்தியாக மாட்டாது.

நபி ﷺ அவர்களுடைய ஏவல்களுடன் ஒருவனுடைய மனோஇச்சை, மனைவியுடைய விருப்பம், பிள்ளைகளுடைய ஆசை, தன்னைச்சூழ உள்ளவர்களின் விருப்பம் ஆகியவை குறுக்கிட நேர்ந்தால், நபியவர்களை உண்மையாக நேசிக்கின்றவன், அவர்களுடைய ஏவல்களுக்கே முதலிடம் கொடுப்பான். இவ்விஷயத்தில் தனது மனோஇச்சை, தனது குடும்பம், தன்னைச்சூழ உள்ளவர்களின் விருப்பத்துக்கு மாற்றமாக நடப்பான். அவன் பொய்யனாக இருந்தால், அல்லாஹ்வுக்கும் அவனுடைய ரஸூலுக்கும் மாறு செய்துவிட்டு, அவனுடைய ஷைத்தானுக்கும், மனோ இச்சைக்கும் பொருத்தமான முறையில் நடப்பான்.

'நீர் நபி ﷺ அவர்களை நேசிக்கின்றீரா?' என்று ஒரு முஸ்லிமிடம் கேட்டால், எனது உயிரும் பொருளும் அவர்களுக்கு அர்ப்பணமாகட்டும்; நான் அவரை நேசிக்கிறேன் என்று பதிலளிப்பான். மீண்டும் அவனை நோக்கி, நீ உனது முகத்தில் தாடியை வளர்ப்பதற்குப் பதிலாக, அதனை வழித்து நபியவர்களுக்கு ஏன் மாறு செய்கிறாய்? வெளித்தோற்றத்திலும், பண்பாடுகளிலும், தௌஹீதிலும் ஏன் நபியவர்களுக்கு ஒப்பாக மாட்டாய்? என்று கேட்டால், அவன் ஆச்சர்யமானதொரு பதிலை உமக்களிப்பான்.

'நேசம் என்பது உள்ளத்தில் உள்ளது; எனது உள்ளம் பரிசுத்தமானது' என்று கூறுவான்.

நாங்கள் அவனுக்குச் சொல்வது என்னவென்றால், உனது உள்ளம் தூய்மையானதாக இருந்தால் பின்வருமாறு நபி ﷺ அவர்கள் சொன்னது போன்று அது உனது உடலில் வெளியாகி இருக்கும்.

'நிச்சயமாக உடலில் ஒரு மாமிசத் துண்டொன்று உண்டு. அது சீர் பெற்றால், உடல் முழுவதும் சீர்பெற்று விடும். அது கெட்டு விட்டால் உடல் முழுவதும் கெட்டு விடும். அதுதான் இதயம்'

**[*அதாரம்: புகாரி, முஸ்லிம்*]**

நோயுற்றிருந்த ஒரு முஸ்லிம் வைத்தியரைச் சந்திதிக்கச் சென்றிருந்தேன். அவருடைய வீட்டுச் சுவரில் ஆண் பென் இருபாலாருடைய உருவப்படங்கள் தொங்க விடப்பட்டிருந்தன. இதனை நபி ﷺ அவர்கள் தடை செய்திருப்பது பற்றி அவருக்குக் கூறினேன். அவர் அதனை அலட்சியம் செய்து கொண்டு, 'இவர்கள் என்னுடைய பள்ளிபருவத்தின் போது என்னுடனிருந்த தோழர்களும் தோழிகளும் ஆவார்கள் என்று கூறினார்.

அவர்களில் அதிகமானவர்கள் காஃபிர்களாகவும், அவர்களுடனிருந்த பெண்கள் மறைக்கப்பட வேண்டிய தமது அங்கங்களை வெளிப்படுத்தி அலங்கரித்தவர்களாகவும் இருந்தனர் என்பதையும், அவர்கள் சோஸலிச நாட்டைச் சேர்ந்தவர்கள் என்பதையும் அந்த டாக்டர் அறிந்தவராகவே என்னிடத்தில் அவ்விதம் கூறினார்.

அந்த வைத்தியர் தனது முகத்தை வழித்திருந்தார். (தாடி வைக்குமாறு) அவருக்கு நான் அறிவுரை கூறினேன். அவர் உடனே கர்வங்கொண்டு முகத்தை வழித்த நிலையிலேயே தான் மரணிப்பதாகக் கூறினார்.

ஆச்சர்யம் என்னெவென்றால், நபி ﷺ அவர்களுடைய போதனைக்கு மாறு செய்கின்ற அந்த வைத்தியர் 'தான் நபியவர்களை நேசிப்பதாகக் கூறினார்' அத்துடன் அவர் 'யா ரஸூலல்லாஹ்! அன பீ-ஹிமாக' (ரஸூலுல்லாஹ்வே! நான் உங்களது பாதுகாப்பிலேயே இருக்கிறேன்) என்று கூறுமாறு எனக்கு அறிவுரை கூறினார்.

அப்பொழுது, 'நீரோ நபியவர்களுடைய ஏவலுக்கு மாறு செய்கின்றீர்! பின்பு அவரிடத்தில் பாதுகாப்புத் தேடி, அவரிடத்திலேயே தஞ்சம் அடைகின்றீர். இந்த ஷிர்க்கை நபியவர்கள் அங்கீகரிப்பார்களா? நாங்களும், நபியவர்களும் அல்லாஹ்வுடைய பாதுகாவலிலேயே இருக்கின் றோம்' என்று எனக்குள் நானே சொல்லிக் கொண்டேன்.

நபி ﷺ அவர்கள் மீது வைக்கும் அன்பு, கூட்டங்களைக் கொண்டும், அலங்காரங்களைக் கொண்டும், பாட்டுக்கள், கவிகள் ஆகியவைகளைப் பாடுவது கொண்டும், இஸ்லாமிய அடிப்படைக்கு அப்பாற்பட்ட பித்அத்துகளைக் கொண்டும் ஏற்பட்டு விடாது. உண்மையான அன்பென்பது நபியவர்களுடைய நடைமுறையைப் பின்பற்றுவது கொண்டும் அவர்களது ஸுன்னாவைப் பற்றி பிடிப்பது கொண்டும் மட்டுமே ஏற்பட முடியும்.



# நபி ﷺ அவர்கள் மீது ஸலவாத் சொல்வதின் சிறப்பு!

அல்லாஹ், நபி ﷺ அவர்கள் மீது ஸலவாத் சொல்வதை நம்மீது கட்டாயப்படுத்தி சட்டமாக்கியுள்ளான். இதுபற்றித் தனது திருமறையில் பின்வருமாறு கூறுகிறான்.

اِنَّ اللّٰهَ وَمَلٰٓٮِٕكَتَهٗ يُصَلُّوْنَ عَلَى النَّبِىِّ ؕ يٰۤاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا صَلُّوْا عَلَيْهِ وَسَلِّمُوْا تَسْلِيْمًا

**“நிச்சயமாக அல்லாஹ்வும் அவனுடைய மலக்குகளும் நபியின் மீது ஸலவாத்துச் சொல்கின்றார்கள். (ஆகவே) மூமின்களே! நீங்களும் அவர் மீது ஸலவாத்துச் சொல்லி ஸலாமும் கூறிக் கொண்டிருங்கள்” [அல்குர்ஆன்: 33:56]**

மேற்காட்டிய வசனத்தில் உள்ளவாறு, அல்லாஹ் சொல்லும் “ஸலவாத்” யாதெனில், மலக்குகளின் முன்னிலையில் நபி ﷺ அவர்களைப் புகழ்வதாகும். மலக்குகள் ஸலவாத் சொல்வதென்றால் நபியவர்களுக்காக துஆச் செய்வதாகும். என்பதாக அபுல்ஆலியா ﵀ அவர்கள் கூறுகிறார்கள்.

‘அல்லாஹ் தனது மலக்குகளிடத்தில் தனது அடியார் முஹம்மத் ﷺ அவர்களது அந்தஸ்தைப் பற்றிப் புகழ்ந்துரைக்கிறான்; அதனைத் தொடர்ந்து மலக்குகள் நபியவர்களுக்காக துஆச் செய்கிறார்கள். பின்பு உலகத்தவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து நபியவர்கள் மீது ஸலவாத் சொல்லுமாறு அல்லாஹ் கட்டளையிடுகிறான்’ என்பதாக இப்னுகதீர் ﵀ அவர்கள் மேற்காட்டிய வசனத்துக்கு விளக்கமளிக்கின்றார்கள்.

அல்லாஹ் மேற்காட்டிய வசனத்தில் நபி ﷺ அவர்களுக்காக துஆ செய்து, அவர்கள் மீது ஸலவாத் சொல்லுமாறு கட்டளையிடுகிறான்.

இக்கால மனிதர்கள் செய்கின்றவாறு அல்லாஹ் அல்லாதவர்களிடம் பிரார்த்தனை செய்யுமாறோ, அவர்களுக்காக பாத்திஹா ஸூராவையும், வேறு சில ஸூராக்களையும் ஓதுமாறோ கட்டளையிடவில்லை.

ஸலவாத்துக்களில் சிறப்புமிக்கவை, நபியவர்கள் தனது தோழர் களுக்குக் கற்றுக்கொடுத்த ஸலவாத்துக்களாகும். அதில் மிக உன்னத மானது பின்வரும் ஸலவாத்தாகும்.

**‘அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மத் கமா ஸல்லைத அலா இப்றாஹீம வஅலா ஆலி இப்றாஹீம இன்னக ஹமீதும் மஜீத். அல்லாஹும்ம பாரிக் அலா முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மத் கமா பாரக்த அலா இப்றாஹீம வஅலா ஆலி இப்றாஹீம இன்னக ஹமீதும் மஜீத்’**

(பொருள்: அல்லாஹ்வே! நீ இப்றாஹீம் ﵇ அவர்கள் மீதும் அவர்களது குடும்பத்தார் மீதும்ஸலவாத்துச் சொன்னது போல், முஹம்மத் ﷺ அவர்கள் மீதும் அவர்களது குடும்பத்தார் மீதும் ஸலவாத் சொல்வாயாக! அல்லாஹ்வே! நீ இப்றாஹீம் ﵇ அவர்கள் மீதும் அவர்கள் குடும்பத்தார் மீதும் ‘பரக்கத்’ (அபிவிருத்தி) செய்தது போல் முஹம்மத் ﷺ அவர்கள் மீதும் அவர்களது குடும்பத்தார் மீதும் பரக்கத் செய்வாயாக!’

**[ஆதாரம்: *புகாரி, முஸ்லிம்*]**

ஹதீஸ் கிதாபுகளிலும், பிக்ஹ் கிதாபுகளிலும் கூறப்பட்டுள்ள இந்த ஸலவாத்திலும், ஹதீஸ்களில் வந்துள்ள இவையல்லாத ஏனைய ஸலவாத்துக்களிலும் இன்று மக்கள் தமது விருப்பப்படி அதிகப்படுத்திக் கொண்டிருக்கும் ‘ஸய்யிதினா’ (எங்கள் தலைவரே!) என்ற சொல் கூறப்படவில்லை. நபியவர்கள் எமது தலைவர் என்பதில் சந்தேகமெதுவு மில்லை. ஆனால் நபியவர்கள் கற்றுத் தந்த வாசகங்களில் கூட்டல் குறைத்தலின்றி அவ்விதமே சொல்லிக் கொள்வது நம்மீது வாஜிபாகும். ‘இபாதத்’ (வணக்கம்) என்றால், நபியவர்களிடமிருந்து பெற்றுக்

கொண்டதைப் பின்பற்றுவதாகுமேயன்றி ஒவ்வொருவரும் தத்தமது புத்திக்கேற்ற வகையில் அமைத்துக் கொள்வதல்ல.

'முஅத்தின் பாங்கு சொல்லுவதைக் கேட்டால் அவர் சொல்லுவது போன்று நீங்களும் சொல்லுங்கள்; பின்னர் என்மீது ஸலவாத்துச் சொல்லுங்கள். எவர் என்மீது ஒரு விடுத்தம் ஸலவாத்துச் சொல்கிறாரோ, அதனைக் கொண்டு அவர்மீது அல்லாஹ் பத்து விடுத்தம் ஸலவாத் சொல்லுகிறான். பின்னர் எனக்கு அல்லாஹ்விடம் வஸீலாவைத் தருமாறு கேளுங்கள். 'வஸீலா' என்பது சுவர்கத்திலுள்ள ஓர் இடம். அல்லாஹ் வுடைய அடியார்களில் ஒருவருக்கன்றி, வேறெவருக்கும் அது கிடைக்காது. அந்த அடியான் நானாக இருக்க விரும்புகிறேன். எனக்கு எவர் வஸீலாவைத் தருமாறு (அல்லாஹ்விடம்) கேட்கிறாரோ அவருக்கு ஷபாஅத் செய்வது (என்மீது) கடமையாகின்றது' என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். **[*ஆதாரம்: முஸ்லிம்*]**

பாங்குக்குப் பின்னர் ஸலவாத் கூறி முடிந்ததும் மேலே கூறப்பட்ட வஸீலாவைக் கேட்கும் துஆ பின்வருமாறு அமைந்துள்ளது.

**'அல்லாஹும்ம ரப்ப ஹாதிஹித் தஃவதித் தாம்ம; வஸ்ஸலாதில் காஇமா; ஆத்தி முஹம்மதனில் வஸீலத வல்-பளீலத வப்அஸ்ஹு மகாமன் மஹ்மூதனில்லதி வஅத்தஹு'**

(பொருள்: பூர்த்தியான இந்த துஆவுக்கும், நிலையான தொழுகைக்கும் உரிய அல்லாஹ்வே! முஹம்மத் ﷺ அவர்களுக்கு வஸீலாவையும், சிறப்பையும் கொடுப்பாயாக! மேலும் வாக்களித்த புகழப்பட்ட இடத்துக்கு அன்னாரை உயர்த்துவாயாக!) **[*ஆதாரம்: புகாரி*]**

பின்வரும் நபி ﷺ அவர்கள் வலியுறுத்துவதற்கமைவாக நாம் அல்லாஹ்விடம் துஆ கேட்கும் சந்தர்ப்பங்களிலெல்லாம் ஸலவாத்தையும் சேர்த்துக் கொள்வது மிக மிக அவசியமாகும்.

'நபி ﷺ அவர்கள் மீது ஸலவாத் சொல்லப்படும்வரை துஆக்கள் அனைத்தும் (அல்லாஹ்விடம் செல்ல முடியாமல்) தடுக்கப்பட்டதாக இருக்கும்' **[ஆதாரம்: *பைஹகீ (ஹஸன்)*]**

'பூமியில் சுற்றித் திரிந்து கொண்டிருக்கும் அல்லாஹ்வுடைய சில மலக்குகள் இருக்கின்றனர். என்னுடைய உம்மத்துகளில் என்மீது ஸலாம் சொல்லுகின்றவர்களின் ஸலாமை, அவர்கள் என்மீது எத்தி வைக்கின்றனர்'

**[ஆதாரம்: *அஹ்மத் (ஸஹீஹ்)*]**

நபி ﷺ அவர்கள் மீது ஸலவாத் சொல்லுவது முக்கியமான ஒரு 'இபாதத்' ஆகும். வெள்ளிக்கிழமை தினங்களில் அதனை அதிகப் படுத்துவது மிக மிக அவசியமானதாகும். இது அல்லாஹ்விடத்தில் நெருக்கத்தை ஏற்படுத்துவதில் மிக மேன்மையான ஒரு வணக்கம். துஆ கேட்கின்றபோது ஸலவாத்தைக் கொண்டு வஸீலா (நெருக்கத்தை)த் தேடுதல் மார்க்கத்தில் அங்கீகரிக்கப்பட்டுள்ளது. ஏனென்றால் ஸலவாத் 'ஸாலிஹான அமலில்' அடங்குகின்றது.

எனவே 'அல்லாஹ்வே! முஹம்மத் ﷺ அவர்கள் மீது நான் சொல்லும் ஸலவாத்தைக் கொண்டு எனது துன்பத்தைத் துடைப்பாயாக! கஷ்டத்தை அகற்றுவாயாக! என்று நாம் ஒவ்வொருவரும் அல்லாஹ்விடம் கேட்போமாக! அல்லாஹ், முஹம்மத் ﷺ அவர்கள் மீதும், அவர்களது குடும்பத்தினர் மீதும் ஸலவாத்தும் ஸலாமும் சொல்வானாக!



# பித்அத்தான ஸலவாத்துக்கள்

நபி ﷺ அவர்களது சொல்லிலோ, ஸஹாபாக்கள், தாபியீன்கள், முஜ்தஹிதான இமாம்கள் ஆகியோரின் சொல்லிலோ அடங்காத பித்அத் தான ஸலவாத்தின் அமைப்புகளை அதிகமாக செவிதாழ்த்த முடிகின்றது. அவை பின்னால் வந்தவர்களால் ஏற்படுத்தப் பட்டவையாகும். அவ்வாறான பித்அத்தான வசன அமைப்புகள் எங்கிருந்து வந்தன? என்று தெரியாத அளவு அந்த ஸலவாத்துக்கள் பொதுமக்களுக்கு மத்தியிலும் அறிஞர்களுக்கு மத்தியிலும் பரவி விட்டன.

நபி ﷺ அவர்களால் கற்றுத் தரப்பட்ட ஸலவாத்துக்களை ஓதுவதைவிட இவற்றையே மக்கள் அதிகமாக ஓதுகின்றனர். சிலவேளை நபியவர்களால் கற்றுத் தரப்பட்டவற்றை விட்டுவிட்டு தங்களது மஸாயிகுகளால் அமைக்கப்பட்டுள்ள ஸலவாத்துக்களை ஓதி வருகின்றனர். நாம் நன்றாக கவனித்துப் பார்த்தால் இவ்வாறான ஸலவாத்துக்கள் நபியவர்களுடைய நடைமுறைக்கு முரணாயிருப்பதைக் காணலாம். பின்வரும் பித்அத்தான ஸலவாத்தை உற்று நோக்குவோம்.

**'அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் திப்பில் குலூபி வதவாஇஹா. வஆபியதில் அப்தானி வஷிபாஇஹா, வநூரில் அப்ஸாரி வழியாஇஹா, வஅலா ஆலிஹீ வஸல்லிம்'**
(பொருள்: அல்லாஹ்வே! உள்ளங்களுக்குப் பரிகாரமாகவும், அவற்றுக்கு மருந்தாகவும், உடலுக்குப் பாதுகாவலாகவும், அவற்றுக்கு சுகமாகவும், கண்களுக்கு ஒளியாகவும், அவற்றுக்கு பிரகாசமாகவும் அமைந்துள்ள முஹம்மத் ﷺ அவர்கள் மீதும் அவர்களது குடும்பத்தினர் மீதும் ஸலவாத்தும் ஸலாமும் சொல்வாயாக!)

உடல்களுக்கும் உள்ளங்களுக்கும் சுகத்தையும் பாதுகாப்பையும் அளிப்பவன் அல்லாஹ் ஒருவன் மட்டுமேயாவான். நபி ﷺ அவர்கள் தனக்கோ, அல்லது பிறருக்கோ யாதொரு நன்மையோ தீமையோ செய்யச் சக்தியற்றவர்களாகவே இருக்கின்றனர். ஸலவாத் என்று சொல்லப்படும் மேற்சொன்ன வாசக அமைப்பு பின்வரும் அல்லாஹ்வின் வாக்குக்கு முரண்படுகின்றது.

قُلْ لَّاۤ اَمْلِكُ لِنَفْسِىْ ضَرًّا وَّلَا نَفْعًا اِلَّا مَا شَآءَ اللّٰهُ‌ؕ

**"அல்லாஹ் நாடியதையன்றி யாதொரு நன்மையோ, தீமையோ நான் எனக்கே தேடிக் கொள்ளச் சக்தியற்றவன் என்று (நபியே!) நீர் கூறும்" [அல்குர்ஆன்: 10:49]**

மேலும் பின்வரும் நபிவாக்குக்கும் அந்த ஸலவாத்து முரண்படுகின்றது:

'கிறிஸ்தவர்கள், மர்யமுடைய மகன் ஈஸா عليه السلام அவர்களை அளவு கடந்து புகழ்ந்தது போன்று என்னையும் அளவு கடந்து புகழாதீர்கள். நானோ அல்லாஹ்வுடைய அடியானாவேன். நீங்கள் அல்லாஹ்வுடைய அடியான் என்றும் அவனுடைய ரஸூல் என்றுமே என்னை அழையுங்கள்'

[ஆதாரம்: புகாரி]

மேற்காட்டிய ஹதீஸில் பயன்படுத்தப் பட்டுள்ள 'அல்இத்றா' என்ற சொல்லுக்கு புகழ்வதில் எல்லை கடந்து விடல், அல்லது புகழ்வதை அதிகப்படுத்தல் என்று பொருள்படும். பன்னானீ ஸூபிய்யி என்ற ஒருவருக்குரிய 'பள்லுஸ் ஸலவாத்' (ஸலவாத்தின் மகிமை) என்ற ஒரு புத்தகத்தில் பின்வரும் ஸலவாத் இடம் பெற்றுள்ளதைக் காணலாம்.

'அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் ஹத்தா தஜ்அல மின்ஹுல் அஹதிய்யத வல் கய்யூமிய்யா (அல்லாஹ்வே! முஹம்மத் ﷺ அவர்கள் மீது ஸலவாத் சொல்வாயாக! அவரிலிருந்தே 'அஹதிய்யா' (ஒருவன் என்ற தன்மை) 'கய்யூமிய்யா' (நிலைபாடு) ஆகிய பண்புகளை

நீ உண்டாக்குகிறாய்) 'அஹதிய்யா' 'கய்யூமிய்யா' ஆகிய இரண்டும் அல்லாஹ்வுக்குச் சொந்தமான பண்புகள் என்று குர்ஆன் கூறுகின்றது. இப்பண்புகளை அந்த ஷைகு நபி ﷺ அவர்களுக்குச் சொந்தமாக்குகிறார்.

ஷைக் ஸ◌ூரி கபீர் என்பவர்க்குரிய 'அத்இய்யதுஸ் ஸபாஹி-வல்-மஸாஇ' என்ற நூலில் பின்வருமாறு ஒரு ஸலவாத் இடம் பெற்றுள்ளது.

**'அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் அல்லதீ க(ஹ)லக்த மின் - நூரிஹீ குல்ல ஷைஇன்'**
(பொருள்: அல்லாஹ்வே! முஹம்மத் ﷺ அவர்கள் மீது ஸலவாத் சொல்வாயாக! அவருடைய ஒளியைக் கொண்டே எல்லா வஸ்துக்களையும் நீ படைத்தாய்)

'எல்லா வஸ்துக்கள்' என்று கூறும்போது அவற்றில் ஆதம் عليه السلام, இப்லீஸ், (ஷைத்தான்) குரங்கு, பன்றி, நாய் போன்ற அனைத்தும் அடங்குகின்றன. இவையனைத்தும் முஹம்மத் ﷺ அவர்களுடைய ஒளியினால் படைக்கப்பட்டன என்பதைப் புத்தியுள்ள எவனும் ஒப்புக் கொள்வானா?

قَالَ اَنَا خَيْرٌ مِّنْهُ‌ؕ خَلَقْتَنِىْ مِنْ نَّارٍ وَّخَلَقْتَهٗ مِنْ طِيْنٍ

**“(இப்லீஸாகிய) அவன், ‘அவரை (ஆதமை) விட நானே மேலானவன். என்னை நீ நெருப்பால் படைத்தாய்; அவரை களிமண்ணால் படைத்தாய்’ என்று (அல்லாஹ்வை நோக்கிக்) கூறினான்” [அல்குர்ஆன்: 38:76]**

குர்ஆனில் கூறப்பட்டுள்ள இவ்வசனத்தை ஷைத்தான் எப்பொழுது சொன்னானோ, அன்றைய தினமே தனது படைப்பு எவ்வாறு? ஆதம் عليه السلام அவர்களின் படைப்பு எவ்வாறு? என்பதை அறிந்து கொண்டான். இந்த வசனம் ஷைகுடைய வாக்கியத்தைப் பொய்யாக்குகின்றது.

பித்அத்தான ஸலவாத்துடைய அமைப்புகளில் சிலர் பின்வருமாறு ஓதுவார்கள்.

**'அஸ்ஸலாத்து வஸ்ஸலாமு அலைக்க யாரஸூலல்லாஹ் ளாகத் ஹய்லதீ ப-அத்ரிக்நீ யாஹபீபல்லாஹ்!'**

(பொருள்: நபியே! உங்கள் மீது ஸல்வாத்தும் ஸலாமும் உண்டாவதாக! எனது நிலைமை நெருக்கடியாகி விட்டது. எனக்கு நீங்கள் கைக்கொடுத்து உதவுவீர்களாக!)

இது பின்வரும் அல்குர்ஆன் வசனங்களுக்கு முரண்படுகின்றதைக் காணலாம்.

اَمَّنْ يُّجِيْبُ الْمُضْطَرَّ اِذَا دَعَاهُ وَيَكْشِفُ السُّوْٓءَ وَيَجْعَلُكُمْ خُلَفَآءَ الْاَرْضِ‌ؕ ءَاِلٰـهٌ مَّعَ اللّٰهِ‌ؕ قَلِيْلًا مَّا تَذَكَّرُوْنَؕ

**“கஷ்டத்தில் சிக்கி(த் துடித்து)க் கொண்டிருப்போர் அ(பயமிட்ட)ழைத்தால், (அவர்களுக்குப்) பதில்கூறி அவர்களுடைய கஷ்டங்களை நீக்குபவன் யார்? பூமியில் உங்களை(த் தன்னுடைய) பிரதிநிதிகளாக ஆக்கி வைப்பவன் யார்? (இத்தகைய) அல்லாஹ்வுடன் வணக்கத்துக்குரிய (வேறொரு)வன் இருக்கின்றானா? (இல்லவே இல்லை) நீங்கள் (இதைப்பற்றிச்) சிந்திப்பது வெகு சொற்பம்” [அல்குர்ஆன்: 27:62]**

وَاِنْ يَّمْسَسْكَ اللّٰهُ بِضُرٍّ فَلَا كَاشِفَ لَهٗۤ اِلَّا هُوَ‌ؕ

**“(நபியே!) அல்லாஹ் உமக்கு யாதொரு தீங்கிழைத்தால், அதனை நீக்குவோர் அவனையன்றி வேறொருவருமில்லை” [அல்குர்ஆன்: 6:17]**

நபி ﷺ அவர்கள், தனக்கொரு துன்பமோ, கவலையோ பீடிக்குமானால் பின்வருமாறு சொல்பவர்களாக இருந்தார்கள்.

**'யாஹய்யு யாகய்யூம், பிரஹ்மதிக அஸ்தகீது'**

(பொருள்: உயிருடனிருப்பவனே! என்றும் நிலையானவனே! உன்னுடைய ரஹ்மத்தைக் கொண்டு உன்னிடம் நான் இரட்சிக்கத் தேடுகிறேன்)

நபியவர்களே இவ்வாறு பிரார்த்திக்கின்றவர்களாக இருந்திருக்கும் போது, நபியவர்களே! எனக்குக் கண்பார்வையைத் தந்து விடுங்கள்!

என்னை காப்பாற்றுங்கள்! என்று கேட்பது எவ்வாறு ஆகும்? மேலேயுள்ள பித்அத்தான வாசக அமைப்பு பின்வரும் நபி வாக்குக்கு முரணாக அமைகின்றது.

'நீ கேட்டால் அல்லாஹ்விடம் கேள்! உதவி தேடினால் அல்லாஹ் விடமே உதவி தேடு!' **[ஆதாரம்: *திர்மிதி (ஸஹீஹ்)*]**

**'அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதினில் பாதிஹி லம்மா உக்லிக்'**

(பொருள்: அல்லாஹ்வே! கலக்கமுற்றிருக்கும் போது வெற்றியை ஏற்படுத்துகின்ற முஹம்மத் ﷺ அவர்கள் மீது ஸலவாத் சொல்வாயாக!)

இவ்வமைப்புடனுள்ள ஸலவாத்துக்கு 'ஸலாதுல் பாதிஹா' என்று சொல்லப்படும். '6000 விடுத்தங்கள் அல்குர்ஆனை ஓதுவதைவிட இந்த ஸலவாத்தை ஒரு விடுத்தம் ஓதுவது சிறப்பானது' என்று இதனை ஓதுகின்றவர்கள் நம்புகின்றார்கள். தரீகத்துத் தீஜானிய்யாவின் தலைவர் ஷைக் அஹ்மத் அத்தீஜானிய்யா என்பவரே இந்த ஸலவாத்தை ஏற்படுத்தினார்.

6000 விடுத்தங்கள் குர்ஆனை ஓதுவது என்று சொல்வது ஒரு புறமிருக்க, 'ஒரு விடுத்தம் குர்ஆனை ஓதுவது' என்று அதன் சிறப்பைச் சொன்னாலும் இது முற்றிலும் மடமைத்தனமாகும். குர்ஆனின் ஒரு வசனத்துக்காவது இதனைச் சமப்படுத்தலாமா? இது ஒரு முஸ்லிம் சொல்லும் வார்த்தையன்று.

'அல்லாஹ்வுடைய நாட்டமின்றி நபி ﷺ அவர்கள் ஒரு வெற்றியை ஏற்படுத்துவார்' என்று நபியவர்களை வர்ணிப்பது முற்றிலும் பிழையாகும். ஏனென்றால், நபி ﷺ அவர்களே அல்லாஹ்வுடைய நாட்டமின்றி மக்காவை வெற்றிக் கொள்ளவில்லை.

தனது சாச்சா அபூதாலிபை, ஈமான்கொண்டு இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ள வைக்கக்கூடியதாக, அவருடைய உள்ளத்தை வெற்றிகொள்ள நபியவர்களால் முடியவில்லை. எனினும் அவர் ஷிர்க்கிலேயே மரணித்தார். அல்குர்ஆன் பின்வருமாறு நபியவர்களோடு உரையாடுகின்றது.

اِنَّكَ لَا تَهْدِىْ مَنْ اَحْبَبْتَ وَلٰـكِنَّ اللّٰهَ يَهْدِىْ مَنْ يَّشَآءُ‌ ۚ وَهُوَ اَعْلَمُ بِالْمُهْتَدِيْنَ

**"நீர் விரும்பியவர்களை நேரான வழியில் செலுத்திவிட நிச்சயமாக உம்மால் முடியாது; எனினும் அல்லாஹ் தான் விரும்பியவர்களையே நேரான வழியில் செலுத்துகின்றான். நேரான வழியில் செல்லக்கூடியவர் யார் என்பதை அவனே நன்கறிவான்" [அல்குர்ஆன்: 28:56]**

اِنَّا فَتَحْنَا لَكَ فَتْحًا مُّبِيْنًا ۙ

**"(நபியே! ஹுதைபிய்யாவின் சமாதான உடன்படிக்கையின் மூலம்) நிச்சயமாக நாம் உமக்குத் தெளிவான (மிகப்பெரிய)தொரு வெற்றியைத் தந்தோம்"**

**[அல்குர்ஆன்: 48:01]**

'தலாஇலுல் கைராத்' என்ற தொகுப்பை அமைத்தவர் 'அல்ஹிஸ்புல் ஸாபிஃ' என்ற பகுதியில் பின்வரும் பித்அத்தான ஸலவாத்தை ஏற்படுத்தியுள்ளார்.

**'அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் மா ஸஜ அதில் ஹமாஇமு வநபஅதித் தமாஇமு'**

(பொருள்: அல்லாஹ்வே! புறாக்கள் ஓசையிடுவதும், தாயத்துக்கள், அச்சரங்கள் பிரயோசனம் ஏற்படுத்துவதுமான காலமெல்லாம் முஹம்மத் ﷺ அவர்கள் மீது ஸலவாத் சொல்வாயாக!)

பித்அத்தான இந்த ஸலவாத்தில் தாயத்துக்கள் பற்றிக் கூறப் பட்டுள்ளது. இவை பாதுகாப்புக்காகவும், கண் திருஷ்டிக்காகவும் பிள்ளைகள் பெரியவர்கள் போன்றவர்களின் மீது தொங்கவிடப்படும் செம்பு, பித்தளை, நூல் போன்றவைகளாகும். இவற்றைச் செய்து

கொண்டிருப்பவனோ, கட்டிக் கொண்டிருப்பவனோ எந்தவிதப் பயனையும் அடைய முடியாது. இது இணை வைப்பவர்களின் வேலையாகும். நபி ﷺ அவர்கள் இதுபற்றிப் பின்வருமாறு கூறியுள்ளார்கள்.

'எவன் ஒரு அச்சரத்தை(க் கட்டி)த் தொங்க விடுகிறானோ, அவன் இணை வைத்தவனாவான்' **[*ஆதாரம்: அஹ்மத் (ஸஹீஹ்)*]**

மேலேயுள்ள ஸலவாத்தின் வாசக அமைப்பு ஹதீஸுக்கு முரண்படுகின்றது. அது ஷிர்க்கை ஏற்படுத்தக்கூடிய அச்சரம் (தாயத்துக்) கட்டுவதை அல்லாஹ்வின் பால் நெருங்கக் கூடியதாக ஆக்குகின்றது. இதிலிருந்து அல்லாஹ்விடத்தில் பாதுகாப்பையும், நேர்வழியையும் வேண்டுவோமாக! ஸலவாத் என்ற பெயரில் பின்வருமாறு ஒரு வாசக அமைப்பும் தலாஇலுல் கைராத்தில் இடம் பெற்றுள்ளது.

**'அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் ஹத்தா லா-யப்கா மினஸ்ஸலாதி ஷைஉன் வர்ஹம் முஹம்மதன் ஹத்தா லா யப்கா மினர்ரஹ்மதி ஷைஉன்'**
(பொருள்: அல்லாஹ்வே! (இவ்வுலகில்) ஸலவாத்தில் எதுவுமே மீதம் ஏற்படாதளவு முஹம்மத் ﷺ அவர்கள் மீது ஸலவாத் சொல்வாயாக! ரஹ்மத்தில் எதுவுமே மீதம் ஏற்படாதளவு முஹம்மத் ﷺ அவர்கள் மீது அருள் புரிவாயாக!) இந்த வாசக அமைப்பு அல்லாஹ்வுடைய ஸிபத்துக்களில் ஸலவாத், ரஹ்மத் ஆகியவற்றை முடிவடையக் கூடியதாக ஆக்குகின்றது. அல்லாஹ் இதற்கு மாறாகக் கூறுகின்றான்.

قُلْ لَّوْ كَانَ الْبَحْرُ مِدَادًا لِّـكَلِمٰتِ رَبِّىْ لَـنَفِدَ الْبَحْرُ قَبْلَ اَنْ تَـنْفَدَ كَلِمٰتُ رَبِّىْ وَلَوْ جِئْنَا بِمِثْلِهٖ مَدَدًا

**"சமுத்திரத்திலுள்ள நீர் யாவும் மையாக இருந்து என் இறைவனின் வாக்கியங்களை (எழுத) ஆரம்பித்தால், என் இறைவனின் வாக்கியங்கள் முடிவதற்கு முன்னதாகவே இந்தச் சமுத்திரம் யாவும் செலவாகி விடும். அதைப்போல்**

இன்னொரு பங்கும் (சமுத்திரத்தைச்) சேர்த்துக்கொண்ட போதிலும் கூட என்று (நபியே!) நீர் கூறும்" [அல்குர்ஆன்: 18:109]

وَلَوْ اَنَّ مَا فِى الْاَرْضِ مِنْ شَجَرَةٍ اَقْلَامٌ وَّالْبَحْرُ يَمُدُّهٗ مِنْۢ بَعْدِهٖ سَبْعَةُ اَبْحُرٍ مَّا نَفِدَتْ كَلِمٰتُ اللّٰهِؕ اِنَّ اللّٰهَ عَزِيْزٌ حَكِيْمٌ

"மேலும், நிச்சயமாக இப்பூமியிலுள்ள மரங்கள் யாவும் எழுது கோல்களாகவும், கடல் (நீர் முழுதும்) அதனுடன் கூட மற்றும் ஏழு கடல்கள் அதிகமாக்கப்பட்டு (மையாக) இருந்த போதிலும், அல்லாஹ்வின் (புகழ்) வார்த்தைகள் முடிவுறா; நிச்சயமாக அல்லாஹ் மிகைத்தவன்; ஞானம் மிக்கோன்" [அல்குர்ஆன்: 31:27]

அஸ்ஸலாத்துல் பஷீஷிய்யா:

**'அல்லாஹும்மன்ஷுல்னீ மின் அவ்ஹாலித் தௌஹீத் வஅக்ரிக்நீ பீ-ஐனி பஹ்ரில் வஹ்தா; வஸுஜ்ஜ-பீ-பில் அஹதிய்யா ஹத்தா லா அரா, வலா அஸ்மஅ, வலா அஹுஸ்ஸ இல்லா-பிஹா'**

(பொருள்: அல்லாஹ்வே! தௌஹீதுடைய சகதிகளி(சேறுகளி)லிருந்து என்னை வெளிப்படுத்துவாயாக! எல்லாம் ஒன்றே என்னும் கடலில் என்னை மூழ்கச் செய்வாயாக! அஹதிய்யாவிலே (எல்லாம் ஒன்று என்பதிலே) என்னைப் பதியச் செய்வாயாக! அந்த அஹதிய்யாவைத் தவிர வேறெதனையும் நான் பார்க்காதவனாகவும் கேட்காதவனாகவும் உணராத வனாகவும் இருக்கச் செய்வாயாக!)

இது 'படைத்தவனும் படைக்கப்பட்டவனும் ஒன்றே' என்னும் கோட்பாடாகும். தௌஹீதிலே சேறும் சகதியும் உண்டென்றும், அதிலிருந்து தன்னை வெளிப்படுத்துமாறும் பிரார்த்திப்பதாக மேற்படி ஸலவாத்தின் முற்பகுதி அமைந்துள்ளது. இறைவனை எல்லா வஸ்துக்களிலும் காண்பதற்காக 'எல்லாம் ஒன்றே' என்ற அத்வைதக் கடலில் தன்னை மூழ்கடிக்கச் செய்யுமாறு வேண்டுவதாக அதன் பிற்பகுதி

அமைந்துள்ளது. இதே கொள்கையிலுள்ள கவிஞன் ஒருவன் பின்வருமாறு பாடுகிறான்.

'நாயும் பன்றியும் எமது இறைவன் தான் கோயிலிலுள்ள பூசாரியும் அல்லாஹ்தான்

கிறிஸ்தவர்கள் ஈஸா ﷺ அவர்களை அல்லாஹ்வுடைய குமாரன் என்று சொல்லி ஷிர்க் வைத்தார்கள். 'ஆனால் எல்லாம் ஒன்றே' என்ற கோட்பாட்டிலுள்ளோர் படைப்புகள் அனைத்தையும் அல்லாஹ்வுக்கு இணையாக ஆக்கி ஷிர்க் வைக்கிறார்கள். இந்த முஷ்ரிக்குகள் கூறுவதிலிருந்து அல்லாஹ் மேலானவனாகி விட்டான்.

**முஸ்லிம் சகோதரனே! உன்னைச் ஷிர்க்கில் ஆழ்த்தி விடக்கூடிய மேற்காட்டிய பித்அத்தான ஸலவாத் அமைப்புகளை விட்டு விலகிவிடு! வஹியைக் கொண்டு அறிவிக்கப்பட்டதையன்றி சுயமாக எதனையும் மொழியாத நபியவர்களால் கற்றுத்தரப்பட்ட ஸலவாத்துகளை மொழிவது கொண்டு போதுமாக்கிக் கொள்! அந்த நபியைப் பின்பற்றுவதைக் கொண்டல்லாமல் நேர்வழியோ, வெற்றியோ கிடையாது.**



# அஸ்-ஸலாத்துன் நாரிய்யா

ஸலாத்துன் நாரிய்யா (என்ற பித்அத்தான ஸலவாத்து) அதிகமான முஸ்லிம்களுக்கு மத்தியில் பிரபல்யமாக இருக்கின்றது. எவர் தனது தேவைகள் நிறைவேறவும், கஷ்டங்கள் நீங்கவும் எண்ணம் வைத்து, நேர்ச்சை செய்து 4444 விடுத்தங்கள் இதனை ஓதுவாரோ, அவருடைய நாட்டங்கள் நிறைவேறும் என்பது, இதனை ஓதி வருவோருடைய நம்பிக்கையாகும். இது எந்தவொரு ஆதாரமுமற்ற பிழையான ஒரு நம்பிக்கையாகும்.

குறிப்பாக இதன் வாசகங்களை உற்று நோக்கினால், இது வெளிப்படையானதொரு ஷிர்க்காக இருப்பதைக் காணலாம். அதன் வாசகம் மொழிபெயர்ப்புடன் பின்வருமாறு:- **'அல்லாஹும்ம ஸல்லி ஸலாதன் காமிலதன் வஸல்லிம் ஸலாமன் தாம்மன் அலா ஸய்யிதினா முஹம்மதின் அல்லதி தன்ஹல்லு பிஹில் உஹது வதன்பரிஜு பிஹில் குரபு வதுக்ளா பிஹில் ஹவாஇஜு வதுனாலு பிஹிர்ரகாஇபு வஹுஸ்னுல் கவதிமி வயுஸ்தஸ்கல் கமாமு பிவஜ்ஹிஹில் கரீம் வஅலா ஆலிஹி வஸஹ்பிஹீ பீ-குல்லி லம்ஹதின் வனபஸின் பிஅததி குல்லி மஃலூமின் லக'**

(பொருள்:- அல்லாஹ்வே! பூரணமான ஸலவாத்தையும், நிரப்பமான ஸலாமையும் எங்கள் தலைவர் முஹம்மத் ﷺ அவர்கள் மீது சொல்வாயாக! அவர்களைக் கொண்டே துன்பங்கள் அகலும்; கஷ்டங்கள் நீங்கிவிடும்; தேவைகள் நிறைவேற்றி வைக்கப்படும்; ஆசைகள் பெற்றுக் கொள்ளப்படும்; மரணக்கஷ்டம் நீங்கி நல்ல முறையில் அமைவதும், மழை பொழிவதும் அவர்களது முகத்தைக் கொண்டுதான். கண் இமைக்குமளவும், மூச்சு விடுமளவும், எண்ணிக்கையில் (நபி ﷺ அவர்கள்

மீதும்) அவர்களது குடும்பத்தார் தோழர்கள் அனைவர் மீதும் ஸலவாத்தும் ஸலாமும் சொல்லுவாயாக!)

அல்குர்ஆன் அழைக்கக் கூடியதும், நபி ﷺ அவர்கள் கற்றுத் தரக்கூடியதுமான ஏகத்துவக் கொள்கையானது, துன்பங்களைத் துடைத்தல், நெருக்கடிகளை நீக்குதல், தேவைகளை நிறைவேற்றி வைத்தல், மனிதன் தனது தேவைகளை கேட்கின்றபோது கொடுத்தல் ஆகிய எல்லாக் கருமங்களையும் அல்லாஹ் ஒருவன் மட்டுமேதான் நிறைவேற்றி வைக்கிறான் என்பதை ஒவ்வொரு முஸ்லிமும் உறுதியாக ஏற்றுக் கொள்ள வேண்டும். இதை அவனுக்கு இஸ்லாம் வரையறுத்துக் கூறுகின்றது.

ஒரு முஸ்லிம் துயர் துடைக்கவோ, நோயைக் குணப்படுத்தவோ அல்லாஹ் அல்லாத எவரையும் அழைக்கக் கூடாது. அழைக்கப்படுகின்றவர் ஒரு மலக்காகவோ அல்லது ஒரு நபியாகவோ இருப்பினும் சரியே! இதோ அல்குர்ஆன், அல்லாஹ் அல்லாத நபிமார்களையோ, அவுலியாக் களையோ அழைப்பதை நிராகரிக்கின்றது.

أُولَٰٓئِكَ الَّذِيْنَ يَدْعُوْنَ يَبْتَغُوْنَ اِلٰى رَبِّهِمُ الْوَسِيْلَةَ اَيُّهُمْ اَقْرَبُ وَيَرْجُوْنَ رَحْمَتَهٗ وَيَخَافُوْنَ عَذَابَهٗ ؕ اِنَّ عَذَابَ رَبِّكَ كَانَ مَحْذُوْرًا

**“அவர்கள் (ஆண்டவன் என) அழைப்பவைகளும் (கூட தங்களுக்காகத்) தங்கள் இறைவனிடம் சிபாரிசு செய்வதற்கு (அல்லாஹ்விடம்) மிக நெருங்கியவர் யார் என்பதைத் தேடிக்கொண்டு, அவனுடைய அருளையே எதிர்பார்த்து, அவனுடைய வேதனைக்கும் பயப்படுகின்றன. ஏனென்றால் நிச்சயமாக உமது இறைவனின் வேதனையோ மிகமிகப் பயப்படக்கூடியதே” [அல்குர்ஆன்: 17:57]**

இவ்வசனம் ஈஸா عليه السلام அவர்களை அழைக்கக்கூடிய ஒரு கூட்டத் தாருடைய விஷயத்திலோ, அல்லது மலக்குகளை அழைக்கக் கூடியவர் களுடைய விஷயத்திலோ, அல்லது ஜின்களிலுள்ள ஸாலிஹானவர் களில்

ஒரு கூட்டத்தாரை அழைப்பவர்களுடைய விஷயத்திலோ அருளப் பட்டது என்பதாக முபஸ்ஸிரீன் (அல்குர்ஆன் விரிவுரையாளர்கள்)கள் கூறுகின்றனர்.

قُلْ لَّاۤ اَمْلِكُ لِنَفْسِىْ نَـفْعًا وَّلَا ضَرًّا اِلَّا مَا شَآءَ اللّٰهُ‌ؕ وَلَوْ كُنْتُ اَعْلَمُ الْغَيْبَ لَاسْتَكْثَرْتُ مِنَ الْخَيْرِ ۛۚ وَمَا مَسَّنِىَ السُّۤوْءُ‌ ۛۚ اِنْ اَنَا اِلَّا نَذِيْرٌ وَّبَشِيْرٌ لِّقَوْمٍ يُّؤْمِنُوْنَ

**“அல்லாஹ் நாடினாலன்றி, நான் எனக்கு யாதொரு நன்மையும், தீமையோ செய்துகொள்ள எனக்குச் சக்தியில்லை. நான் மறைவானவற்றை அறியக்கூடுமாயின் நன்மைகளையே அதிகமாகத் தேடிக்கொண்டி ருப்பேன்; யாதொரு தீங்குமே என்னை அணுகியிராது. நான் பாவிகளுக்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவனும், விசுவாசிகளுக்கு நன்மாராயங் கூறுபவனுமேயன்றி வேறில்லை” [அல்குர்ஆன்: 7:188]**

அல்குர்ஆன் மேற்சொன்னவாறு நபியவர்களை நோக்கிக் கட்டளை பிறப்பிக்கின்ற போது தன்னைக் கொண்டு கஷ்டங்கள் நீக்கப்படுமென்றும் துன்பங்கள் துடைக்கப்படுமென்றும் சொல்லப்படுவதை நபியவர்கள் எவ்வாறு பொருந்திக் கொள்வார்கள்? நபியவர்களுடைய பின்வரும் எச்சரிக்கை இதற்கு ஆதாரமாய் அமைகின்றது.

‘நபி ﷺ அவர்களிடம் ஒரு மனிதர் வந்து ‘அல்லாஹ்வும் நீங்களும் நாடினால்’ என்று தனது நாட்டமொன்றைச் சொல்ல வாயெடுத்தார்கள். அப்பொழுது நபியவர்கள் அம்மனிதரை நோக்கி ‘என்னை அல்லாஹ்வுக்கு நிகராக ஆக்கி விட்டாயா? அல்லாஹ் மட்டும் நாடினால் என்று சொல்!’ என்பதாக எச்சரித்தார்கள்’ **[*ஆதாரம்: நஸயீ (ஹஸன்)*]**

மேற்காட்டிய ஸலாத்துந் நாரிய்யாவில் ‘பிஹீ’ என்றுள்ள சொல்லை ‘பிஹா’ என்று மாற்றி ஓதினால் அது பிழையாக மாட்டாது. ஏனென்றால் ‘பிஹீ’ என்றால் நபியவர்கள் மூலம் என்றும் ‘பிஹா’ என்றால் நபியவர்கள் மீது சொல்லப்படும் ஸலவாத் மூலம் என்றும் பொருள்படும். அதேவேளை ‘பிஹா’ என்று மாற்றுவதனாலும் ‘சங்கையான

அவர் முகத்தைக் கொண்டு' என்று பொருள்படும். 'பிவஜ்ஹிஹில் கரீம்' என்ற வார்த்தையை அதிலிருந்து நீக்க வேண்டும்.

'ஸலவாத்' ஒரு வணக்கமாக இருப்பதால், வணக்கத்தைக் கொண்டு வஸீலாத் தேடுவது அனுமதிக்கப்பட்டது என்பதற்கமைவாக, அது சரியானதாகும். ஆனால் நடைமுறையிலுள்ள ஸலவாத் 'பிஹீ' என்று வருவதனால் அதனை ஓதுவது அனுமதிக்கப்பட மாட்டாது.

'பிஹா' என்று மாற்றி ஓதுவது சரியானது என்று இருந்தாலும் இந்த வாசக அமைப்பு சாதாரண மனிதனொருவனால் அமைக்கப்பட்டுள்ளது என்பதை ஒவ்வொரு முஸ்லிமும் கருத்தில் கொள்ள வேண்டும். ஆனால் (தொழுகையின் அத்தஹிய்யாத்தில் ஓதிவரும்) ஸலாதுல் இப்றாஹீமிய்யா என்று கூறப்படும் ஸலவாத் 'மஃஸூமான' முன்பின் பாவங்கள் மன்னிக்கப்பட்ட நபி ﷺ அவர்களால் கற்றுத்தரப்பட்டதாகும். ஸுன்னத்தான ஸலாதுல் இப்றாஹீமிய்யாவை விட்டுவிட்டு பித்அத்தான ஸலாதுந் நாரிய்யாவை நாம் எவ்வாறு ஓதலாம்?

ஸலாதுல் இப்றாஹீமிய்யா ஓதுவது ஸுன்னத் என்றிருந்தாலும், அதனைக்கூட 4444 விடுத்தங்கள் என்று எண்ணிக்கை குறிப்பிட்டு ஓதுவது அனுமதிக்கப்பட்டதன்று. நேர்ச்சை செய்வதற்குரிய ஒவ்வொரு வணக்கமும் அல்லாஹ்வாலும், அவனுடைய ரஸூலாலும் அமைத்துத் தரப்பட்டுள்ளது. 4444 விடுத்தங்கள் என்ற இந்த அமைப்பு அண்மைக் காலத்தில் ஏற்படுத்தப் பட்டதாகும்.



# அல்குர்ஆன் உயிருடன் இருப்பவர்களுக்கே அன்றி இறந்தவர்களுக்குரியது அல்ல

كِتٰبٌ اَنْزَلْنٰهُ اِلَيْكَ مُبٰرَكٌ لِّيَدَّبَّرُوْۤا اٰيٰتِهٖ وَلِيَتَذَكَّرَ اُولُوا الْاَلْبَابِ

**"(நபியே!) அவர்கள் இதன் (இக்குர்ஆனின்) வசனங்களைக் கவனித்து ஆராய்வதற்காகவும், (இதனைக் கொண்டு) அறிவுடையோர் நல்லுணர்ச்சி பெறுவதற்காகவும், மிக்க பாக்கியம்பெற்ற இவ்வேதத்தை நாமே உம்மீது அருள் புரிந்தோம்" [அல்குர்ஆன்: 38:29]**

முன்னோர்களான முஸ்லிம்கள் அல்குர்ஆனுடைய ஏவல்களை எடுத்து நடப்பது கொண்டும் அதன் விலக்கல்களைத் தவிர்ந்து நடப்பது கொண்டும் தங்களுக்குள் போட்டிப் போட்டுக்கொள்பவர்களாக இருந்தனர். அதன் மூலம் இம்மையிலும் மறுமையிலும் நற்பாக்கியவான்களாக ஆகிவிட்டனர். பின்னர் வந்த முஸ்லிம்கள் குர்ஆனுடைய உபதேசங்களை விட்டுவிட்டு அதனை இறந்தவர்களுக்காக ஓதவும், கப்றுகளின் அருகிலும், மரணித்தவர்களின் குடும்பத்தவர்களுக்கு ஆறுதல் கூறும் நாட்களிலும் ஓத ஆரம்பித்தனர். இதன் காரணமாக இழிவும் பிரிவினையும் அவர்களை ஆட்கொண்டு விட்டன. பின்வரும் வசனத்தில் அல்லாஹ் அன்று கூறி வைத்தது இன்று உண்மையாகி விட்டது.

وَقَالَ الرَّسُوْلُ يٰرَبِّ اِنَّ قَوْمِى اتَّخَذُوْا هٰذَا الْقُرْاٰنَ مَهْجُوْرًا

**"(மறுமையில் அல்லாஹ்வுடைய) ரஸூல் ﷺ அவர்கள் 'என் இறைவனே! நிச்சயமாக என்னுடைய ஜனங்கள் இந்தக் குர்ஆனை முற்றிலும் வெறுத்து(த் தள்ளி) விட்டனர்" [அல்குர்ஆன்: 25:30]**

அல்லாஹ் அல்குர்ஆனை அருளிய நோக்கமெல்லாம் உயிருள்ள வர்கள் தமது வாழ்க்கையில் அதனைக் கொண்டு செயல்படுவதற்காகும். குர்ஆன் மரணித்தவர்களுக்கு உரியதன்று. அவர்களுடைய இவ்வுலக செயல்கள் யாவும் மரணத்துடன் அறுந்து விட்டன. அவர்களால் குர்ஆனை ஓதவோ, அதன்படிச் செயல்படவோ முடியாது. நாம் ஓதுவதால் கிடைக்கும் நன்மைகளை இறந்தவர்களுக்காகச் சேர்த்து வைக்கவும் முடியாது. மரணித்த மூமின்களைப்பற்றி நபி ﷺ அவர்கள் பின்வருமாறு கூறுகிறார்கள்.

'மனிதன் மரணித்து விட்டால் அவனுடைய மூன்று செயல்களைத் தவிர மற்றவை அனைத்தும் தொடர்பறுந்து விடுகின்றன.

**ஒன்று** : நிலையான தருமம்.

**இரண்டு** : பயன் தரும் கல்வி. மூன்றுஃ அவனுக்காகப் பிரார்த்தனை செய்யும் ஒரு நல்ல பிள்ளை.' **[*ஆதாரம்: முஸ்லிம்*]**

وَاَنْ لَّيْسَ لِلْاِنْسَانِ اِلَّا مَا سَعٰىۙ

**"மனிதனுக்கு அவன் முயற்சித்துத் தேடிகொண்டதன்றி வேறொன்றும் கிடைக்காது" [அல்குர்ஆன்: 53:39]**

இப்னு கதீர் ﵀ அவர்கள் இவ்வசனத்துக்குப் பின்வருமாறு விளக்கமளிக்கிறார்கள்.

'ஒருவனுடைய பாவத்தை மற்றொருவன் சுமக்க மாட்டான் என்பது எப்படியோ, அவ்வாறே ஒருவன் தனக்குத் தானே தேடிக் கொண்டதன்றி அவனுடைய நன்மையை மற்றொருவனுக்குச் சேர்த்து வைக்க முடியாது'

இமாம் ஸாபிஈ ﵀ அவர்கள் மேற்காட்டிய அல்குர்ஆன் வசனத்தை ஆதாரமாகக் கொண்டு, அல்குர்ஆனை ஓதி, அதன் நன்மைகளை இறந்தவர்களுக்குச் சேர்த்து வைக்க முடியாது என்று தீர்ப்பளித்து

உள்ளார்கள். ஏனென்றால் இது (மரணித்த) அவர்களுடைய முயற்சியோ, செயலோ அல்ல என்றும் கூறினார்கள்.

இதனால் தான் நபி ﷺ அவர்கள் குர்ஆன் ஓதி அதன் நன்மைகளை மரணித்தவர்களுக்குச் சேர்த்து வைப்பதைத் தனது உம்மத்துக்கு மார்க்க மாக்கவுமில்லை. அதன்பால் அவர்களைத் தூண்டவுமில்லை. சரியான ஓர் ஆதாரத்தைக் கொண்டோ, அல்லது ஒரு சைக்கினையைக் கொண்டோ இதனைக் காட்டித் தரவுமில்லை.

ஸஹாபாக்களில் ஒருவரைக் கொண்டேனும் இது ஒரு நடைமுறையாக எமக்கு வந்ததில்லை. இது ஒரு நல்ல செயலாக இருந்திருக்குமென்றால், இவ்விஷயத்தில் ஸஹாபாக்கள் எம்மைவிட முந்திக்கொண்டிருப்பார்கள். அல்லாஹ்வை நெருங்கக்கூடிய வழிகள் ஆதாரங்களைக் கொண்டு வந்தவைகளால் மட்டிடப்பட்டுள்ளன. அபிப்பிராயங்களைக் கொண்டு அவை விரிவடையமாட்டா.

இறந்தவருக்காக துஆக் கேட்பது, தான தருமங்கள் கொடுப்பது போன்றவற்றுடைய நன்மைகள் இறந்தவரைச் சென்றடையும் என்பது கருத்து முரணில்லாத ஆதாரபூர்வமானதாகும். மார்க்கத்தை அமைத்துத் தந்த நபி ﷺ அவர்கள் இவ்விஷயத்தில் நமக்கு வழிகாட்டியுள்ளார்கள்.

குர்ஆன் ஓதப்படுமென்றால் அது மரணித்தவருக்குத்தான் என்று கருதுமளவு சமூகத்தில் சிந்தனை மாறுபட்டு விட்டது. குர்ஆன் ஓதுதல் மௌத்துக்கோர் அடையாளம் என்றளவு நிலைமை இருக்கின்றது. ஒருவருடைய வீட்டில் குர்ஆன் ஓதும் சத்தம் கேட்டால் அங்கு எவரேனும் மரணித்து விட்டாரோ என்று நினைக்குமளவு இன்று குர்ஆனுடைய நிலை இருக்கின்றது.

நோயுற்றிருந்த ஒருவரைச் சந்திக்க வந்தவர்களில் ஒருவர் அவருக்கருகில் குர்ஆன் ஓத ஆரம்பித்தார். இதனைச் செவியுற்ற அந்த

நோயாளியுடைய தாயார் 'நீர் குர்ஆன் ஓதுமளவு எனது மகன் மரணித்து விடவில்லை' என்று கத்திக்கொண்டே சொன்னாள்.

ஒருவர் ஒரு நோயாளிக்கு அருகில் ஸூரத்துல் பாத்திஹாவை ஓதிக் கொண்டிருந்தார். அந்நோயாளியின் சகோதரி இதனைச் செவிதாழ்த்திய போது, தான் இதனை விரும்பவில்லை என்றும், நீ இதனை அவருக்கருகில் ஓதும்போது அவருடைய மௌத்தை இது நினைவுப்படுத்துகின்றது என்றும் அப்பெண்மணி கூறினாள். ஏனென்றால் மனிதன் மௌத்தை விரும்ப மாட்டான்; அதனை வெறுக்கின்றவனாகவே இருக்கின்றான்.

தொழுகையை விட்ட ஒருவன் தனது மௌத்துக்குப் பின்னால் தனக்காக ஓதப்படும் குர்ஆனின் மூலம் என்ன பயனை அடையப் போகிறான்? குர்ஆனோ இவனுக்கு 'வைல்' என்னும் நரகத்தையும் கடுமையான தண்டனையையும் பற்றி முன்னறிவிப்புச் செய்து கொண்டிருக்கின்றது.

فَوَيْلٌ لِّلْمُصَلِّيْنَۙ الَّذِيْنَ هُمْ عَنْ صَلَاتِهِمْ سَاهُوْنَۙ

**“தொழுகையில் பாராமுகமாயிருக்கும் தொழுகையாளிகளுக்குக் கேடுதான். அவர்கள் (தொழுத போதிலும் மக்களுக்குக்) காண்பிக்கவே தொழுவார்கள்”**

**[அல்குர்ஆன்: 107:4,5]**

தொழுகின்றவன் உரிய நேரத்தில் தொழாமல் பாராமுகமாயிருக்கும் போது, அவனுக்கு கிடைக்கும் தண்டனை இதுவென்றால், அறவே தொழாதவனின் நிலை என்ன?

மரணித்தவருக்காகக் குர்ஆன் ஓதும் மக்கள் ஆதாரமாகக் கொள்ளும் 'இக்ரஊ அலா மௌத்தாகும் யாஸீன்' என்ற ஹதீஸ் தரக்குறைவானதும் 'ஸஹீஹ்' அல்லாததுமாகும் என்று இப்னுல் கத்தான் ﵀ அவர்கள் கூறியுள்ளார்கள்.

இமாம் தாரகுத்னீ ﵀ அவர்கள் இதனை அறிவிப்பாளர்கள் வரிசை சரியானதல்ல என்றும், ஸஹீஹ் அல்லாதது என்றும் கூறியுள்ளார்கள்.

இந்த ஹதீஸிலுள்ள 'மௌத்தா' என்ற சொல்லுக்கு மரணம் சமீபித்தவர், மரணிக்கக் கூடியவர், மரணித்தவர் என்று பல அர்த்தங்க ளுண்டு. இதுபோன்ற வேறு சில ஹதீஸ்களின் ஆதாரத்துக் கமைவாக 'மௌத்தா' என்ற சொல்லுக்கு மரணம் சமீபித்த (ஸக்ராத்துடைய நிலையிலுள்ள)வர் என்றே கருத்துக் கொள்ள வேண்டும். இதன்படி இந்த ஹதீஸுக்கு 'உங்களில் மரணம் சமீபித்தவருக்கு யாஸீன் ஸூராவை ஓதுங்கள்' என்பதே அர்த்தமாகும்.

நபி ﷺ அவர்களோ, ஸஹாபாக்களோ மரணித்தவருக்காக யாஸீன் ஸூராவையோ, ஸூரா பாத்திஹாவையோ, அல்லது குர்ஆனிலுள்ள வேறு ஸூராக்களையோ ஓதவில்லை.

நபி ﷺ அவர்கள் தனது தோழர்களை நோக்கி மையித்தை அடக்கஞ் செய்தபின் 'உங்களுடைய சகோதரனுக்காக பிழை பொறுக்கத் தேடுங்கள்; அவருக்காக(க் கலிமாவைக் கொண்டு) உறுதிப்பாட்டைத் தேடுங்கள்; ஏனென்றால் அவர் இப்பொழுது கேள்வி கேட்கப்படுகிறார்' என்று கூறினார்கள்' **[*ஆதாரம்: அபூதாவூத் (ஸஹீஹ்)*]**

முஸ்லிமே! உனக்கென்ன கேடு பிடித்துள்ளது? உனது வாழ்க்கையில் குர்ஆனை கைவிட்டு விட்டாய்; அதனைக் கொண்டு செயல்படவில்லை. உனக்கு மௌத்து நெருங்குகின்ற போது இலேசான முறையில் நீ மரணமடைவதற்காக உனக்கு முன்னால் மக்கள் யாஸீன் ஸூராவை ஓதுவார்கள். குர்ஆன் அருளப்பட்டது அதன்படி நீ வாழ்வதற்காகவா? அல்லது (இலேசாக) மரணிப்பதற்காகவா?

அடக்கத்தலத்தில் நுழையும்போது பாத்திஹா ஸூராவையும், வேறு சில ஸூராக்களையும் ஓதுமாறு நபியவர்கள் தனது தோழர்களுக்குக்

கற்றுக் கொடுக்கவில்லை. ஆனால் பின்வருமாறு ஓதக் கற்றுக் கொடுத்தார்கள்.

**‘அஸ்ஸலாமு அலைக்கும் அஹ்லத் தியாரி மினல் மூமினீன் வஇன்னா இன்ஷா அல்லாஹூ பிகும் லலாஹிகூன் அஸ்அலுல்லாஹ லனா வலகுமுல் ஆபியா’**

(பொருள்: மூமின்களான கப்ராளிகளே! அஸ்ஸலாமு அலைக்கும்; இன்ஷா அல்லாஹ் நாங்களும் உங்களுடன் வந்து சேர்ந்துக் கொள்ளக் கூடியவர்களாக இருக்கின்றோம். அல்லாஹ் எங்களையும் உங்களையும் (அவனுடைய வேதனையை விட்டுப்) பாதுகாக்குமாறு வேண்டுகிறேன்)

**[ஆதாரம்: *முஸ்லிம்*]**

மேற்படி ஹதீஸ் இறந்தவர்களுக்காகப் பிரார்த்தனைப் புரியுமாறு நமக்கு கற்றுத் தருகின்றதேயன்றி, அவர்களிடம் உதவித் தேட கற்றுத்தரவில்லை.

உயிருடனிருப்பவர்களில் எவர்களுக்கெல்லாம் செயல்பட முடியுமோ, அவர்களுக்குக் குர்ஆனை ஓதிக் காட்டுவதற்காக அல்லாஹ் அதனை அருளியுள்ளான். (மக்கள் எவ்வித ஆதாரமுமின்றி இறந்தவர்களுக்காக ஓதப் பயன்படுத்தும்) யாஸீன் ஸூராவில் 70ம் வசனத்தில் அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான்.

لِّيُنْذِرَ مَنْ كَانَ حَيًّا وَّيَحِقَّ الْقَوْلُ عَلَى الْكٰفِرِيْنَ

**“(இந்தக் குர்ஆன்) உயிரோடிருப்பவர்களுக்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்து (மரித்தோர் போன்ற) நிராகரிப்போர் மீது தண்டனையைப் பற்றிய வாக்கை உறுதிப்படுத்துகின்றது” [அல்குர்ஆன்: 36:70]**

இந்தக் குர்ஆனை ஓதும்போது இறந்தவர்களால் செவிதாழ்த்த முடியாது; இதனைக் கொண்டு செயல்படவும் அவர்களால் முடியாது.

அல்லாஹ்வே! நபி ﷺ அவர்கள் நடந்த வழியில் சங்கையான இந்தக் குர்ஆனைக் கொண்டு செயல்படும் வாய்ப்பை எங்களுக்குத் தந்தருள்வாயாக!



# தடுக்கப்பட்ட 'கியாம்' (எழுந்து நிற்குதல்)

'எவனொருவன் தனக்காக மக்கள் எழுந்து நின்று மரியாதை செய்ய வேண்டுமென விரும்புகிறானோ, அவன் தனது இருப்பிடத்தை நரகத்தில் தேடிக் கொள்ளட்டும்' என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.

**[ஆதாரம்: *அஹ்மத் (ஸஹீஹ்)*]**

'ஸஹாபாக்களுக்கு நபி ﷺ அவர்களை விட மிக விருப்பத்துக்குரிய எந்த ஒரு மனிதரும் இருக்கவில்லை. நபியவர்களைக் கண்டால் அவர்கள் (மரியாதைக்காக) எழுந்து நிற்க மாட்டார்கள். நபியவர்கள் இதனை வெறுப்பதனாலேயே அவ்வாறு எழுந்து நிற்க மாட்டார்கள்' என்று அனஸ் ؓ அவர்கள் கூறினார்கள். **[ஆதாரம்: *திர்மிதி (ஸஹீஹ்)*]**

எந்த ஒரு மனிதன் தனக்கு மரியாதை செய்வதற்காக தான் செல்லுமிடத்தில் அமர்ந்திருப்பவர்கள் எழுந்து நின்று மரியாதை செய்ய வேண்டுமென விரும்புகிறானோ, அவன் நரகம் பிரவேசிப்பதற்கு இந்த செயல் காரணமாய் அமைகின்றது. ஸஹாபாக்களைப் பொறுத்தமட்டில், நபி ﷺ அவர்களை மிகக் கடுமையாக நேசிக்கின்றவர்களாக இருந்தார்கள். இவ்வாறு இருந்தும் அவர்கள் அமர்ந்து இருக்கும் இடத்திற்கு நபியவர்கள் சமூகந்தந்தால், எழுந்து நிற்க மாட்டார்கள். இதனை நபியவர்கள் வெறுத்ததனாலேயே அவ்விதம் செய்யாதிருந்தார்கள்.

ஜனங்கள் சில மனிதர்களுக்காக எழுந்து நின்று மரியாதை செய்வதை வழமையாக்கிக் கொண்டுள்ளார்கள். ஒரு ஷைக் பாடம் நடத்துவதற்காகப் பிரவேசித்தால், அல்லது ஒரு இடத்தைத் தரிசிக்க சென்றால், இவ்வாறே ஒரு ஆசிரியர் மாணவர்களிடத்தில் நுழைந்தால் மாணவர்கள் உடனடியாக எழுந்து நிற்க வேண்டும் என்பதை

வழமைப்படுத்திக் கொண்டுள்ளார்கள். எவரேனும் அவ்வாறு எழுந்து நிற்கத் தவறினால், அவர் மரியாதைக் குறைவாக நடந்துக் கொண்டார் என்று கூறி, இழிவுபடுத்தப்படுவார்; அதட்டப்படுவார்.

ஷைஹ் அல்லது ஆசிரியர் ஜனங்கள் தமக்காக எழுந்து நிற்கும் போது, இதனைத் தடுக்காது மௌனமாக இருப்பதும், அல்லது எழுந்து நிற்கத் தாமதமாகின்றவர்கள் இழிவாகக் கருதப்படுவதும், ஆசிரியரும் ஷைகும் தமக்காக எழுந்து நின்று மரியாதை செய்வதை விரும்புகிறார்கள் என்று கருத இடமுண்டு. இதன் மூலம் இவர்கள் நரகில் பிரவேசிப்பதற்குத் தம்மைத் தயார்படுத்திக் கொள்கிறார்கள்.

தமக்காக எழுந்து நிற்பதை இவர்கள் விரும்பவில்லை என்றால், அல்லது வெறுப்பார்களென்றால் எழுந்து நிற்பவர்களுக்கு இதனால் ஏர்படும் தீய விளைவுகளைக் கற்றுக் கொடுத்திருப்பார்கள்; அல்லது எழுந்து நிற்பதைத் தடுத்திருப்பார்கள். எழுந்து நிற்பதைத் தடைசெய்யும் ஹதீஸ்களை விளக்கியிருப்பார்கள்.

உள்ளே பிரவேசிக்கின்றவர்களுக்காகவோ, அறிஞர்களுக்காகவோ எழுந்து நின்று மரியாதை செய்கின்றவர்கள், ஷைத்தானுக்கு உதவுகின்றவர் களாகவே இருக்கின்றனர். 'நீங்கள் உங்கள் சகோதரனுக்கு எதிரான முறையில் ஷைத்தானுக்கு உதவுகின்றவர்களாக இருக்காதீர்கள்' என்று நபி ﷺ அவர்கள் கூறியுள்ளார்கள். **[*ஆதாரம்: புகாரி*]**

'நாங்கள் ஆசிரியர்களுக்காகவும், ஷைகுமார்களுக்காகவும் எழுந்து நிற்பதெல்லாம் அவர்கள் கற்ற கல்விக்கு மரியாதை செய்வதற்காகும்' என்று சிலர் கூறுகின்றனர். அவர்களை நோக்கி நாம் பின்வருமாறு கேட்க விரும்புகிறோம். நீங்கள் நபி ﷺ அவர்களுடைய அறிவில் சந்தேகிக் கின்றீர்களா? அவர்களுடைய தோழர்கள் நபியவர்களுக்கு அளித்த மரியாதையில் சந்தேகிக்கின்றீர்களா? நபியவர்கள் வரும் போதெல்லாம் அவர்கள் எழுந்து நிற்கவில்லை. ஏனென்றால் எழுந்து நிற்பதை

மரியாதை என்று இஸ்லாம் கணிக்கவில்லை. நபியவர்களுக்கு வழிபடுதல், அவர்களுடைய கட்டளைகளுக்கு கட்டுபடுதல், ஸலாம் சொல்லல், முஸாபஹா (கைலாகு) செய்தல் போன்றவற்றையே இஸ்லாம் மரியாதை என்று கணிக்கின்றது.

***நாங்கள் ஒரு சபையில் அமர்ந்திருக்கும் போது ஒரு செல்வந்தார் நுழைந்தால், ஜனங்கள் அவருக்காக எழுந்து நிற்பார்கள். அதேவேளை ஓர் ஏழை நுழைந்து விட்டாலோ, அவருக்காக எவரும் எழுந்து நிற்பதில்லை. இந்த நடைமுறை, அந்த ஏழைக்கு செல்வந்தன் மீதும், சபையில் இருப்பவர்கள் மீதும் குரோத மனப்பான்மையொன்றை ஏற்படுத்தி விடுகின்றது. இங்கு இஸ்லாம் தடைசெய்த பாரபட்சம் முஸ்லிம்களுக் கிடையில் ஏற்பட்டு விடுகின்றது. எழுந்து நின்று மரியாதை செய்ததே இதற்குக் காரணமாய் அமைகின்றது.***

சிலவேளை மக்கள் எழுந்து நின்று மரியாதை செய்யாத அந்த ஏழை அல்லாஹ்விடத்தில், அந்தச் செல்வந்தனை விட அந்தஸ்தில் உயர்வாக இருக்க இடமுண்டு. இதுபற்றி அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான்.

اِنَّ اَكْرَمَكُمْ عِنْدَ اللهِ اَ تْقٰكُمْ

**“உங்களில் எவன் மிகவும் பயபக்தியுடையவனாக இருக்கிறானோ, அவன்தான் அல்லாஹ்விடத்தில் நிச்சயமாக கண்ணியவானாவான்” [அல்குர்ஆன்: 49:13]**

‘உள்ளே பிரவேசிக்கின்றவனுக்காக சபையிலுள்ளோர் எழுந்து நின்று மரியாதை செய்யாவிட்டால், அவன் அமர்ந்திருப்பவர்களைப் பற்றி ஏதாவது நினைக்க இடமுண்டு’ என்று சிலவேளை ஒருவன் சொல்லலாம். சமூகம் கொடுப்பவனுக்கு நாங்கள் பின்வருமாறு விளக்கமளிப்போம்.

அவர்மீது நாங்கள் கொண்டிருக்கும் நேசமெல்லாம் எமது உள்ளங்களிலுண்டு. நாங்களோ, தனக்காக எழுந்து நின்று மரியாதை செய்வதை வெறுக்கக் கூடியவர்களாயிருந்த நபி ﷺ அவர்களைப் பின்பற்றுகிறோம். அவர்களுக்காக எழுந்து நிற்காத ஸஹாபாக்களைப்

பின்பற்றுகிறோம். சபைக்கு சமூகமளிப்பவர் (இந்தச் செயலின் மூலம்) நரகம் பிரவேசிப்பதை வெறுக்கிறோம்.

சில ஷைகுமார்கள் 'கண்ணியத்துக்குரிய நபி ﷺ அவர்களுக்காக எழுந்து நிற்பது என்மீது கட்டாயமானதாகும்' என்று ஹஸ்ஸான் ؓ அவர்கள் பாடியதாக ஒரு கவிதையைக் கூறுவார்கள். இது சரியான ஆதாரமுடையதன்று.



# எழுந்து நிற்பதற்கு அவசியமானதும், அங்கீகரிக்கப்பட்டதும்..

சமூகமளிப்பவருக்காக எழுந்து நிற்பதை ஆகுமாக்கக்கூடிய ஸஹீஹான ஹதீஸ்களும், ஸஹாபாக்களுடைய நடைமுறையுமுண்டு. அந்த ஹதீஸ்களை விளங்குவதற்காக எங்களுடன் வாருங்கள்.

நபி ﷺ அவர்கள் தன்னிடத்தில் பாத்திமா ؓ அவர்கள் வந்தால் எழுந்து நிற்பார்கள். அவ்வாறே நபி ﷺ அவர்கள் பாத்திமா ؓ அவர்களிடம் சென்றாலும், அவர்கள் எழுந்து நிற்பார்கள். இது அனுமதி யுடையதும், தேவையானதுமாகும். ஏனென்றால் தன்னிடத்தில் வந்த ஒரு விருந்தாளியை சந்தித்து அவரை சங்கைப்படுத்துவதற்காக எழுந்து நிற்பதாகவே இது அமைகின்றது. நபி ﷺ அவர்களின் சொல் பின்வருமாறு அமைந்துள்ளது.

'எவன் அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்புகிறானோ அவன் தனது விருந்தினரை கண்ணியப்படுத்தவும்' [*ஆதாரம்: முஸ்லிம்*]

இங்கு எழுந்து நிற்றல் என்பது வீட்டுச் சொந்தக்காரர் மட்டும் செய்யும் ஒரு செயலாகும்.

'உங்கள் தலைவருக்காக எழுந்து நில்லுங்கள்' என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். [*ஆதாரம்: புகாரி, முஸ்லிம்*]

இந்த ஹதீஸ் கூறப்பட்ட காரணம் யாதெனில், ஸஃது ؓ அவர்கள் காயம்பட்டவர்களாக இருந்தார்கள். யஹூதிகளுக்கு மத்தியில் தீர்ப்பொன்று வழங்குவதற்காக அவரை நபி ﷺ அவர்கள் அனுப்பி வைத்தார்கள். அவர்

ஒரு கோவேறு கழுதையில் சென்று வந்தார். அவர் திரும்பி வந்து சேர்ந்தபோது, நபியவர்கள் அங்கிருந்த மதினாவாசிகளை நோக்கி 'உங்களுடைய தலைவரிடம் எழுந்து சென்று அவரை (வாகனத்திலிருந்து) இறக்கி விடுங்கள்' என்று கூறினார்கள். அப்பொழுது அவர்கள் எழுந்து சென்று அவரை இறக்கி விட்டார்கள்.

இந்த 'கியாம்' (எழுந்து நிற்றல்) மதினாவாசிகளின் தலைவரான ஸஃது ﵁ அவர்களுக்கு உதவி செய்ய தேவைப்பட்டது. அவர்கள் காயம் பட்டவர்களாகக் கழுதையின் மீது அமர்ந்திருந்தார்கள். அவர்களால் சுயமாக அதிலிருந்து இறங்க முடியாதிருந்தபோது, அவர்கள் விழுந்து விடாதிருப்பதற்காகவே, அவர்களை இறக்கி விடுமாறு அன்ஸாரிகளை நோக்கி மேற்கண்டவாறு நபி ﷺ அவர்கள் கூறினார்கள். இச்சந்தர்ப்பத்தில் நபி ﷺ அவர்களோ, ஏனைய ஸஹாபாக்களோ எழுந்து நிற்கவில்லை.

நபி ﷺ அவர்களாலும், அவர்களுடைய உத்தரவின்பேரில் அவர்களது தோழர்களாலும் புறக்கணிக்கப்பட்டிருந்த கஃபு இப்னு மாலிக் ﵁ அவர்கள் பள்ளிவாசலினுள் நுழையும்போது, அவருடைய தௌபாவை அல்லாஹ் அங்கீகரித்து வஹீ அறிவித்த செய்தியை, அவருக்கு சந்தோசத்துடன் அறிவிப்பதற்காக அங்கு அமர்ந்திருந்த ஸஹாபாக்களில் தல்ஹா ﵁ அவர்கள் மட்டும் வேகமாகச் சென்று அறிவித்தார். கவலையுடனிருந்த ஒருவருடைய தௌபாவை அல்லாஹ் அங்கீகரித் துள்ளான் என்ற சந்தோசச் செய்தியை அறிவிப்பதற்காக இவ்வாறு எழுந்து செல்வது அனுமதிக்கப்படுகின்றது.

இங்கு கூறப்பட்ட ஹதீஸ்கள் அனைத்தும் உங்களது தலைவர், தல்ஹா ﵁, பாத்திமா ﵂ என்று குறிப்பாக வந்துள்ளது. அத்துடன் ஷைகுமார்கள், ஆசிரியர்கள் போன்றோருக்குச் செய்யும் சங்கையும் இதுவும் சமமாக மாட்டாது என்பதை நடைமுறை ரீதியாகக் காணலாம்.

மேலே கூறப்பட்ட ஹதீஸ்களைக் கவனித்துப் பார்த்தால், வீட்டிலுள்ளவர் அல்லது சபையிலுள்ளவர்களில் உதவிக்காச் சிலர், அல்லது சபையிலிருந்த ஒருவர் மட்டும் என்ற நிலையிலேயே எழுந்து கண்ணியப்படுத்தியுள்ளனர். ஆனால் ஷைகு அல்லது ஆசிரியர் (அல்லது அரசியல் தலைவர்) போன்றோருக்காக சபையிலுள்ளோர் அனைவரும் எழுந்து நிற்கின்றனர். இதனால் முன்னையதும் பின்னையதும் நோக்கம் ஒன்றல்ல; சமமானதல்ல என்பதைக் காணலாம்.



# ளஈபான, மௌளூஆன ஹதீஸ்கள்

நபிﷺ அவர்களைப் பற்றிக் கூறப்படும் ஹதீஸ்களில் ஸஹீஹ் (சரியானது) ஹஸன்(நல்லது), ளஈப்(பலவீனமானது), மௌளூஃ(கற்பனை செய்யப்பட்டது) என்று பல வகையுண்டு.

இமாம் முஸ்லிம் ﵀ அவர்கள் தனது ஸஹீஹ் முஸ்லிம் ஹதீஸ் கிரந்தத்தின் முன்னுரையில் 'ளஈப்'களைப் பற்றிய எச்சரிக்கையைப் பின்வருமாறு தலையங்கமிட்டுக் கூறுகிறார்கள். 'பாபுந்-நஹ்யி அனில் ஹதீஸி பி-குல்லி மா-ஸமிஅ' (செவியேற்பதெல்லாவற்றைக் கொண்டுமுள்ள ஹதீஸைப் பற்றிய தடை) பின்வரும் நபிவாக்கை ஆதாரமாகக் கொண்டே இந்தத் தலையங்கத்தைக் கூறியுள்ளார்கள். 'பொய்யாக இருக்கும் நிலையில் செவியேற்ப தெல்லாவற்றைக் கொண்டும் ஹதீஸ்களை அறிவிக்கும் மனிதன் பிடிக்கப்படுவான். (வினவப்படுவான்)'

[ஆதாரம்: முஸ்லிம்]

பின்வரும் நபிவாக்கை ஆதாரமாகக் கொண்டு ளஈபான அறிவிப்பாளர்களின் அறிவிப்புக்களைப் பற்றி நவவி ﵀ அவர்கள் தனது ஷரஹுு ஸஹீஹ் முஸ்லிமில் கூறுகிறார்கள்.

'நீங்களோ உங்களுடைய மூதாதையர்களோ கேட்டிராதவற்றை உங்களுக்கு அறிவிக்கக்கூடிய மனிதர்கள் எதிர்காலத்தில் தோன்றுவார்கள். உங்களையும் (புதுமைகளைச் சொல்லும்) அவர்களையும் எச்சரிக்கிறேன்'

[ஆதாரம்: முஸ்லிம்]

‘நபி ﷺ அவர்களைப்பற்றி அவர்கள் சொல்லாத எதனையும் கூறுகிறவன் நரகம் பிரவேசிப்பான்’ என்ற பாடத்தில் பின்வரும் ஹதீஸை இமாம் இப்னு ஹிப்பான் ﵀ அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

‘நான் சொல்லாத எதனையும் என்மீது எவரேனும் கற்பனைசெய்து கூறுவானென்றால், அவன் தனது இருப்பிடத்தை நரகில் தேடிக் கொள்ளட்டும்’

‘மௌளூ’ஆன ஹதீஸ்களைப்பற்றி நபி ﷺ அவர்கள் பின்வருமாறு எச்சரிக்கை செய்துள்ளார்கள்.

‘எவனொருவன் என்மீது மனமுரண்டாய்ப் பொய்யுரைக்கிறானோ, அவன் தனது இருப்பிடத்தை நரகில் ஆக்கிக் கொள்ளட்டும்’

**[ஆதாரம்: *புகாரி, முஸ்லிம்*]**

கவலையான நிகழ்ச்சி என்னவெனில் அதிகமான ஷைய்குமார்கள் மௌளூஆன ஹதீஸ்களை தமது வழிமுறைகளுக்கும் (பிழையான) நம்பிக்கைகளுக்கும் ஆதாரமாகக் காட்டுகின்றனர். அவ்வாறான ஹதீஸ்களில் ‘எனது உம்மத்தில், ஏற்படும் கருத்து முரண்பாடு ஓர் அருளாகும்’ என்று நபி ﷺ அவர்கள் கூறியதாக கூறுகின்றனர். அல்லாமா இப்னு ஹஸ்ம் ﵀ அவர்கள் ‘இது ஹதீஸ் அல்ல என்றும் இது பிழையானதும் பொய்யாக கற்பனைச் செய்யப்பட்டதுமாகும்’ என்றும் கூறுகிறார்கள்.

ஏனென்றால் கருத்து முரண்பாடு ஓர் அருளென்றால், கருத்து ஒருமைப்பாடு ஓர் இழிவாக இருக்க வேண்டும். இது ஒரு முஸ்லிம் கூறும் வார்த்தையன்று.

‘நீங்கள் சூனியத்தைக் கற்றுக் கொள்ளுங்கள். அதனைக் கொண்டு செயல்படாதீர்கள்’ என்று நபியவர்கள் கூறியதாக மற்றொரு பொய்

ஹதீஸ் கற்பனை செய்யப்பட்டுள்ளது. இதல்லாத இன்னும் பல கற்பனை ஹதீஸ்கள் உண்டு.

'உங்களுடைய பிள்ளைகளையும், உங்களிடையே உள்ள பைத்தியக் காரர்களையும் பள்ளிவாசல்களை விட்டு அப்புறப்படுத்துங்கள்' என்பது பரவலாகச் சொல்லப்படும் மற்றுமொரு ஹதீஸாகும். இப்னு ஹஜ்ர் ﵀ அவர்கள் இதனை 'ளஈப்' என்று கூறியுள்ளார்கள். இப்னு ஜவ்ஸி ﵀ அவர்கள் இதனை சரியானதல்ல என்றும், அப்துல்ஹக் ﵀ அவர்கள் இதற்கு அடிப்படையே கிடையாது என்றும் கூறியுள்ளார்கள்.

பின்வருமாறு அமைந்துள்ள நபி ﷺ அவர்களுடைய ஒரு வாக்கு ஸஹீஹான ஹதீஸில் பதிவாகியுள்ளது.

'உங்களுடைய பிள்ளைகள் ஏழு வயதை அடைந்ததும் அவர்களுக்குத் தொழுகையைக் கற்றுக்கொடுங்கள். அவர்கள் பத்து வயதை அடைந்தபோது(ம் தொழ வில்லையென்றால்) அதற்காக அவர்களை அடியுங்கள்' **[ஆதாரம்: அஹ்மத் (ஸஹீஹ்)]**

நபி ﷺ அவர்கள் மிம்பரில் இருந்துகொண்டு தனது தோழர்களுக்குத் தொழுகையைக் கற்றுக் கொடுத்தது போலவே பிள்ளைகளுக்குக் கற்றுக் கொடுக்கும் தொழுகை பள்ளிவாசலில் அமையும். நபி ﷺ அவர்களுடைய பள்ளிவாசலில் பருவமடையாத பிள்ளைகள் இருந்துள்ளனர்.

திர்மிதி அறிவிக்கின்றார்; அல்லது அவரல்லாதவர் அறிவிக்கின்றார் என்று வெறுமனே எம்மால் கூற முடியாது. ஏனென்றால் சிலவேளை அவர்கள் ஸஹீஹ் அல்லாத ஹதீஸ்களையும் அறிவிப்பதுண்டு. அதனால் ஸஹீஹ், ஹஸன், ளஈப் என்று ஹதீஸின் தரத்தையும் சேர்த்து அறிவிப்பது அவசியமாகின்றது.

இமாம் புகாரி ﵀ அறிவித்தார், இமாம் முஸ்லிம் ﵀ அறிவித்தார் என்று நாம் சொல்வது கொண்டு போதுமாக்கியுள்ளோம். ஸஹீஹ் என்ற

வார்த்தையை பயன்படுத்துவதற்கு அவசியமில்லை. ஏனென்றால் அவ்விரு வரின் ஹதீஸ்களும் ஸஹீஹானவைகளாகும்.

ளஈபான ஹதீஸ் அதன் அறிவிப்பாளர் வரிசையிலும் வாசகத்திலும் குறையுண்டு என்பதால், அது நபி ﷺ அவர்களுடன் தொடர்புடையதாக இருக்காது.

எங்களில் ஒருவர் சந்தைக்குச் சென்றபோது, கொழுப்புள்ள இறைச்சியையும், மெலிந்த, நலிந்த இறைச்சியையும் கண்டால் கொழுத்ததை எடுத்துக் கொண்டு மெலிந்ததை விட்டு விடுவார். 'உழ்ஹிய்யா' கொடுக்கும்போது கொழுத்த மிருகத்தைத் தேர்ந்தெடுக்குமாறும், மெலிந்த பலஹீனமானதை விட்டு விடுமாறும் இஸ்லாம் எமக்குக் கட்டளை யிடுகின்றது. அவ்வாறெனில் ஸஹீஹான ஹதீஸ் தாராளமாக இருக்கும் போது ளஈபான ஹதீஸை எடுப்பது எவ்வாறு சரியானதாகும்?

நபி ﷺ அவர்கள் சொன்னார்கள் என்று ஸஹீஹான ஹதீஸைக் குறித்துச் சொல்வது போன்று ளஈபான ஹதீஸைக் குறித்துச் சொல்லக் கூடாதென முஹத்திஸீன் (ஹதீஸுடைய உலமாக்)கள் சட்டமியற்றி யுள்ளார்கள். எனினும் ஸஹீஹிலிருந்து ளஈப் பிரித்துக் காட்டப்பட வேண்டும்.

பின்னால் வந்த சில உலமாக்கள் சில நிபந்தனைகளுடன் ளஈபான ஹதீஸ்களை ஆதாரமாகக் கொள்ளலாம் என்று கூறுகின்றனர்.

- அமல்களின் சிறப்புக்களில் மட்டும் அது எடுக்கப்பட வேண்டும்.
- அது ள ஈபில் கடுமை இல்லாததாக இருக்க வேண்டும்.
- ஸஹீஹுடைய அடிப்படையில் கீழ் அது அமைக்கப்பட்டிருக்க வேண்டும்.
- செயல்படுத்தும்போது, உறுதியான ஒன்றாக நம்பி ஏற்றுக் கொள்ளதிருக்க வேண்டும்.

இக்கால மக்களில் அதிகமானவர்கள் இந்நிபந்தனைகளை கவனியாது கண்டபடி ஊபானவற்றைக் கடைப்பிடிக்கிறார்கள். (சிலர் சட்டங்களுக்கு ஆதாரமாகக் கூட இவற்றை எடுப்பதுண்டு)



# மவுளூஆன ஹதீஸ்களில் அடிப்படையானவற்றில் சில..

1. அல்லாஹ் தனது நூரி(ஒளியி)லிருந்து ஒரு பிடியை எடுத்து அதனை நோக்கி நீ முஹம்மதாக ஆகிவிடு! என்று சொன்னான்.

2. ஜாபிரே! அல்லாஹ் முதலாவதாகப் படைத்தது உனது நபி முஹம்மத் ﷺ அவர்களின் ஒளியையாகும்.

3. எனது அந்தஸ்தைக்கொண்டு நீங்கள் வஸீலாத் தேடுங்கள். (இதற்கு எந்தவித அடிப்படையுமில்லை)

4. எவனொருவன் ஹஜ் செய்து விட்டு என்னை (எனது கப்றை) ஸியாரத் செய்யவில்லையோ அவன் என்னை வெறுத்தவனாவான்.

நபி ﷺ அவர்கள் கூறியதாகக் கற்பனை செய்யப்பட்டுள்ள மேற்படி நான்கு (பொய்) ஹதீஸ்களையும் ஹாபிழ் தஹபீ ؒ அவர்கள் மவுளூ ஆனவை என்று கூறியுள்ளார்கள்.

5. நெருப்பு விறகைத் தின்பது போன்று, பள்ளிவாசலில் கதைப்பது நன்மைகளைத் தின்றுவிடும்.

நபியவர்கள் சொன்னதாகக் கூறப்படும் மேற்படி கற்பனை ஹதீஸுக்கு அடிப்படையே கிடையாது என்று ஹாபிழ் அல்-இறாகி ؒ அவர்கள் கூறியுள்ளார்கள்.



# நாம் கப்றுகளை ஸியாரத் செய்வது எவ்வாறு?

'நான் உங்களுக்குக் கப்றுகளை ஸியாரத் செய்வதைத் தடுத்துக் கொண்டிருந்தேன். அவற்றை ஸியாரத் செய்வது உங்களுக்கு நன்மையாக அமைவதற்காக இப்பொழுது ஸியாரத் செய்யுங்களென்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள்' **[*ஆதாரம்: முஸ்லிம்*]**

அடக்கஸ்தலத்தில் நுழையும்போது அங்கு அடக்கம் செய்யப்பட்டிருப் பவர்களுக்கு ஸலாம் சொல்வதும், அவர்களுக்காக துஆ கேட்பதும் ஸுன்னத்தாக்கப்பட்டுள்ளது.

'இங்கு அடக்கஞ் செய்யப்பட்டிருக்கும் கப்றாளிகளான மூமின்களே! அஸ்ஸலாமு அலைக்கும்; இன்ஷா அல்லாஹ் நாங்களும் உங்களுடன் வந்து சேர்ந்து கொள்வோம்; அல்லாஹ் எங்களையும் உங்களையும் (கப்றுடைய வேதனையிலிருந்து) பாதுகாக்க வேண்டுமென அவனிடம் வேண்டுகிறேன்' **[*ஆதாரம்: முஸ்லிம்*]** என்று ஸியாரத்தின் போது ஓதிக் கொள்ளுமாறு நபி ﷺ அவர்கள் தனது தோழர்களுக்குக் கற்றுக் கொடுத்தார்கள்.

இதனையே நாமும் மொழிவது ஸுன்னத்தாகும். இதற்கு மாறாக இன்று நடைமுறையிலுள்ளவை அனைத்தும் ஸுன்னத்துக்கு முரணாகும்.

நபி ﷺ அவர்களின் வாக்குக்கமைவாக கப்றுகளின் மீது அமர்வதோ, அவற்றை மிதிப்பதோ கூடாது.

'கப்றுகளை நோக்கித் தொழாதீர்கள்! அவற்றின் மீது அமராதீர்கள்!'

[ஆதாரம்: முஸ்லிம்]

வணக்கம் என்ற எண்ணத்துடன் கப்றைச் சூழ 'தவாப்' செய்தல் கூடாது.

وَلْيَطَّوَّفُوْا بِالْبَيْتِ الْعَتِيْقِ

**"(ஹஜ்ஜுக்குச் செல்லும் அவர்கள்) புராதன ஆலயத்தையும் 'தவாப்' செய்யவும்" [அல்குர்ஆன்:22:29]** என்று குர்ஆனில் கூறப்படுவதன் மூலம் தவாப் செய்ய தகுதியுள்ள ஒரு ஆலயம் கஃபத்துல்லாஹ் மட்டுமேயாகும் என்று அல்லாஹ் கூறுகிறான். (பைத்துல் முகத்தஸ், மஸ்ஜிதுந் நபவி போன்றவை க்கூட இதற்கு உரித்தானவையல்ல)

குர்ஆனிலிருந்து எதனையும் அடக்கஸ்தலத்தில் ஓதக்கூடாதென பின்வருமாறு நபி ﷺ அவர்கள் கூறுகிறார்கள்.

'நீங்கள் உங்களுடைய வீடுகளை(க் குர்ஆன் ஓதாத) அடக்கஸ் தலங்களாக ஆக்கிக் கொள்ளாதீர்கள்! எந்த வீட்டில் ஸூரத்துல் பகறா ஓதப்படுகிறதோ அந்த வீட்டைவிட்டு ஷைத்தான் விரண்டோடுகிறான்'

[ஆதாரம்: முஸ்லிம்]

அடக்கஸ்தலங்கள் குர்ஆன் ஓதும் இடமல்ல என்பதற்கு இந்த ஹதீஸ் ஒரு சைக்கினையாக அமைந்துள்ளது. கப்றுகளுக்கு அருகில் குர்ஆன் ஓதுவதாக வந்துள்ள ஹதீஸ்கள் ஸஹீஹானவையல்ல.

கப்றுகளில் உள்ளவர்கள் நபிமார்களாகவோ, அல்லது அவுலியாக் களாகவோ இருப்பினும் அவர்களிடம் உதவி தேடுதல் பெரிய ஷிர்க்காகும். அல்குர்ஆன் இதுபற்றிப் பின்வருமாறு கூறுகின்றது.

وَاَنْ اَقِمْ وَجْهَكَ لِلدِّيْنِ حَنِيْفًا ۚ وَلَا تَكُوْنَنَّ مِنَ الْمُشْرِكِيْنَ

وَلَا تَدْعُ مِنْ دُوْنِ اللهِ مَا لَا يَنْفَعُكَ وَ لَا يَضُرُّكَ ۚ فَاِنْ فَعَلْتَ فَاِنَّكَ اِذًا مِّنَ الظّٰلِمِيْنَ

**“நபியே நேரான மார்க்கத்தின் பக்கமே உமது முகத்தைச்சதா திருப்புவாயாக! இணைவைத்து வணங்குவோரில் நீரும் ஒருவராகி விட வேண்டாம். ஆகவே உமக்கு யாதொரு நன்மையும் தீமையும் செய்யச் சக்தியற்ற அல்லாஹ் அல்லாதவற்றை (ஆண்டவன் என) நீர் அழைக்க வேண்டாம். அவ்வாறு செய்தால் அச்சமயமே அக்கிரமக்காரரில் நீரும் ஒருவராகி விடுவீர்” [அல்குர்ஆன்: 10:105,106]**

கப்ரின்மீது மலர்வளையம் சாத்துவது தடை செய்யப்பட வேண்டும். ஏனென்றால், இது கிறிஸ்தவர்களுக்கு ஒப்பான ஒரு செயலாகவும், பிரயோசனம் எதுவுமில்லாமல் பணத்தை வீணாகச் செலவுசெய்வதாகவும் இருக்கின்றது.

இதற்காக செலவு செய்யப்படும் பணம் ஸதகாவுடைய எண்ணத்துடன் ஏழைகளுக்குக் கொடுக்கப்படுமானால், இதன் மூலம் இறந்தவர்கள் பயனடைவதுடன், ஏழைகளும் பயனடைவார்கள்.

ஹதீஸில் வந்துள்ள தடைக்கமைவாக கப்றின் மீது கட்டிடம் அமைப்பதும், அதன்மீது மரணித்தவரின் பெயரோ, அல்லது குர்ஆன் வசனங்கள், ஹதீஸ்கள், கவிகள் போன்றவைகளோ எழுதுவதும் தடை செய்யப்பட்டுள்ளது.

‘கப்றின் மீது சாந்து பூசுவதையும் அதன் மீது கட்டிடம் கட்டுவதையும் நபி ﷺ அவர்கள் தடை செய்துள்ளார்கள்’

[ஆதாரம்: *முஸ்லிம்*]

கப்றுடைய அடையாளத்தை அறிந்து கொள்வதற்காக ஒரு சாணளவு உயர்த்தி வைத்தல் போதுமானது. உத்மான் இப்னு மழ்ஊன் ﵁ அவர்களுடைய கப்றின் மீது, நபியவர்கள் அடையாளத்துக்காக ஒரு கல்லை வைத்து விட்டு ‘எனது சகோதரனுடைய கப்றை அறிந்து கொள்ள அடையாளமிடுகிறேன்’ என்று கூறினார்கள்.

[ஆதாரம்: *அபூதாவூத் (ஹஸன்)*]



# மூதாதையர்களை கண்மூடித்தனமாக பின்பற்றல்

وَاِذَا قِيْلَ لَهُمْ تَعَالَوْا اِلٰى مَاۤ اَنْزَلَ اللّٰهُ وَاِلَى الرَّسُوْلِ قَالُوْا حَسْبُنَا مَا وَجَدْنَا عَلَيْهِ اٰبَآءَنَا ؕ اَوَلَوْ كَانَ اٰبَآؤُهُمْ لَا يَعْلَمُوْنَ شَيْـًٔـا وَّلَا يَهْتَدُوْنَ

**"அல்லாஹ் அருளிய (வேதத்)தின் பாலும் (அவனுடைய) ரஸூலின் பாலும் வாருங்கள் என அவர்களுக்குக் கூறப்பட்டால், 'எங்களுடைய மூதாதைகள் எதன் மீதிருக்கக் கண்டோமோ, அதுவே (நாங்கள் பின்பற்ற) எங்களுக்குப் போதும்' எனக் கூறுகின்றனர். அவர்களுடைய மூதாதைகள் யாதொன்றையும் அறிந்து கொள்ளாமலும் நேரான வழியில் இல்லாமலும் இருந்தாலுமா (அவர்கள் தங்கள் மூதாதைகளைப் பின்பற்றுவார்கள்)?" [அல்குர்ஆன்: 5:104]**

நபி ﷺ அவர்கள் இணைவைப்பவர்களை நோக்கி குர்ஆனின் பக்கமும், அல்லாஹ்வை ஒருமைப்படுத்தி, அவனிடம் மட்டுமே தேவைகளைக் கேட்டுப் பிரார்த்திப்பதின் பக்கமும் வாருங்கள் என அழைத்தபோது 'எமது மூதாதைகளின் நடைமுறை எமக்குப் போதுமானது' என்று அம்மக்கள் சொன்னார்கள். உங்களுடைய மூதாதைகள் அறிவீனர்கள்; எதனையும் அறியாதவர்கள்; நேர்வழியடையாதவர்கள் என்று மேற்காட்டிய வசனத்தின் மூலம் அல்லாஹ் கூறி இணைவைப்பவர்களின் கூற்றை மறுக்கிறான். கண்மூடித்தனமான பின்பற்றலையுடைய முஸ்லிம்களும் மூதாதைகளைப் பின்பற்றுவதில் இதே நிலையில் இருக்கின்றனர். 'அல்லாஹ்வுக்கு 'கை' உண்டு' என்பதை உங்களுடைய மூதாதைகள் அறிந்தவர்களாயிருந்தனரா? என்று ஒரு வகுப்பிலே அறிஞர்களில் ஒருவர் சொல்லக் கேட்டேன்.

அல்லாஹ் ஆதம் ﵇ அவர்களைப் படைத்தது பற்றிச் சொல்லும் போது:

قَالَ يَـٰٓإِبْلِيْسُ مَا مَنَعَكَ اَنْ تَسْجُدَ لِمَا خَلَقْتُ بِيَدَىَّ

**“இப்லீஸே! நானே எனது இருகைகளால் படைத்ததற் (ஆதமுக்)கு நீ சிரம் பணியாது உன்னை தடை செய்ததென்ன? [அல்குர்ஆன்:38:75]** என்று கூறுகிறான்.

**‘எனது இருகைகள்’** என்ற மேற்கண்ட வசனத்தில் கூறப்பட்டுள்ளதை, மூதாதைகளுக்கு முக்கியத்துவம் அளிக்கும் முஸ்லிம்கள் மறுக்கின்றனர். இங்கு தெளிவாகக் கூற்றப்பட்டுள்ள குர்ஆன் வசனத்துக்குத் தவறான கருத்து கொடுத்து, மூதாதைகளின் கொள்கையையே ஏற்றுக் கொள்கின்றனர்.

அல்லாஹ் தனது திருமறையில்:

لَيْسَ كَمِثْلِهٖ شَىْءٌ وَهُوَ السَّمِيْعُ الْبَصِيْرُ

**“அவனுக்கு ஒப்பானது ஒன்றுமில்லை. அவன் (யாவற்றையும்) செவியுறு வோனாகவும், உற்று நோக்கினவனாகவும் இருக்கின்றான்” [அல்குர்ஆன்: 42:11]**

என்று கூறும் ஆதாரத்துக்கமைவாக அல்லாஹ்வுடைய கையை அவனுடைய படைப்புகளுடைய கையுடன் ஒப்பிடக்கூடாது.

கண்மூடித்தனமான பின்பற்றலையுடைய இக்கால முஸ்லிம்கள் வெறும் யூகங்களைக் கொண்டு கூறப்பட்டுள்ளவற்றைத் தமது மார்க்கமாக ஏற்றுக் கொள்கின்றனர். அவர்களுடைய நம்பிக்கை தவறானது என்பதற்குத் தெளிவான குர்ஆன் வசனங்களையும் ஸஹீஹான ஹதீஸ் களையும் ஆதாரங்களாகக் காட்டினாலும் அவற்றை மறுத்து தமது முன்னோர்களின் வழிமுறையே சரியானதெனப் பிடிவாதமாகக் கூறுகின்றனர். இந்த முஸ்லிம்களுக்கும் நபி ﷺ அவர்களை எதிர்த்த மக்களுக்குமிடையில் வித்தியாசமெதுவுமுண்டா?

இங்கு தீங்கு ஏற்படக்கூடிய மற்றுமொரு ‘தக்லீத்’ உண்டு. பாவமான கருமங்களைச் செய்வதிலும், (பெண்கள் திரையின்றி) வெளியில்

செல்வதிலும், இறுக்கமான ஆடைகள் அணிவதிலும் காஃபிர்களைத் தக்லீத் செய்வதாக அது இருக்கின்றது. நமக்கு பிரயோசனத்தை ஏற்படுத்தக்கூடிய நவீன கண்டுபிடிப்புகளில் மட்டும் அந்த காஃபிர்களைப் பின்பற்று கின்றவர்களாக நாம் இருந்து கொள்வது முறையானதும் போது மானதுமாகும்.

'அல்லாஹ் சொன்னான்; அவனுடைய ரஸூல் சொன்னார்கள்' என்று சொல்லும்போது, அதிகமான முஸ்லிம்கள் 'எங்களது ஷைக் (அதற்கு மாறாக) சொன்னார்கள்' என்று கூறி, அல்லாஹ்வினதும் அவனுடைய ரஸூலினதும் சொல்லுக்கு மதிப்பு அளிக்காதிருக்கின்றனர்.

يَآيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا لَا تُقَدِّمُوْا بَيْنَ يَدَىِ اللهِ وَرَسُوْلِهٖ

**"மூமின்களே! அல்லாஹ்வுக்கும் அவனுடைய ரஸூலுக்கும் முன்பாக(ப் பேசுவதற்கு) நீங்கள் முந்திக் கொள்ளாதீர்கள்!" [அல்குர்ஆன்: 49:01]** என்று அல்லாஹ் கூறுவதை இவர்கள் குர்ஆனில் ஓதவில்லையா? அதாவது 'அல்லாஹ்வுடைய சொல்லையும் அவனது ரஸூலுடைய சொல்லையும் விட வேறெவருடைய சொல்லையும் முற்படுத்தக் கூடாது' என்பதே மேற்படி வசனத்தின் அர்த்தமாகும்.

இப்னு அப்பாஸ் ﵄ அவர்களுடைய ஓர் எச்சரிக்கை இவ்வசனத் துக்குப் பொருத்தமாக அமைகின்றது.

'வானத்திலிருந்து உங்களுக்குக் கல்மாரி பொழியுமோ என நான் அஞ்சுகிறேன். நானோ 'அல்லாஹ்வுடைய ரஸூல் ﷺ அவர்கள் சொன்னார்கள்' என்று சொல்கிறேன். நீங்கள் அபூபக்கர் சொன்னார்; உமர் சொன்னார் என்று அதற்கு (மாறாகச்) சொல்கின்றீர்கள்' என்று மக்களை நோக்கி இப்னு அப்பாஸ் ﵄ அவர்கள் எச்சரித்தார்கள்.

தங்களுடைய தலைவர்களின் பேச்சுகளை ஆதாரமாகக்கொள் வோருக்கு, ஒரு கவிஞர் பின்வருமாறு எச்சரிக்கின்றார்.

'அல்லாஹ் சொன்னான்; அவனுடைய ரஸூல் ﷺ அவர்கள் சொன்னார்கள்' என்று உனக்கு நான் சொல்லுகிறேன். நீரோ நிச்சயமாக எனது ஷைக் இதனைச் சொன்னார்' எனப் பதிலளிக்கின்றாய்.



# உண்மையை மறுக்காதீர்கள் (இறுதிப் பகுதி)

அல்லாஹ் மனிதர்களுக்குத் தனது ரஸூல்மார்களை அனுப்பினான்; அல்லாஹ்வுக்கு மட்டுமே வணக்கம் செலுத்தி, அவனை ஒருமைப் படுத்துவதின்பால் மக்களை அழைக்குமாறு அவர்களுக்கு உத்தரவுமிட்டான். எனினும் அதிகமான சமுதாயங்கள், தங்கள்பால் அனுப்பப்பட்ட தூதர்களைப் பொய்யாக்கினார்கள்; அம்மக்கள் தாம் அழைக்கப்பட்ட தௌஹீதுக்கும் மாறு செய்தார்கள். அவர்களுடைய முடிவு அழிவாகவே இருந்தது.

'எவனுடைய உள்ளத்தில் ஒரு கடுகளவேனும் பெருமை உண்டோ, அவன் சுவர்க்கம் பிரவேசிக்க மாட்டான்' என்று நபி ﷺ அவர்கள் கூறிவிட்டு, தொடர்ந்து பின்வருமாறு கூறினார்கள். 'பெருமை என்பது உண்மைக்கு மாறானதும், மனிதர்களுக்கு இழிவானதுமாகும்'

[ஆதாரம்: *முஸ்லிம்*]

இதன்படி நிராகரிப்பவர்களுக்கு ஒப்பாகக் கூடியதும், சுவர்க்கம் பிரவேசிக்கத் தடையாயிருப்பதுமான பெருமையை விட்டொழிப்பதும், உண்மையையும், நல்லுபதேசத்தையும் மறுக்காமலிருப்பதும் ஒவ்வொரு மூமினின் மீதும் கடமையாகும். அறிவு என்பது ஒரு மூமினுடைய தவறிப்போன பொருள்; அதனை எவ்விடத்தில் கண்டு கொள்கிறானோ, அப்பொழுது அதனைப் பெற்றுக் கொள்வான்.

இதனால் அறிவு என்பது எந்த மனிதனிடமிருந்து பெற்றுக் கொண்டாலும், அதனை ஏற்றுக்கொள்வது கடமையாகின்றது. ஷைத்தானிட மிருந்து கிடைத்தாலும் உண்மையை ஏற்றுக் கொண்டேயாக வேண்டும். பின்வரும் சம்பவம் இதற்கு ஆதாரமாக அமைகின்றது. 'நபி ﷺ அவர்கள்

அபூஹுரைரா ﵁ அவர்களை 'பைதுல்மால்' பொதுநிதிக்குப் பாது காவலராக நியமித்தார்கள். ஒரு தினம் அதிலிருந்து திருடுவதற்கு ஒரு திருடன் வந்தான். உடனே அபூ ஹுரைரா ﵁ அவர்கள் அவனைப் பிடித்துக்கொண்டார்கள். திருடன் தனது ஏழ்மையையும், இயலாமையையும் பற்றிச் சொன்னவனாகக் கெஞ்ச ஆரம்பித்தான். இதனால் அவனை விட்டு விட்டார்கள். இரண்டாம் முறை மீண்டும் வந்தான்; அப்பொழுதும் அவனைப் பிடிக்கவே முன்பு போலவே கெஞ்சினான். தொடர்ந்து மூன்றாம் முறையும் வந்தான். அப்பொழுது அவனைப் பிடித்துக் கொண்டு 'உன்னை நபி ﷺ அவர்களிடம் எடுத்துச் செல்லப் போகிறேன்' என்று அபூஹுரைரா ﵁ அவர்கள் கூறினார்கள்.

அப்பொழுது அவன் 'என்னை விட்டுவிடு! குர்ஆனிலிருந்து ஒரு வசனத்தை உமக்குக் கற்றுத் தருகிறேன். அதனை நீர் ஓதி வந்தால் ஷைத்தான் உம்மிடம் நெருங்க மாட்டான்' என்று கூறினான். அப்பொழுது அபூஹுரைரா ﵁ அவ்வசனம் யாது என்று வினவினார்கள். அதற்கவன் அதுதான் 'ஆயத்துல் குர்ஸி' [அல்குர்ஆன்: 2: 255] என்று கூறினான். அப்பொழுது அபூஹுரைரா ﵁ அவர்கள் அவனை விட்டு விட்டார்கள்.

அபூஹுரைரா ﵁ அவர்கள் தான் கண்டதை நபி ﷺ அவர்களிடம் சொன்னார்கள். அப்பொழுது நபியவர்கள் 'உம்முடன் பேசியது யாரென நீர் அறிவீரா? அவன்தான் ஷைத்தான்; அவன் உம்மிடத்தில் சொன்னது உண்மை; ஆனால் அவன் பொய்யனாவான்' என்று கூறினார்கள்.

**[ஆதாரம்: புகாரி]**

எல்லாம் வல்ல அல்லாஹ்விடம் அவனுடைய திருப்பெயர்களின் மூலம் இறைஞ்சுவோமாக! அவன் நமக்கும் அவனுக்கும் நாம் மாறு செய்வதற்கும் இடையில் அரணாக இருக்கக்கூடிய இறையச்சத்தையும், அவனுடைய சுவனத்தின் பால் சேர்த்து வைக்கக்கூடிய வழிபாட்டையும் தருவானாக!நம்முடைய பாவங்களையும், நம்முடைய காரியங்களில் நாம்

வரம்பு மீறுவதையும் அவன் மன்னித்தருள்வானாக! அவன் விலக்கிய விலக்கல்களை விடுத்து அவன் ஹலாலாக்கியவற்றை மட்டும், அவன் அல்லாதவர்களை விடுத்து அவனுடைய அருளை மட்டும் நமக்குப் போதுமாக்கித் தருவானாக! நம்முடைய பாவங்களைக் கழுவி, நம்முடைய தவ்பாவை ஏற்றுக் கொள்வானாக! திண்ணமாக அவன் யாவற்றையும் செவியேற்பவனும் (அழைப்பவரின் அழைப்புக்கு) பதில் தருபவனும் ஆவான். மேலும் நபிகள் நாயகம் முஹம்மத் ﷺ அவர்கள் மீதும் அவர்களுடைய குடும்பத்தினர் மற்றும் தோழர்கள் அனைவர் மீதும் அவனுடைய கருணையும் சாந்தியும் உண்டாவதாக! எல்லாப் புகழும் அகில உலகத்தின் அதிபதியாகிய அல்லாஹ்வுக்கே!

அல்லாஹ் ஸுப்ஹானஹுவதஆலா அவனது சன்மார்க்கம் ஸ்திரமடைய ஒத்தாசை புரியுமாறும், அவனது திருக்கலிமாவை உயர்வாக்கி வைக்குமாறும், எங்கள் கருமங்களுக்குப் பொறுப்பாயுள்ளவர்களைச் சீர்திருத்துமாறும், அன்னார் அனுசரணையுடன் தீய விளைவுகளை அழித் தொழித்து விடுமாறும், சத்திய வழியை நிலைநாட்டி, அசத்திய வழியை நிலைகுலைக்க அன்னாருக்கு ஊக்கமும் உதவியுமளிக்குமாறும், எங்களுக்கும், உங்களுக்கும் ஏனைய முஸ்லிம்களுக்கும், நாடும் நாட்டு மக்களும் சீரும் சிறப்பும் பெற்று மகோன்னத வாழ்வு வாழ நல்லுதவி புரியுமாறும் அல்லாஹ்விடம் இரந்து கேட்கிறோம். நிச்சயமாக அவனே சகல வஸ்துக்கள் மீதும் சக்தி பெற்றவன். இறைஞ்சுவோருக்கு இடுக்கண் துடைக்க அவனே அருகதையுள்ளவன்.

**ஹஸ்புனல்லாஹு வ நிஃமல் வகீல் லாஹவ்ல வலா குவ்வத இல்லா பில்லாஹில் அலீயுல் அளீம். வஸல்லல்லாஹு வஸல்லம வபாறக அலா அப்திஹி வறசூலிஹி முஹம்மதின் வஆலிஹீ வஸஹ்பிஹீ வஸல்லம். அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹி வபரகாதுஹு. வஸ்ஸலாம்.**



இந்நூல் முக்கியமானதோர் ஆய்வு நூலாகும், பல பிரிவுகள் கொண்டதாகவும் அமைந்துள்ளது. பரிசுத்தமான தௌஹீ(ஏகத்துவத்)தின் அடிப்படைக் கொள்கையின் பக்கமும், உலகில் பல பாகங்களிலும் வாழும் முஸ்லிம்களில் அதிகமானவர்களிடம் பரவியிருக்கும் ஷிர்க்(இணைவைப்பதி)லிருந்து அவர்களைத் தூரப்படுத்துவதாகவும் இந்நூல் அழைப்பு விடுக்கின்றது. இந்த ஷிர்க் தான் கடந்த கால சமுதாயங்களின் அழிவுக்கு காரணமாயிருந்த்து..

இந்நூலிலுள்ள ஆய்வுகளும், அதனுல் அமைந்துள்ள ஒவ்வொரு தலைப்புகளும் நபி ﷺ அவர்களுடைய ஹதீஸ்களின் அடிப்படையில் செயல்பட்டு, வெற்றி பெற்ற ஒரு கூட்டத்தாரின் அடிப்படைக் கொள்கையைத் தெளிவு படுத்துவதாக அமைந்துள்ளன.